# திரு. வி. கலியாணசுந்தர முதலியார்




தை. ஆ. கனகசபாபதி முதலியார்
இயற்றியது

அல்லயன்ஸ் கம்பெனி
மயிலாப்பூர், சென்னை

1943



விலை ரூ. 2-0-0

# பொருளடக்கம்

# முகவுரை

அறிஞர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரை யான் சுமார் இருபது ஆண்டுகளாய் அறிவேன். இவ ரொடு நெருங்கிப் பழகும் வாய்ப்பினைக் கடந்த பத்து ஆண்டுகள் எனக்கு வழங்கின. இவ்வாய்ப்புச் சுந்தர னார்பால் இலகுறும் நல்லியல் பலவற்றை எனக்கு விளக்கிற்று. அவற்றுள் இவர்தம் தூய வாழ்வும், தன்னலமற்ற நிலையும், அமைதிக் கோலமும் இவர் வாழ்க்கைப்பேற்றை எழுதுமாறு என்னைத் தூண்டின. அதனால், யான் சிற்சில குறிப்புக்கள் எழுதி வைத் திருந்தேன். அவற்றினைத் தொடர்புபடுத்தி நூல் வடிவில் இவர்தம் மணிவிழாப்போது வெளியிடுமாறு அன்பர் என்னைப் பெரிதும் தூண்டினர். அத்தூண்டு தலாலும், திரு. வி. க. வாழ்க்கை வரலாற்று ஆராய்ச் சிக் குறிப்பு மாணவர்க்குப் பெரிதும் பயன்படும் என்னும் எண்ணத்தாலும் யான் இந்நூலினை இன்று வெளியிடுகின்றேன்.

அன்பர் திரு. வி. க.வின் அனுமதிபெற்று இந் நூலுள் அவர் உரைகள் பலவற்றை யான் சேர்த் துள்ளேன். அறிஞர் பலர் உரைகளும் இடையிடையே இடம் நோக்கிச் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. அனை வர்க்கும் என் வணக்கம் உரியதாகுக.

அறிஞர் வாழ்க! தமிழ் வாழ்க! தமிழ் வெல்க!

சென்னை,
5-9-'43

தை. ஆ. க.

# திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

## 1. தோற்றுவாய்

'எவ்வுயிர்க்கும் அன்பாயிரு' எனவும், 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' எனவும் எழுந்த பேருரைகள் வழிநின்று வாழ்வு நடாத்தி வரும் பேரறிஞர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரை இத்தமிழகத்து அறியாதார் இலர். இவர்தம் தேச சேவையை, பேசும் ஆற்றலை, நட்பின் நலத்தை, போற்றாதார் யார்? இவர் எழுதிவரும் உயிரோடியங்கும் உரைநடை எக்காலத்தவர்க்கும் இன்பம் ஊட்டுவதொன்றாம். உள்ளத் தூண்டுதலால் ஊற்றென எழும் இவர்தம் கருத்துக்களை அறிதற்குப் பெருந்தமிழ்ப் புலமை வேண்டுவதில்லை. ஆனால், இவர் அமைக்கும் வாக்கிய நயத்தினையும் சொற்போக்கினையும் சுவைத்தற்குரிய தமிழ்ப் பயிற்சி இன்றியமையாததே. *இந்தியத் தலைவரின் வரலாறும் இறப்பும், இவர்தம் மைந்தர் பிரிவும், 'தமிழ்

---

* பிற்சேர்வு - 'உயிரியங்கு உரைநடை.'

மொழியிலும் இத்தகைய உரைநடை எழுதுதல் இயலுமோ!' எனப் பலரும் வியப்புறும் நடையை இவர்பால் தோற்றுவித்தன.

முதலியார் உரைநடை ஆசிரியராயும், கவிஞ ராயும், ஆராய்ச்சியாளராயும், ஓவியராயும் இற்றை நாள் விளங்குகின்றார். வருணங்கொண்டு ஓவியம் வரைவாரும், கருவிகள்கொண்டு கல் மரம் முதலிய வற்றில் உருவங்கள் செதுக்குவாருமே ஓவியர் எனக் கலையுணர்வற்றார் கருதுவர். ஓவிய உணர்வு பிறப்பிலேயே அமையப்பெற்ற சிலர்க்கு ஓவியப் பயிற்சிக்குரிய வாய்ப்பு வாய்க்காமற் போகின்றது. அன்னார் உணர்வு சொல்லோவியத்தானும் பிறவற் றானும் வெளிப்படும். ஓவியங்களைக்கண்டு அவற்றின் இயல்களை உன்னி நோக்கிக் கூறவல்லார் எல்லாம் ஓவியரே. 'கவிகளைப் படித்து அவற்றின் சுவை அறிவாரெல்லாம் கவிஞர்' எனக் கார்லைல் கூறி இருப்பது ஈண்டுக் கருதத்தக்கது. *ஓவியங்களைப் பற்றி முதலியார் எழுதியுள்ள மதிப்புரைகளாலும், பாட்டுக்களில் அமைந்துள்ள ஓவியங்களை மாந் தர்க்கு எடுத்துக்காட்டுகின்ற நிலையாலும் நாம் இவரது ஓவிய உணர்வை அறியலாம்.

அறிஞர் முதலியார் தமிழ் மொழியாலும் அர சியற்செய்திகளைத் தெளிவாகவும் திறமையாகவும் கூறல் இயலும் என்பதை முதன்முதல் தமிழர்க்கும் பிறர்க்கும் காட்டியவராவர். திரு. B. P. வாடியா

---

* பிற்சேர்வு - 'ஓவியம்'

வுடன் இவர் தொழிலாளர்க்குச் செய்த தொண்டு மிகப் பெரிது. இவர் அரசியல் போராட்டத்தில் தமக்கு உண்டாகும் மாசினைப் பண்டைக் காவியங் களாம் தூய நீரால் போக்கிக்கொள்கின்றார். அதனாற்றான் அரசியல்வாதிகளிடம் காணப்படும் பல குறைகள் இவர்பால் இல்லை. இக்கருத்தின் உண்மையைச் சிறிது ஊன்றி நோக்குவார் காணல் இயலும்.

அரசியல் போராட்டத்தில் பன்னாள் கழிந்தமை குறித்துச் சுந்தரனார் வருந்தாமலும் இல்லை. இதனை இவர் பாடிய கீழ்வரும் தொடர் நன்கு உணர்த்தும் :

**'சூதுவழி அரசியலில் தொலைத்துவிட்டேன் காலம்.'**

(திருமால் அருள்வேட்டல், திருவரங்கம் 6, செய். 9.)

இங்ஙனம் வெறுக்கின்ற இவர் பின்னும் தொடர்ந்து அரசியல் செய்திகளில் மனம் செலுத் தற்குக் காரணம் இவர்க்கு மக்கள்மீதுள்ள அளவு கடந்த அன்பே.

இலக்கியம் உணர்ந்த அறிஞரோடு இவர் பேசுகின்ற காலத்தில் இவரை அரசியல்வாதி என எவரும் கருதார். அரசியல்வாதிகளோடு பேசுகின்ற காலத்தில் தாம் கலைஞர் என்பதை இவர் முற்றிலும் மறந்தேவிடுகின்றார்.

## 2. வரலாற்றுச் சுருக்கம்

கலியாணசுந்தரனார் தந்தையார் திரு. திருவாரூர் - விருத்தாசல முதலியார் இலக்கியப் பயிற்சியோடு சங்கீதப் பயிற்சியும் பெற்றவர். ஆசிரியத் தொழிலும் வாணிபமும் அவர் வாழ்வில் இடம் பெற்றன. அவர் தம்வாழ்நாளில் நோய்வாய்ப்பட்டதில்லை என்றும், பொய் பேசியதில்லை என்றும் மைந்தர் கூறுகின்றனர். திரு. விருத்தாசல முதலியார் திருமதி பச்சையம்மாள் என்பவரை மணந்து மூன்று மைந்தரையும் ஒரு மகளையும் அடைந்தனர்; அவ்வம்மையார் இறந்த பிறகு திருமதி சின்னம்மாள் என்பவரை மணந்து நான்கு மைந்தரையும் நான்கு பெண்களையும் அடைந்தார். அப்பன்னிருவருள் இன்று தமிழுலகம் அறியும் நிலையில் இருப்பவர் திருவாளர் திரு. வி. உலகநாத முதலியாரும் திரு. வி. கலியாணசுந்தர முதலியாருமேயாவர்.

திரு. விருத்தாசல முதலியார் சென்னைக்குச் சுமார் பத்து மைல் தூரத்திலுள்ள *துள்ளம் என்னும் கிராமத்தில் வியாபார சம்பந்தமாய் இராயப்பேட்டையிலிருந்து சென்று சில ஆண்டுகள் தங்கினார். அவ்விடத்திலேதான் நம் சரித்திரத் தலைவர் 1883-ஆம் ஆண்டு தோன்றி வளர்ந்து வருவாராயினர்.

---

* பிற்சேர்வு - 'துள்ளத்தில் மூன்று நாழிகை.'

இவர் சுமார் ஆறு வயது சிறுவராய் இருந்த பொழுது ஒரு நாள் தம் நண்பர் சிலருடன் வீதியில் விளையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது அவ் வழியாக அமீனு முனிசாமிப் பிள்ளை வந்தார். அவரைக் கண்டவுடன் பிள்ளைகளெல்லோரும் ஒளிந்துகொள்ள ஓடினர். அழுகின்ற பிள்ளைகளின் அழுகையை நிறுத்த ஆங்கிலேய மக்கள் ஒருகால் நெப்போலியன் பெயரை வழங்கி வந்தமைபோல, அவ்வூர் மக்கள் அமீனு முனிசாமிப் பிள்ளையின் பெயரைப் பயன்படுத்தி வந்தார்கள். பெரியோர் களும் அவரைக் கண்டுவிட்டால் இருந்த இடத்தை விட்டெழுந்து அவர் போகின்ற வரையிலும் பணிந்து நிற்பர். அவ்வழியாக வருவோர் அவரைக் கண்டுவிட்டால் பணிவாக ஒருபுறமாய் ஒதுங்கி நிற்பர். பெண்கள் நிலையைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ!

அவர் பெரும்பாலும் சலங்கைகள் கட்டப் பெற்ற இரட்டை மாட்டுக் கூண்டு வண்டியில் வருதல் வழக்கம். அவர் வருகை கலெக்டர் வருகையைவிடச் சிறப்பாய்க் கருதப்பெற்று வந் தது. அவரைக் கண்டு தம் நண்பர்கள் ஓடத் தொடங்கியவுடன் நம் முதலியார் அவர்களை நோக்கி, "ஏன் இப்படிப் பயந்து ஓடுகிறீர்கள்? அமீனு தலையில் கொம்பு முளைத்தவரோ?" என்று கேட்டார். அச்சொற்கள் திரு. அமீனு முனிசாமிப் பிள்ளையின் காதில் விழுந்தன.

உடனே அவர் வண்டியிலிருந்து கீழ் இறங்கி முதலியாரைக் கையில் பற்றிக்கொண்டு இவர் தந்தையார் யார் என்பதை வினவித் தெரிந்து கொண்டார். பின் அவர் திரு. விருத்தாசல முதலியாரைக் கண்டு அவரிடத்து நடந்ததைக் கூறினர் ; பின்பு அவரை நோக்கி, "நீர் இச்சிறுவனைத் தகுந்த முறையில் வளர்த்தல் வேண்டும். இவன் பிற்காலத்தில் பேரறிஞனாய் விளங்கக் கூடியவன்" எனக் கூறினர். திரு. அமீனா முனிசாமிப் பிள்ளையின் சொற்கள் திரு. விருத்தாசல முதலியாரின் மனத்தில் என்றும் நின்று முதலியாரின் படிப்பு முறையில் சில மாற்றங்களைச் செய்தன.

இனி முதலியார் ஏழு வயது சிறுவராய் இருந்த பொழுது நிகழ்த்திய செயல் ஒன்றினை ஈண்டுக் காண்போம் : ஒரு நாள் காற்ருடியொன்று இவர் வீட்டின் புறக்கடையிலிருந்த ஒரு பெரிய கொன்றை மரத்தின் மிக உயர்ந்த கிளையில் சிக்கிக் கொண்டது. அதனை எடுத்துக்கொண்டு போக வந்தவர் முயற்சி செய்தும் பயனின்றிச் சென்றனர். பலர் முயற்சி செய்தும் வாளா சென்றமையைப் பார்த்துக்கொண்டிருந்த சுந்தரனர் தாம் அதனை எவ்வாறேனும் எடுக்கவேண்டுமென உறுதிகொண்டார் ; எப்படியோ மரத்தின் உச்சியையடைந்து காற்ருடி நூலைப் பற்றும் முயற்சியில் நின்ருர்.

இதற்குள் இவர் அன்னையார் மரத்தின்மேல் இவர் இருப்பதைக் கண்டுவிட்டார் ; மைந்தர்மேல் இருந்த அன்பால், இவர்க்குக் கேடு உண்டாகலாம்

என்ற எண்ணத்தால், 'அடே!' என்று கூக்குர லிட்டார். அக்குரல் முதலியார் காதில் விழுந்தது. அது தம் தாயார் குரல் என்பதை நன்கு இவர் உணர்ந்தார். இந்நிகழ்ச்சியினை எனக்குச் சொல்லிக் கொண்டு வந்தபொழுது முதலியார், "நம் பெண் கள் அறிவின்றிக் குழந்தைகளை முதுகில் அறையும் வழக்கம் உமக்குத் தெரியுமல்லவா! அதனால் என் முதுகில் ஓர் அறை வீழ்ந்ததாய் எண்ணி யான் பற்றிக்கொண்டிருந்த கிளையை விட்டுவிட்டேன்" என்றார். பின்பு முதலியார் பல கிளைகளின்மேல் விழுந்து விழுந்து, இறுதியில் தரையில் விழுந்தார்.

இவர் விழுந்தபொழுது மரத்தில் முறிந்திருந்த கிளை ஒன்றின் கூரான பாகம் இவரது விலாப் பக் கத்தில் ஒரு பெரிய காயத்தை உண்டாக்கிற்று. அதனை இவர் அறியவில்லை. அன்னையார் அடித்து விடுவாரோ என்ற எண்ணமே இவர் மனத்தில் நின்று நிலவிற்று. அதனால், இவர் மரத்திலிருந்து கீழ் விழுந்ததும் பக்கத்திலிருந்த ஒரு பெரிய குழியில் ஓடி ஒளிந்துகொண்டார். காயத்தி லிருந்து இரத்தம் பெருகிற்று. அதனைக் கண்டதும் இளைஞர் தம்மை மறந்தார். இதற்குள் தாயாரும் அங்கு வந்து மகனார் நிலையினைக் கண்டு வருந்தி, அண்டையிலிருந்தவரைக் கூவி அழைத்தார். அனை வரும் வந்து இவர் நிலையினைக் கண்டு வருந்தினர். பின்னர் நாட்டு வைத்தியர் ஒருவர் உதவியால் அக் காயம் ஆற்றப்பெற்றது. அக்காயத்தின் வடுவை இன்றும் நாம் முதலியார் உடலில் காணலாம்.

திரு. விருத்தாசல முதலியார் தம் மைந்தர்க்குச் சிறந்த கல்வி அளிக்க வேண்டுமென்ற எண்ணத்தால் மீண்டும் இராயப்பேட்டையைத் தமக்கு இருப்பிடமாகக் கொண்டார்.

கலியாணசுந்தரனார் நான்காம் வகுப்பு வரையிலும் ஒரு சிறு பள்ளிக்கூடத்தில் படித்தார் ; பின்னர் வெஸ்லி கலாசாலைக்கு அனுப்பப்பட்டார். அப்பொழுதிருந்த இவர் உடல் நிலையினை நோக்கி ஒரு விதக் கடுமையான எண்ணெய் இவர்க்குக் கொடுக்கப்பட்டது. முதலியார் எண்ணெயின் தன்மையை உணராராய்ப் பள்ளிச்சாலையில் விற்று வந்த சில தின்பண்டங்களை வாங்கி உண்டார். அதனால் இவர் கைகால்கள் முடக்கிக்கொண்டன. வைத்தியர்கள் இவரைப் பழைய நிலைக்குக் கொண்டுவரப் பெரிதும் முயன்றார்கள். எனினும் பெரும்பயன் உண்டாகவில்லை. அதனால் அவர்கள் இளைஞரைத் தம் மனம் போல ஓடி ஆடி விளையாடும்படி விடல்வேண்டுமெனக் கூறினார்கள். ஆதலின், பெற்றோர் மைந்தரை இயற்கை அன்னையின்பால் ஒப்படைத்தனர். பள்ளிக்கூட வாழ்வும் சென்றது.

முதலியார் நாளுக்கு நாள் சிறிது சிறிதாக நடக்கும் ஆற்றலைப்பெற்று வீட்டிற்கு அருகிலிருந்த சிலம்பக் கூடங்களுக்குச் செல்வதும் வருவதுமாய் இருந்தனர். ஆண்டுகள் சில சென்றன. குதிரை ஓட்டம் முதலியவற்றில் அன்பர் மனம் பெரிதும் நாடிற்று. கெட்ட பழக்கங்கள் இவரைப் பற்றவில்லை. எனினும், உடன் பிறப்பாளருள் சிலர்

சிலம்பக்கூட உறவு இவரைக் கெடுத்துவிடுமோ என அஞ்சினர். இறைவன் திருவுள்ளத்தை அறிவார் யாரே! கொடுப்பது போலக் கொடுத்துக் கெடுப்பானும், அழிப்பது போல அழித்து ஆக்குவானும் அவனே அலனே! முதலியாருக்குச் சிலம்பப் பயிற்சியும் அவ்வித மக்கள் உறவும் இருத்தல் வேண்டுமென இறைவன் எண்ணினன் போலும்!

ஆருத்திரா நாட்களில் இராயப்பேட்டையில் நடராஜப் பெருமான் உருவச்சிலை வீதிவலம் வருவது வழக்கம். ஓராண்டு அப்பெருமான் வீதிவலம் வரும்பொழுது பிரார்த்தனை காரணமாக ஒரு வீட்டின் முன் தேங்காய்கள் பல சூறை விடப் பெற்றன. அன்று அங்கிருந்த சிறுவர் சிலர் அத் தேங்காய்களில் பெரும்பகுதியை எடுப்பவனே பலசாலி எனத் தமக்குள் முடிவுசெய்துகொண்டனர். அவருள் நம் முதலியாரும் ஒருவர். அப்பொழுது இவருக்கு வயது பதின்மூன்று. முதலியார் வெகு திறமையுடன், உடைபெறும் தேங்காய்களில் பெரும் பகுதியை எடுத்து வந்தார். சூறைவிட்டவர் இவர் திறமை கண்டு வியவாது பொறாமையுற்றுச் சிறிது தந்திரத்தினல் இவர் கைம்மேல் தேங்காய் விழுமாறு செய்தார். அதனல், முதலியார் விரல்களில் ஒன்று சிதைவுண்டு இரத்தம் பெருகிற்று. இவர் ஆங்கில வைத்தியசாலைக்குச் சென்றார். வைத்தியர், 'நசுக்குண்ட விரலை எடுத்துவிட வேண்டும்' என்று கூறினர். சுந்தரனர்க்கு ஒரு விரலை இழக்க மனமில்லை.

அதனால், இவர் வைத்தியர் உள் சென்றதும் பிறர் அறியாவண்ணம் வெளிவந்து தமக்கு வேண்டிய தமிழ் வைத்தியர் ஒருவரிடத்து நடந்ததைக் கூறினார். அவர் சில பச்சிலைகளை அரைத்து அக்காயத்தின்மேல் வைத்துக் கட்டினார். அதற்குள் திரு. விருத்தாசல முதலியாரும் மைந்தரைத் தேடிக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தார். அக்காயம் இலைச்சாற்றினால் ஆறும் என்று திரு. விருத்தாசல முதலியாருக்கு வைத்தியர் உறுதி கூறி இருவரையும் வீட்டிற்கு அனுப்பினார். சில நாட்களுள் அக்காயம் ஆறிற்று. இந்நிலையில் நான்கு ஆண்டுகள் கழிந்தன.

கலியாணசுந்தரனார் திரும்பவும் பள்ளிக்கூட வாழ்வை ஏற்றார்; நான்காம் வகுப்புமுதல் ஆறும் பாரம் வரையிலும் படிப்பில் சிறந்து விளங்குவார்க்கு அன்று கிறித்தவ சங்கத்தார் அளித்துவந்த பள்ளிக்கூடத்திற்குரிய வெகுமானச் சம்பளத்தைப் பெற்றனர்; ஆண்டுதோறும் பல பரிசுகளும் பெற்று வந்தனர்.

ஐந்தாம் பாரத்தில் திரு. வி. க. படித்துக்கொண்டிருந்த பொழுது வெஸ்லி கலாசாலையில் தமிழ் ஆசிரியராயிருந்த திரு. கதிரைவேற்பிள்ளையோடு பழகும் வாய்ப்பு இவர்க்குக் கிடைத்தது. அவர் உறவால் முதலியாருக்கிருந்த தமிழ் விருப்புக் கொழுந்துவிட்டு எரியலாயிற்று. அந்நாள் திரு. பிள்ளை மதவாதிகளோடு தொடுத்து வந்த மதப்போரிலும் வழக்குக்களிலும் முதலியார் மனம் சென்றது. ஆருவது பாரத்தில் முதலியார் படித்துக்

கொண்டிருந்த பொழுது இவர் மனம் பெரிதும் வழக்குக்களில் படிந்தமையால் பள்ளிக்கூடப் படிப்புப் போயிற்று. 1904-ஆம் ஆண்டோடு மாணவ வாழ்வும் முடிந்தது.

கலியாணசுந்தர முதலியார், திரு. உலகநாத முதலியார், திரு. சிவசங்கர முதலியார் முதலியோர் சென்னை இராயப்பேட்டை, முத்துமுதலி வீதியிலுள்ள ஓர் இல்லத்தில் திரு. கதிரைவேற்பிள்ளையைக்கொண்டு, 'ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபை'யைத் தோற்றுவித்தனர். அச்சபைக்குத் திரு. கதிரைவேற்பிள்ளை தலைவராய் அமர்ந்தார்.

அங்கு நாடோறும் பலர் ஒன்று சேர்ந்து தேவார பாராயணம் செய்தல் வழக்கம். முதலியாரும் அவர் நண்பர் சிலரும் குறிப்பிட்ட காலத்திற்கு முன் வந்து பஜனை அறையில் பேசிக்கொண்டிருப்பர்; பல சமயங்களில் தின்பண்டம் வாங்கிக் கொண்டுவந்து உண்பர்; சிற்சில பொழுது பண்டங்களைக் கட்டிக்கொண்டுவந்த இலைகளை எடுத்து வெளியில் போட மறந்துவிடுவர். அவ்விலைகளைப் பலமுறை கண்ணுற்ற சில பெரியோர், "குறிப்பிட்ட காலத்திற்கு முன் அறையின் கதவு திறக்கப் படலாகாது" என விதித்துச் சாவியை ஒருவர்பால் ஒப்படைத்தனர். இச்செயலை முதலியார் விரும்பவில்லை. அதனால், இவர் ஒரு தந்திரத்தினால் அவர்களைத் திருத்த எண்ணினார். ஒரு நாள் இவர் ஒரு திறவுகோல் கொண்டு அறையின் பூட்டினைத் திறந்

தார்; தம் நண்பர் ஒருவரைத் திருநீறு உருத்திராக்கம் முதலியவற்றின் உதவிகொண்டு தோற்றத்தில் முனி ஆக்கினார்; கதவைத் திறப்பவர் உடனே பார்க்கக்கூடிய இடத்தில் அவரை உட்கார வைத்தார்; எக்காரணம் பற்றியும் அசைதலும் பேசுதலும் ஆகாவென அவர்க்குக் கூறியிருந்தார்; கதவை மூடி அத்திறவுகோலின் துணைகொண்டு பூட்டினார். பின்பு இவர் பின் நிகழ வேண்டுவதைக் காண வேண்டி எதிர் வாடையிலிருந்த ஒரு வீட்டின் திண்ணைமீது உட்கார்ந்துகொண்டிருந்தார்.

சுமார் ஆறரை மணிக்கு விளக்கேற்ற ஒரு பக்தர் வந்து கதவைத் திறந்தார். இருட்டில் முனி காட்சி அளித்தது. உடனே அவர் பயந்து கதவினை மூடிக்கொண்டே கூக்குரலிட்டார். அக்குரலைக் கேட்டுப் பக்கத்தில் இருந்தவர் ஓடிவந்தனர். முதலியாரும் ஒன்றும் அறியாதவர் போல அங்கு வந்தார். விளக்கேற்ற வந்தவர் அங்கிருந்தோர்க்குக் கதவைத் திறந்ததும் முனியொன்று காட்சியளித்ததாய்க் கூறினார். உள் நுழைதற்குரிய துணிவு அங்கிருந்த எவர்க்கும் உண்டாகவில்லை. அதற்குள் திரு. உலகநாத முதலியாரும் அங்கு வந்தார். அவர் உள் நுழைவார் என்று பலர் எதிர்பார்த்தனர். ஏனெனில், அக்கூட்டத்தவருள் அவர் துணிவுள்ளவர் என்று பலர் கருதிவந்தனர். அவரும் உள் நுழையத் துணியவில்லை. முனியின்முன் செல்லற்கு எவரே துணிவர்!! மணி ஏழு ஆயிற்று.

வீதியில் நின்றுகொண்டிருந்த மக்கள் அந் நிகழ்ச்சியினைக் குறித்துப் பேசத் தொடங்கினார்கள் :

ஒருவர் :— (அவ்வீட்டுக்குரியாரை நோக்கி) நண்பரே, வீட்டின் ஒரு பகுதியில் பஜனைக்கூடம் இருத்தலாகாதென உமக்கு நான் முன்னமே சொல்லியிருந்தேன். என் மொழியை நீர் கேட்க வில்லை. இச்சிறுவர்கள் என்ன தவறு செய்தார் களோ ! உம் வீடு இனிக் கெட்டுவிடும்.

மற்றொருவர் :—கந்தசாமி, இந்தக் காலத்தில் முனி கூடவா இருக்கிறது ! இது என்ன விந்தை ! அண்ணா, ஒருவேளை கொடியில் ஏதாவது வெள்ளைத் துணி தொங்கிக்கொண்டிருக்கலாம். அதை இவர் முனி என்று எண்ணிப் பயந்திருக்கலாம் என்று நான் எண்ணுகின்றேன். இருக்கும் இருக்கும் ! எதற்கும் நீ போய்க் கலியாணசுந்தரத்தைக் கேள்.

* * * *

இவ்விதம் மக்கள் மனம்போன விதம் பேசிக் கொண்டிருந்தபொழுது ஒருவர் கையில் கத்தியை உடையவராய், உள்நுழையக் கதவைத் திறந்தார். அதுவரையிலும் ஒன்றும் அறியாதவர்போலப் பேசிக்கொண்டிருந்த முதலியார், தம் நண்பர்க்கு ஏதேனும் கேடு உண்டாகலாம் என்ற எண்ணத் தால் அவர்க்குமுன் வேகமாய் உள் நுழைந்தார். கத்தியுடன் வந்தவர் நெருங்குவதற்குமுன் முதலி யார் முனிக்கோலம் தாங்கிய நண்பர் பக்கத்தை அடைந்தார். இளைஞர் வேகமாய் உள் நுழைந் தமையால் கத்தியுடன் உள் சென்றார் வேகம்

குறைந்தது. இருவர் வேகத்தால் கதவு நன்றாகத் திறக்கப்பட்டது. அதனால் வெளியில் நின்றுகொண்டிருந்தவர் கைகளில் வைத்திருந்த விளக்கொளி அறைக்குள் நன்றாய் வீசிற்று.

விளக்கொளியின் உதவியாலும், முதலியார் நின்ற நிலையாலும் கத்தியுடன் உட்சென்றவர் முனிக்கோலத்தோடு வீற்றிருந்தவர் தம் நண்பர் மகனார் என்பதை அறிந்து அவர் பெயரைக் கூறிக் கொண்டே சிரித்துவிட்டார். பின்பு எல்லோரும் முதலியார் குறும்பின் காரணத்தை அறிந்து கொண்டனர். அதுமுதல், "குறிப்பிட்ட காலத்திற்குமுன் கதவு திறக்கப்படலாகாது" என்னும் விதி நீக்கப் பெற்றது. முதலியார் நிகழ்த்திய குறும்புச் செயல்கள் மிகப் பல. அவற்றை எல்லாம் இங்குக் கூறின் நூல் பெருகும். இது நிற்க.

இன்னது செய்வதென்று தோன்றாத நிலையில் இருந்த முதலியாரை நெருங்கிய உறவினர் 'புக் கீபிங்' கற்குமாறு தூண்டினர். இவரும் அதனைக் கற்று, அக்கலையில் தேர்ச்சி பெற்றார்; 1906-ஆம் ஆண்டு ஸ்பென்சர் கம்பெனியில் 'கிளார்க்' வேலையில் அமர்ந்தார்.

அக்காலத்தில் திரு. பாலகங்காதர திலகர் நாட்டுரிமையை நாடிக் கிளர்ச்சி பல செய்து வந்தார். நேர்மைக்கு மாறாகச் செல்வாரை எதிர்க்கும் முதலியார் உள்ளத்திற்கு உணவு கிடைத்தது. பத்திரிகைகளை முதலியார் மனம் செலுத்திப் படிக்கலானார்; தாம் படித்தவற்றைப் பகல் உண்

டிக்குப் பிறகு ஆண்டுத் தொழில் செய்து வந்தார்க்குச் சொல்லியும் சிறந்த பகுதிகளைப் படித்தும் வந்தார். கம்பெனியில் தொழில் புரிந்துவந்த ஓர் ஐரோப்பியத் தலைவர் ஒரு நாள் கம்பெனித் தொழிலாளர்க்குப் பத்திரிகைச் செய்திகளைச் சொல்லுதல் கூடாதென முதலியாருக்குக் கட்டளை இட்டார். தமக்கு உரிமையான காலத்திலும் தாம் விரும்பும் செயலைத் தடை செய்யும் இடத்தில் வேலை செய்தல் தகாதென நினைத்துச் சுந்தரனுர் அவ்வேலையை அன்று பிற்பகலே விட்டு விலகினுர். உரிமையை விரும்பும் உள்ளமுடையார் நிலை இது. இந்நிலை இவர் வாழ்வு முழுதும் இடம் பெற்றிருத்தலை நாம் காணலாம்.

பின்னர், முதலியார் பெரியபுராணத்திற்குக் குறிப்புரை ஒன்று எழுதி வெளியிடும் பணியை மேற்கொண்டார்.

நண்பர் பலர் வேண்டுகோட்கிணங்கி 1909-ஆம் ஆண்டு ஆயிரம் விளக்கு வெஸ்லியன் மிஷன் பாடசாலையில் இவர் ஆசிரியராய் அமர்ந்தார். அப்பள்ளிக்கூடம் அந்நாள் பெரிதும் ஆதித் திராவிடர்களுக்கென்றே ஏற்படுத்தப்பட்டிருந்தது. சென்னை மாகாணத்தில் அவ்வகுப்பினர்க்குத் துணைசெய்ய அன்று எழுந்த பள்ளிக்கூடம் அஃது ஒன்றே. அப்பள்ளிக்கூடத்தின் தலைவராய் இருந்தவர் திரு. ஜான் இரத்தினம் என்பவர். அவர் முதலியாரிடத்தில் அளவிலா அன்பு கொண்டவர். "என் வாழ்விற்கு உறுதுணையாய் நின்றவர் திரு. ஜான் இரத்தினம்"

என, முதலியார் பலமுறை சொல்லிச்சொல்லி மகிழ்கின்றார்.

பள்ளிக்கூடத்தைப் பார்வையிட வந்த ஓர் அதிகாரியார் முதலியார் வகுப்பிற்கு வந்தார். அன்று திரு. வி. க. மாணவர்களுக்குக் கணக்குச் சொல்லிக்கொண்டிருந்தார். முதலியார் மாணவர்க்குக் காட்டிய கணக்கு வழிமுறை அவ்வகுப்பிற்குத் தகுதியுடையதன்று என அவர் கூறினார். ஆனால், முதலியார் தம்முறையே அவ்வகுப்பிற்குத் தக்கதென வாதித்தார். இருவர்க்குள் வார்த்தை வளர்ந்தது. அதிகாரியார், "நீர் அதிகம் பேசுகிறீர்" எனக் கடுமையாய்க் கூறிச்சென்றார். பின்னர் முதலியார் "உமக்கு விருப்பமில்லையாயின் வேலையை விட்டுவிட நான் சித்தமாய் இருக்கின்றேன். யான் போதித்த முறையே சிறந்தது" என்று அவ்வதிகாரியாருக்குக் கடிதம் போக்கினார். அக்கடிதம் எழுப்பிய நிகழ்ச்சியால் அதிகாரியார் தம் தவற்றை உணர்ந்து வருந்தினார்.

இப்பாடசாலையிலிருந்தபொழுதுதான் கலியாணசுந்தரனார் தம் மனத்திற்கினிய மங்கையரை மணந்தார். அவ்வம்மையார்க்கு இருமக்கள் தோன்றினார்கள். அந்தோ! அன்பின் வடிவென நின்ற மனைவியாரையும், மக்களையும் முதலியார் 1918-ஆம் ஆண்டுக்குள் இழந்து தனியரானார். அவ்வம்மையார் விருந்தினரைப் புன்முறுவல் கொண்டு ஏற்று உபசரிக்கும் நிலையினையும், வீட்டிற்குரிய செயல்களை உடலுறு வருத்தம் நோக்காது விருப்பொடு

ஆற்றிடும் இயலினையும், கூரிய அறிவினையும் சொல் லிச் சொல்லி முதலியார் இன்றும் இன்புறுகின்ருர். கணவரால் பாராட்டப்பெறும் மங்கையர் இவ் வுலகில் மிகச் சிலரே. காதற்கினிய தலைவரை உயிரெனக்கொண்டு வாழ்வு நடாத்திய அம்மையார் ஆன்மா நிரந்தர அமைதியில் என்றும் நிலை நிற்பதாக!

1916-ஆம் ஆண்டு ஜூன் மாதம் திரு. வி. க. வெஸ்லி கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியர் பதவியை ஏற்ருர்; கல்லூரியில் தமிழ்நலங் கருதிப் பற்பல தொண்டு ஆற்றினர்; பண்டிதர்களுக்குள் ஒற்றுமையை உண்டாக்கினர்; அவர்கள் பெற்று வந்த சம்பளம் உயரும் நிலையைத் தேடினர்.

மக்களிடத்துள்ள அளவிலா அன்பால் தாம் வகித்து வந்த தலைமைத் தமிழாசிரியர் பதவியை 1917-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 5-ஆம் தேதி விடுத்து முதலியார் மேற்படி மாதம் 7-ஆம் தேதி 'தேசபக்தன்' என்னும் தினசரிப் பத்திரிகைக்குத் தலைமை ஆசிரியரானர். பொது மக்களுக்குப் பாடு பட முன்வந்த பெரியோர்களிற் பலர் பள்ளிக்கூட ஆசிரியரே. அப்பத்திரிகையின் வாயிலாக இவர் தமிழ் நாட்டிற்குச் செய்த சேவை மிகப்பெரிது. நிர்வாக முறையில் எழுந்த சில நிகழ்ச்சியால், 1920-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 22-ஆம் தேதி இவர் அதி னின்றும் விலகினர். பின் தொழிலாளரும் பிறரும் கொடுத்த பணத்தொகையைக்கொண்டு 1920-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 'நவசக்தி'யைத்

தோற்றுவித்தார். அன்று முதல் 'நவசக்தி' தமிழ் நாட்டில் உலாவி வருகின்றது.

*1917*-ஆம் ஆண்டில் தொடங்கிய இவர்தம் தேச சேவை இன்றளவும் தொடர்ந்து நிற்கின்றது. அரசியல் துறையில் ஆன்மத் தூண்டுதலால் ஏவப் பெற்றுத் தொண்டாற்றுவார் செயல்களை ஆராய் தலில் பயனில்லை. அன்னார் செயல்களில் நன்மை காண்டலே நேர்மை. குறையற்ற மனிதனுமில்லை ; குறையில்லாச் செயலுமில்லை. ஆதலின்,

**'குணநாடிக் குற்றமும் நாடி அவற்றுள்**
**மிகைநாடி மிக்க கொளல்',**

உயர்வினும் உயர்வாம்.

## 3. முதலியார் உறவுகொண்ட பெரியார்

### பாம்பன் குமரகுரு தாசர்

வெஸ்லி கல்லூரியில் திரு. வி. கலியாண சுந்தரனர் மாணவராய் இருந்தபொழுது திரு. கதிரைவேற்பிள்ளை 'விபூதி மான்மியம்' என்னும் பொருள்பற்றிப் பாம்பன் குமரகுரு தாசர் தலைமையில் சென்னைச் சூளைக் குயப்பேட்டையில் ஒரு விரிவுரை நிகழ்த்தினர். தாசர் கூறிய முடிவுரை முதலியார் மனத்தைக் கவர்ந்தது. அதுமுதல் தாசரின் உறவு என்று வாய்க்கும் என்று இவர் ஏங்கி நின்றார். அன்று திரு. பிள்ளை அடிகளாரின் உயர்வினைப் பற்றி அவையினர்க்குக் கூறிய முறையால் முதலியார் அவர்தமைக் கண்டு பேச அஞ்சினர். 'இத்தகைய பெரியாரைக் கண்டு நாம் எப்படிப் பேசுவது !' என்பதே முதலியாரின் உள்ளத்தே ஊசலாடிய சொற்றொடர்.

சில மாதங்கட்குப் பிறகு முதலியாரின் நண்பர் ஒருவர் உதவி பெறுதற்காக அடிகளார், சுந்தரனர் இல்லத்தை அடைந்தார். அதுமுதல் முதலியாருக்கும் தாசர்க்கும் நீடித்த உறவு ஏற்பட்டது. அடிகளார் திருவல்லிக்கேணிப் பெரிய தெருவில் சம்பந்த முதலியார் இல்லத்தில் தங்கியிருந்தார். தினந்தோறும் முதலியார் மாலையில் அவரோடு கடற்கரைக்குச் செல்வது வழக்கம். தாசர் முதலியாருக்கு முறை

யாக உபநிடதப் பொருளையும் வேதத்தில் அடங்கிய பல பகுதிகளின் கருத்துக்களையும் கூறிவந்தார். இவ்விதம் சுந்தரனுர் சுமார் இரண்டு ஆண்டுகள் அடிகளாரோடு நெருங்கிப் பழகி வந்தார். தாசர் நடத்திய வாழ்வு முதலியாரின் நேரிய வாழ்க்கைக்குப் பெரிதளவு துணைபுரிந்துள்ளது. அடிகளார் வாழ்வின் சில கூறுகளை ஈண்டுக் காண்போம்:

தாசர் புதுப்பாக்கத்தில் தங்கி இருந்தபொழுது திரு. சின்னசாமி சோதிடர் அவர்க்குத் தினந் தோறும் உணவு கொண்டுவருவது வழக்கம். பல சமயங்களில் அவர் ஆட்களின் மூலமாகவும் உணவு கொடுத்தனுப்புவார். ஒரு நாள் உணவு கொண்டு வந்தவன் பீடி பிடித்துக்கொண்டே வந்தான். தாசர் அவனை அங்கிலையில் பார்த்துவிட்டார். ஆனுல், அவன் தாசர் தன்னை அங்கிலையில் கண்டதை அறியான். பின்பு அவன் பீடியைப் போட்டுவிட்டு உள் நுழைந்தான். அடிகளார் அவனை நோக்கி, "நீ வரும்பொழுது என்ன செய்துகொண்டு வந்தாய்?" என்று கேட்டார். அவன் பயந்து, "யான் ஒன்றும் செய்துகொண்டு வரவில்லையே!" என்று பதிலளித்தான். பொய்யை வெறுத்து வாழ்வு நடாத்தியவருள் தாசர் தலைமைவகிக்கும் தனிச்சிறப்பு வாய்ந்தவர்; உடனே அந்த ஆளை அனுப்பிவிட்டார்; அவன் பொய் சொன்னமைக்காகத் தாம் சில நாள் பட்டினி கிடந்தார். பிறர் அவரை எளிதில் மாற்றல் முடியாது. ஆனுல் தம் பிழையை யாரேனும் எடுத்துக் காட்டுவாராயின், அஃது உண்மையில் தவருக

இருக்குமாயின், அவர் பெரிதும் வருந்துதல் வழக்கம் என்றும், அங்ஙனம் அதனை எடுத்துக் காட்டிய வரைப் பெரிதும் புகழ்ந்து கொண்டாடுதல் இயல் பென்றும் முதலியார் பலமுறை கூறியுள்ளார்.

ஒருகால் திரு. மறைமலை அடிகளும் முதலி யாரும் இராயப்பேட்டைக் 'குகானந்த நிலைய'த்தில் உறக்கம் கொள்ளுவதற்கு முன் பலவற்றைப் பற்றி ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தனர். அப்பொழுது முதலியார் அவரை நோக்கி, "முருகனும் வேடர் மன்னனாக இருக்கலாமோ?" என்று ஆராய்ச்சியா ளர் போக்கில் கேட்டார். அதற்கு அவரும், "நானும் அப்படித்தான் நினைக்கிறேன்" என்றார். அவர் களுக்குப் பக்கத்தில் படுத்துக்கொண்டிருந்தவர் அவர்கள் பேசிக்கொண்டிருந்ததை அரை குறை யாகக் கேட்டுக்கொண்டுபோய்த் தாசரிடம், "முரு கக் கடவுள் ஒரு வேட அரசர் என்று திரு. கலியாண சுந்தர முதலியார் திரு. மறைமலை அடிகளிடத்துக் கூறினர்" என்று கூறிவிட்டனர். அடிகளார்க்கு முருகக் கடவுள்மீது அளவுகடந்த அன்பு உண்டு. அக்கடவுளை முதலியார் 'வேடர் அரசர்' என்று கூறிவிட்டார் என்ற எண்ணத்தால், அவர் பெரிதும் வருந்தினர். பால சுப்பிரமணிய பக்த ஜன சபையின் ஆண்டு விழாவில் தாசர் தலைமை வகித்துப் பேருரை ஆற்றியபோது அவர் உரையின் போக்கில், "முருகக் கடவுளை வேடர் மன்னராகக் கருதும் நாத்திகரும் நம் கூட்டத்தில் உண்டு. ஏன்? அவர்களில் நம் கலியாணசுந்தர முதலியாரும் ஒருவரே" என்று

கூறினர். முதலியார் மனம் அன்றுபட்ட பாட்டை இறைவனே அறிவான். அடிகளாரிடத்து இவர்க்கு மிக்க அன்புண்டு. என்செய்வார்! கூட்டம் கலைந்ததும் இவர் அவ்விடம் விட்டு வீடு சேர்ந்தார். அன்றிரவு உறக்கம் இவரைக் கைவிட்டது. மறுநாட் காலைவழக்கம்போல அடிகளார் எழுதிவரும் நூலின் சோதனை அச்சுத்தாள் வந்தது. முதலியார் அதனைத் திருத்தாமல் அதனோடு தாசர்க்கு, "சுவாமிகளே, நான் முருகக்கடவுள்பால் பற்று உள்ளவனா, அற்றவனா, என்று நீங்கள் நாடோறும் வழிபடும் முருகக் கடவுளையே கேளுங்கள். முருகன் உங்களுக்கு என் மனக் கோளினை உணர்த்திய பின்னரே யான் இத் தாளைத் திருத்துவேன்" என்று எழுதி அனுப்பினர். அன்று மாலை சுமார் நான்கு மணிக்குத் தாசர் முதலியார் இல்லத்திற்கு வந்து முதலியாரை நோக்கி,"நீ எழுதிய கடிதம் என் மனத்தைக் கலக்கி விட்டது. தியானம் செய்வதற்குக்கூட என்னல் இயலவில்லை. உன் நண்பர்களே அவ்விதம் கூறினார்கள். வருந்தாதே" என்றார். முதலியார், நடந்ததை அடிகளார்க்குக் கூறினர். பின்னர் அவர் பெரிதும் வருந்தினர்.

## ஸர். T. சதாசிவ ஐயர்

சென்னைப் பெத்து நாயக்கன் பேட்டையில் 'மெய்கண்டார் கழகம்' என்னும் கழகம் ஒன்று சைவப் பணியாற்றி வந்தது. அதற்கு அஷ்டாவதானம் பூவை. கலியாணசுந்தர முதலியார் அங்

நாள் தலைமை வகித்து அதனை நடத்தி வந்தார். ஓர் ஆண்டு விழாவிற்கு ஸர். டி. சதாசிவ ஐயர் தலைமை வகிப்பார் என்றும், திரு. ஆலாலசுந்தரம் பிள்ளை, பானுகவி முதலியோர் பேசுவர் என்றும், ஆண்டு விழாத்தாள் போக்கப் பெற்றது. முதலியாருக்கும் அழைப்புத்தாள் அனுப்பப் பெற்றது. ஆனால், முதலியாரை அக்கூட்டத்தில் பேசுமாறு கழகத்தினர் கேட்டிலர். இளைஞர் என்ற எண்ணத்தால் திரு. பூவை. கலியாணசுந்தர முதலியார் தம்மைப் பேசக் கேட்கவில்லை என்று நினைந்து முதலியார் வருந்தினார். மேடைப் பேச்சை இவர் பெரிதும் விரும்பியகாலம் அக்காலம். அதனால் இவர் ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையை அடைந்து முருகக்கடவுளை வணங்கிவிட்டுப் புறப்பட்டார். தம்மைத் திரு.பூவை. முதலியார் பேசுமாறு அழைக்கவில்லை என்னும் எண்ணம் இவர் மனத்தே ஊசலாடிக்கொண்டிருந்தது. கூட்டம் தொடங்கிற்று. அச்சுத்தாளில் குறிக்கப் பெற்றவருள் பலர் வரவில்லை. அப்பெருங்கூட்டத்தில் பேசற்குரியாரும் அங்குக் காணப்பெறவில்லை. அதனால், அஷ்டாவதானம் பூவை. கலியாணசுந்தர முதலியார் யாது செய்வது என்று தோற்றுதவராய்ச் செயலற்று இருந்தார். அச்சமயத்தில் ஸர். ஐயரையும், முதலியாரையும் நன்கு அறிந்த ஒருவர் முதலியாரிடத்துச் சொல்லாமலே ஐயரிடம் சென்று, அவர் மனம் கொள்ளும் வண்ணம் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரின் குணநலங்களையும், பேசும் ஆற்றலையும்

நன்கு கூறினர். அதனல், ஸர். ஐயர் சுந்தரனுரைக் கூட்டத்தில் பேசுமாறு கேட்டுக்கொண்டார். வாய்ப்பினை எதிர்நோக்கியிருந்த நம் கலியாணசுந்தரனர் மெய்கண்டாரைப் பற்றியும், அவர் இயற்றிய சிவஞான போதத்தில் அமைந்துள்ள சமரச சைவ உண்மைகளைப் பற்றியும் விளக்கமாகக் கூறினர். முதலியார் பேச்சு ஐயர் மனத்தைக் கவர்ந்தது. அன்று முதல் ஐயர் முதலியார் நண்பரானர். ஏன் ? இருவரும் தந்தையும் மகனும் போலப்பழகலாயினர். ஐயர் மூலமாக முதலியாருக்குப் பெசண்டு அம்மையார் உறவு கிடைத்தது. அவ்வுறவின்பயனக அம்மையார்பால் பகவத் கீதையின் உட்பொருளை முதலியார் நன்கு உணர்ந்தார். ஐயரும் முதலியாரும் பல இடங்களுக்குச் சென்று பேருரையாற்றினர். சிறப்பாக ஐயர் உறவால் முதலியார் மனத்தே உயர்வு தாழ்வில் மனம் செல்லாமையும், பட்டங்களில் விருப்பின்மையும், பொதுநல ஊழியமும் நிலைகொண்டன.

## பெசண்டு அம்மையார்

கீதை வகுப்பிற்கு முதலியார் தவருது சென்றுகொண்டிருந்தமையால், பெசண்டு அம்மையார் இவர்மீது தம் கருத்தைச் செலுத்தினர். அம்மையார் உதவியால் முதலியார் பல நண்பர்களுடன் சேர்ந்து சமூகத்தொண்டு ஆற்றும் வாய்ப்பினைப் பெற்ருர். அம்மையார் காட்டிய வழியினைப் பின்பற்றி இவர் தம் நண்பர் திரு. வாடியாவுடன்

சென்னைத் தொழிலாளர் சங்கத்தைச் சீரிய முறையில் நடத்தி வரலானார். நம் முதலியார் அரசியல் ஞானத்தை அம்மையார்பால் கற்றனர் எனக் கூறல் மிகையாகாது. ஒருகால் பிற்போக்கர் சிலர் முதலியாரை வாயில் வந்தபடி ஒரு கூட்டத்தில் திட்டினர். சுருக்கெழுத்தாளர் அன்னார் மொழிந்த உரைகளை எழுதிக்கொண்டுவந்து அம்மையார்க்கு அறிவித்தனர். முதலியாரை அன்னார் வைதுள்ள தீய மொழிகளைக் கண்டு அம்மையார் வருந்தி, அப்புன்மொழிகளால் முதலியார் மனம் புண்பட்டிருக்கும் என்று எண்ணித் 'தேசபக்தன்' காரியாலயத்திற்குத் தாமே வந்து முதலியாரைச் சந்தித்தார். பிற்போக்கர் மொழிந்த உரைகளைப் பற்றியும், அன்னார் மனப்பான்மையினைப் பற்றியும் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தனர். பிறகு அம்மையார் "வீறுகொண்டு எழுவாரையும், அவர்தம் கட்சியினையும் எதிரிகள் பலவாறு நிந்தித்தல் இயற்கை. அன்னார் உரைகள் நம்மளவில் நிற்குமாயின் அவைகளைப் பொருட்படுத்தல் ஆகாது ; ஆனல் அவைகள் கட்சியைத் தாக்குவனவாயின், அவற்றைக் கண்டித்துப் பேசுதலோ எழுதுதலோ வேண்டும்" என்று கூறினர். பின்னும் அம்மையார் முதலியாருக்கு ஊக்கத்தைத் தரவல்ல அரிய மொழிகள் பல மொழிந்து சென்றனர். அம்மையார் மொழிகள் முதலியார் உள்ளத்தே நின்று இன்றும் ஆட்சி புரிகின்றன. பயனைக் கருதாது தொண்டாற்றும் மனப்பான்மையை முதலியார் வாழ்வில் ஒன்றுமாறு

அம்மையார் செய்தனர். அம்மையார் முதலியாருக்கு அரசியல் ஞானத்தைத் தரவல்ல நூற்றுக் கணக்கான நூல்களை அளித்துதவினர். டாக்டர் பெசண்டு அம்மையாரைப் பற்றிச் சுருங்கக் கூறின், அவர் காலத்தில் பெருங்கல்வி, அரசியல் ஞானம், மதவுணர்ச்சி மூன்றும் ஒருசேரப்பெற்ற வேறு ஒருவர் உலகத்திலேயே இல்லையென்றே கூறல் மிகையாகாது.

## மயிலை முனிவர்

**[டாக்டர் மணி ஐயரிடத்தில் முதலியாருக்கிருந்த நட்பினை 'மயிலை முனிவர்' என்னும் மகுடம் ஈந்து ஒருகால் இவர் எழுதிய கீழ்வரும் கட்டுரை நன்குணர்த்தும்.]**

" '**மயிலை** முனிவர்' என்றதும், பலர் கருத்துத் திருவள்ளுவர்மீது செல்லும். திருவள்ளுவரும் மயிலை முனிவரே. பின்னாளில் திருவள்ளுவரைப் போலவே மயிலையில் ஒரு முனிவர் வாழ்ந்தார். அவரே டாக்டர் சுப்பிரமணிய ஐயர் என்பவர்.

" டாக்டர் சுப்பிரமணிய ஐயர் தமது உயிர் நலத்தை மட்டும் நாடித் தனித்து வாழ விரும்பினாரில்லை; காட்டுக்கு ஓடினாரில்லை; மூக்கைப் பிடிக்க முயன்றாரில்லை. அவர் வீட்டிலிருந்து மனைவி மக்களுடன் வாழ்ந்துகொண்டே பிற உயிர் நலமும் நாடி உழைத்து முனிவரானவர்.

"மயிலை முனிவருக்கு மற்றுமொரு பெயர் வழங்கி வந்தது. அது 'மணி ஐயர்' என்பது. அப் பெயர் அவரது இயற்பெயரின் சுருக்கமன்று. அஃது அவருக்குச் சிறப்புப் பெயராகவே வழங்கிவந்தது. சுப்பிரமணிய ஐயர் பல கலையிலும் பல துறையிலும் மணியாயிலங்கி, மற்றவர்க்கும் ஒளி வழங்கி வந்தமையால், அவர் 'மணி ஐயர்' என்று அழைக்கப் பட்டார்.

"மணி ஐயர் வாழ்வு மன்பதைக்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்குவது. அவரது வாழ்வு ஒரு ஜீவ விருட்சம் போன்றது. அவ்விருட்சத்தின் அடியில் பொதுக் கல்வி, சட்டம், அரசியல், தத்துவம், விஞ்ஞானம் முதலிய கலைகள் வேர்களாய்ப் பாய்ந்து ஊடுருவி நின்றன; முடிவில் ஒப்புரவு, வீரம், தியாகம், அஞ்சாமை முதலிய நறுங் குணங்கள் கவடு கோடுகள்விட்டுப் பரந்து விரிந்து ஓங்கித் தழைத்துத் திகழ்ந்தன. அவ்விருட்சம் பல்லுயிர்கட்கு நிழல் தந்துவந்தது.

"முதல் முதல் யான் மயிலை முனிவரை அவர் நிலையத்திலேயே பார்த்தேன். 'மணி ஐயர் வீட்டில் சரபசாஸ்திரியார் குழல் கச்சேரி' என்று விளம்பரஞ் செய்யப்பட்டது. அதைக்கேட்டு இன்புற எனது வீட்டருகே வதிந்த ஒருவருடன் யானுஞ் சென்றேன். முனிவர் நிலையத்தில் பெருங்கூட்டங் கூடி யிருந்தது. அச்சமயத்தில் ஓர் அறையினின்றும் ஒருவர் வெளிவந்து கூட்டத்திடை, விரைந்து நுழைந்தார். அவர் நுழைந்த காட்சி, தாரகா

கணங்களிடைச் சந்திரன் தோன்றியது போலிருந்தது. அவர் ஓரிடத்தில் அமர்ந்தார். 'மணி ஐயர்!' 'மணி ஐயர்!' என்று பலர் பேசிக்கொண்டனர். ஐயரின் பீடு நடையும் சிங்க நோக்கும் உள்ளத்தைக் கவர்ந்தன. மணி ஐயரின் தோற்றம் கட்புலனுக்கும், சரப சாஸ்திரியாரின் குழலோசை செவிப் புலனுக்கும் விருந்தாயின. கூட்ட முடிவில் ஐயர் இசையைப் பற்றிச் சில உரை பகர்ந்தார். நாதப் பிரமத்தின் இயல் அவரால் நன்கு விளக்கப் பட்டது. அப்பொழுது நாதத்தின் நுட்பம் ஒருவாறு எனக்கு விளங்கலாயிற்று.

" இராம கிருஷ்ணர் பிறந்த திருநாள் கூட்டத்தில் இன்னுமொரு முறை மயிலை முனிவரைக் காணலானேன். அக்கூட்டத்தில் அவர் வேதாந்தத்தைப் பற்றி ஓர் உபந்யாசஞ் செய்தார்; சிறிது நேரம் ஆங்கிலத்திலும் சிறிது நேரம் தமிழிலும் பேசினர். அந்நாளில் கூட்டங்களில் ஆங்கிலம் பயின்றவர் பெரிதுந் தமிழில் பேசுவதில்லை. மணி ஐயர் மட்டும் கூட்டங்களிலுந் தாய்மொழியை அவமதிப்பதில்லை. அவரது தமிழ்ப் பேச்சும், ஆங்கிலப் பேச்சுப் போலவே வீரஞ் செறிந்ததாயிருக்கும். 'வேதாந்தம் ஒரு கூட்டத்தார்க்கோ, ஓரினத்தார்க்கோ, ஒரு நாட்டார்க்கோ உரியதன்று' என்பதும், 'அஃது ஒரு கட்டுப்பட்ட சமயம் அன்று' என்பதும், 'மத மாற்றம் வேதாந்தத்துக்கு இல்லை' என்பதும் மணி ஐயரால் நன்கு விளக்கப்பட்டன. அப்பேச்சால் விளைந்த நலன் பெரிது. எனது உணர்வில் முதல்

முதல் சமரச விதை விதைத்தது அதுவே என்று கூறுவேன்.

"ஸ்ரீமான் சுவாமிநாத பண்டிதருடன் மணி ஐயர் இல்லத்திற்குப் போகும் வாய்ப்பு எனக்கு ஒருபோது கிடைத்தது. நாங்கள் சென்ற வேளை ஐயர் உண்டு உறங்கச் செல்லும் நேரமாயிருந்தது. வாயிலில் இருந்தோர், நிலைமையைவிளக்கி எங்களைத் தடுத்தனர். பண்டிதர் உரத்த குரலால் பேசத் தொடங்கினர். அது மணி ஐயர் காதில் விழுந்தது போலும். அவர் வெளியேவந்து எங்களை அழைத்துச் சென்று பீடத்திலமர்த்தினர். ஐயர் பண்டிதரைப் பார்த்து, 'இந்நேரத்தில் என்னைப் பார்க்க எவரும் வருவதில்லை. உங்கள் குரலால் உங்களை யாழ்ப் பாணத்தாரென்று உணரலானேன். உடனே சபா பதி நாவலர் நினைவு தோன்றிற்று. யானே போந்து உங்களை அழைத்து வந்தேன்' என்று சொன்னர். பண்டிதர் புன்னகை புரிந்து, தம்மையும் என்னையும் இன்னரெனத் தெரிவித்துக்கொண்டு, தாம் அச் சிட்ட சிவஞான பாடியத்தை ஐயருக்குக் கொடுத் தார். ஐயர் அதை அன்புடன் ஏற்றுத் திறந்து பார்த்தார்; 'இது சபாபதி நாவலர் காலத்தில் வெளி வந்திருத்தல் வேண்டும்' என்று கூறி, அத்துவித விளக்கத்தைப் பற்றிய சில பகுதிகளைப் படித்தார்; சிற்சில இடங்களில் சிவஞான முனிவர் கருத்துடன் மாறுபட்ட சில கருத்துக்களை வெளியிடப்புகுந்தார். அவ்வேளையில் பண்டிதர் மணி ஐயரைப் பார்த்து, 'சிவஞான முனிவர் கருத்தையும் ஆராய்ந்து

பார்க்க உங்களுக்கு அவகாசம் வாய்த்ததோ ?' என்று கேட்டார். அதற்கு ஐயர், ' சபாபதி நாவலர் என் நண்பர் ; அவர் அடிக்கடி என்னிடம் வருவார்; அவர் முதல் முதல் என் வீட்டிலேயே திருக்குறளைப் பற்றிப் பேசினர் ; அவரால் சிவஞான முனிவர் கருத்துக்கள் பலவற்றைத் தெரிந்துகொள்ளல் நேர்ந்தது ' என்று சொல்லி, நாவலர் கல்வித் திறத்தைப் புகழ்ந்து புகழ்ந்து மகிழ்வெய்தினர். பின்னே பண்டிதர் - ஐயர் சம்பாஷணை பல வழியில் சுழன்று திரிந்து திருக்கோவையாரிடத்திற் சென்றது. ஐயர், திருக்கோவையாரில்,

**' வானுழை வாளம் பலத்தரன்**
**குன்றென்று வட்கிவெய்யோன்**
**ருனுழை யாவிரு ளாய்ப்புற**
**நாப்பண்வண் டாரகைபோல்**
**தேனுழை நாக மலர்ந்து**
**திகழ்பளிங் கான்மதியோன்**
**கானுழை வாழ்வுபெற் ருங்கெழில்**
**காட்டுமோர் கார்ப்பொழிலே '**

என்னும் பாட்டை எடுத்து ஓதி உள்ளுறை கூறினர். அதைக் கேட்ட பண்டிதர், ஆனந்த வாரிதியில் திளைத்து ஐயரை வியந்தார். ' இவ்வியப்புக்களெல்லாம் சபாபதி நாவலர்க்கு உரியனவாம்' என்று ஐயர் பதிலிறுத்தார். பண்டிதர், ' நேரமாகிவிட்டது ; உங்கள் அரிய காலத்தை... ' என்றதும், ஐயர், ' அவ்வாறு கூருதேயுங்கள் ; உங்களால் அல்லவோ சிவஞான முனிவரும் மாணிக்க வாசகரும் இன்று

இங்கே வந்தனர்? அதற்கு நானல்லவோ நன்றி கூறுதல் வேண்டும்? இந்நாள் நன்னுள்' என்றனர். பண்டிதரும் யானும் ஐயரிடம் விடைபெற்றுத் திரும்பினேம். வழியில் பண்டிதர், 'ஒரு ஹைகோர்ட் ஜட்ஜ் - பல துறைகளில் ஈடுபட்டவர் - தமிழில் எவ்வளவு அறிவும் அன்பும் உடையவராயிருக்கிறுர்!' என்று ஐயரைப் பாராட்டி வந்தார்.

"ஸர் டி. சதாசிவ ஐயருடன் தியசாபிகல் சங்கத்துக்கு யான் போவது வழக்கம். ஒரு நாள் ஓர் ஆலமரத்தடியில் மயிலை முனிவர் நின்றுகொண்டிருந்தார். அவரெதிரிலே சதாசிவ ஐயரும் யானும் போதல் நேர்ந்தது. சதாசிவ ஐயர் முனிவரைப் பார்த்ததும் என்னை அறிமுகஞ் செய்விக்கத் துவங்கினுர். முனிவர், 'இவரை யான் அறிவேன்' என்று சொல்லி, 'சுவாமிநாத பண்டிதருடன் நீர் ஒருமுறை வீட்டிற்கு வரவில்லையா?' என்று கேட்டார். ஐயரின் நினைவுத் திறத்தைக் குறித்து வியப்புற்றேன்.

"சுய ஆட்சிக் கிளர்ச்சியின் போது மணி ஐயருடன் நெருங்கிப் பேசும் பேறு எனக்குப் பலமுறை வாய்த்தது. அச்சமயம் யான் வெஸ்லி கலாசாலையில் தமிழாசிரியனுயிருந்தேன். அப்பொழுது பெசண்டு அம்மையார் காப்பில் வைக்கப்பட்டனர். அது காலை பிராமணரல்லாதாரியக்கம் கொழுந்து விட்டெரிந்தது. கோகலே மண்டபத்தில் பெருங்கூட்டங்கள் அடிக்கடி கூடிவந்தன. ஸ்ரீமான் டி. வி. கோபால சாமி முதலியார் உள்ளிட்ட சிலர் என்னையும் பேசு

மாறு கேட்டனர். யானும் இசைந்தேன். ஒருதனிக் கூட்டம் கூட்டப்பட்டது. திவான் பகதூர் கேசவப் பிள்ளை தலைமை வகித்தார். 'திராவிடரும் காங்கிரஸும்' என்னும் பொருள்பற்றிப் பேசலானேன். அரசியற்றுறையில் யான் முதன்முதல் நிகழ்த்திய உரை அதுவேயாகும். எளியேன் பேச்சைக் கேட்கப் பலர் போந்தனர். அவருள் டாக்டர் சுப்பிரமணிய ஐயரும் ஒருவராவர். அடுத்த நாள் மாலையில் மணி ஐயர் வீட்டில் ஓர் அந்தரங்கக் கூட்டம் நடந்தது. அதற்கு யானும் அழைக்கப்பட்டேன். கூட்டம் முடிந்த பின்னர் முனிவர் என்னைத் தனியே அழைத்து, 'உமது பேச்சைக் கேட்டேன். உமது தொண்டை ஒரு கல்லூரி அளவில் கட்டுப்படுத்தலாகாது. தேசத் தொண்டுக்குரிய அமைப்பு உம்மிடத்திலிருக்கிறது. அதற்குரிய சமயமும் இதுவே' என்று உரைத்தார். அவ்வுரை எனக்கு ஒருவிதப் புத்துயிர் அளித்தது. ஐயர் உரையும், வேறு சிலர் முயற்சியும் சில நாட்களில் என்னைத் தேச சேவையில் ஈடுபடச் செய்தன.

"மயிலை முனிவர் தென்மொழி, வடமொழி, ஆங்கிலம் முதலிய பல மொழியில் பயிற்சி பெற்றிருந்தார். தென்மொழியில் திருக்கோவையார், திருக்குறள் முதலிய நூல்களை அவர் நன்கு ஆராய்ந்தவர். சில சமயங்களில் அவரது திருக்கோவையார் ஆராய்ச்சி, பண்டிதர்களையுந் திகைக்கச் செய்யும். திருக்குறளில் அவருக்கிருந்த பற்றுக்கோரளவில்லை. இப்பொழுது மன்னர் பிரானுயுள்ளவர் (ஐந்தாம்

ஜார்ஜ்) இளங்கோவாகச் சென்னை நோக்கியபோது, அவரை வரவேற்குங் கூட்டத்துக்குத் தலைவராக மணி ஐயர் தெரிந்தெடுக்கப்பட்டார். 'தந்தை மகற்காற்று நன்றி அவையத்து - முந்தி இருப்பச் செயல்' என்னுந் திருக்குறளை முதலில் கூறியே ஐயர் தங்கடனை ஆற்றினர். டாக்டர் நஞ்சுண்டராவ் முயற்சியால் ஒருபோது கூட்டப்பட்ட ஒரு கழகத்தில் மணி ஐயரையும் பேசுமாறு சில அன்பர் கேட்டனர். அவ்வேளையில் மணி ஐயர் பொருட்பாலிலுள்ள சில குறட்பாக்கட்குப் புதுப்பொருள் கூறினர். அப்பொருள் காலப் போக்கிற்குப் பெரிதும் உரியதாயிருந்தது.

"பண்டிதர் நமசிவாய முதலியாரால் ஒரு பெருந் தமிழ்க்கழகங் காணப்பெற்றது. அக்கழகம் பெரிதுந் தமிழ்ப் புலவர்களால் ஆக்கப்பெற்றது. அதற்குத் தலைவராக மயிலை முனிவர் தெரிந்தெடுக்கப்பட்டார். இதனால், தமிழ்ப் புலவர் நாட்டத்தையும் ஐயரின் தமிழ்ப் பற்றுக் கவர்ந்தது புலனாகிறதன்றோ? மயிலை முனிவர் வடமொழியில் உபநிஷதம், பகவத் கீதை, பாகவதம், பாரதம் முதலிய நூல்களை ஆய்ந்த வண்ணமாயிருப்பர். பாகவதத்துக்குத் தத்துவார்த்தம் புதிய முறையில் அவர் கூறி வந்தார். பாரதத்தில் இடைச்செருகல் இன்ன இன்ன என்று அவர் எடுத்துக் காட்டுவர். ஆயிரக்கணக்கான சுலோகம் ஐயருக்கு மனப்பாடம்.

"மயிலை முனிவர் பலதுறையிலும் சேவை செய்தவர். அவர்தம் வக்கீல் தொழில் சிறப்பையும் நீதி

காணுந் திறத்தையும் என் போன்ருரால் அளந்து கூறுதல் இயலாது. பிறர் மூன்று மணி நேரம் பேசி வாதிப்பதை மணி ஐயர் அரைமணி நேரத்தில் முடித்துவிடுவாராம். சில நீதிபதிகள் ஒரு வழக்கை முடிப்பதற்குள் மணி ஐயர் பத்து வழக்கை முடித்து விடுவாராம். விரைவு, அவரது சிறப்பு இயல்புகளுள் ஒன்று.

"மயிலை முனிவர் வாழ்வு சமயத்தை அடியாகக் கொண்டது. அவரது சமயம் வேதாந்தம். வேதாந் தம் மன்பதைக்கு உரியது; சமரசமுடையது; தொண்டுகளுக்கெல்லாம் மூலமாயிருப்பது. இவ் வேதாந்தம் உலக முழுவதும் பரவினுல் மக்களுக் குள் சகோதர நேயம் பெருகும் என்ற நம்பிக்கை ஐயருக்குண்டு. தமது நம்பிக்கையைச் செயலில் நிறைவேற்ற ஐயர் பல வழியிலும் முயன்ருர். அவைகளில் இங்கே குறிக்கத்தக்கன இரண்டு: ஒன்று, விவேகானந்தருக்கு ஐயர் துணை புரிந்தது; மற்ருென்று, அவர் தியசாபிகல் சங்கத்திற் சேர்ந்து உழைத்தது.

"விவேகானந்தருக்குத் தக்க சமயத்தில் மணி ஐயர் உதவி புரிந்தார். விவேகானந்தரது மேல் நாட்டுப் பிரசாரத்துக்கு மணி ஐயர் உதவி ஆக்க மளித்தது. இதை விவேகானந்தரே சில இடங் களில் குறிப்பிட்டுள்ளார்.

"டாக்டர் சுப்பிரமணிய ஐயர் தியசாபிகல் சங்கத்திற் சேர்ந்து உழைத்த உழைப்பு உலகுக்குத் தெரியும். தொடக்கத்தில் அச்சங்கத்தைப் பலர்

எதிர்த்தனர். சுப்பிரமணிய ஐயரின் கூட்டுறவால் எதிர்ப்புக்கள் வீழ்ந்துபட்டன ; சங்கமும் செல்வாக்குப் பெற்றது. பெசண்டு அம்மையார் பெருமைக்கெல்லாம் மணி ஐயர் சார்பு ஊற்ருயிருந்தது என்று கூறுதல் மிகையாகாது.

"விவேகானந்தர் பேச்சும் தியசாபிகல் சங்கச் சேவையும் பொதுவாக உலகிலும், சிறப்பாக இந்தியாவிலும் சமரசத்தைப் பரப்பி வருதல் கண்கூடு. இவ்விரண்டுக்கும் துணை புரிந்தவர் மணி ஐயர். இவர்தம் பெருமையை என்னென்று கூறுவது ! தற்கால இந்தியாவை ஆக்கியவருள் மணி ஐயரும் ஒருவர் என்பதை இளமை உலகம் மறத்தலாகாது.

"மயிலை முனிவர் தேச சேவையிலும் ஈடுபடாமல் இல்லை. அவர் காங்கிரசில் சேர்ந்து தொண்டு செய்துவந்தார் ; சென்னையில் கூடிய காங்கிரசில் ஒருமுறை வரவேற்புக் கூட்டத்தலைவராய் நின்று பெருந்தொண்டாற்றினர். சுய ஆட்சிக் கிளர்ச்சியில் அவரது தேச பக்தியும், வீரமும், அஞ்சாமையும், தியாகமும் உலகுக்கு நன்கு புலனாயின. நீண்டகாலம் முனிவர் உள்ளத்தில் ஊர்ந்து ஊறிக்கொண்டிருந்த இவ்வியல்புகள் தக்க சமயத்தில் பரிணமித்து வீறிட்டெழுந்து தாண்டவம் புரிந்தன. சுய ஆட்சிக் கிளர்ச்சியின்போது மயிலை முனிவர் பாரத மாதாவின் ஒப்புயர்வற்ற புதல்வராக விளங்கினர். தாயின் தளையை உடைக்கும் வீரச்சேயாக மணி ஐயர் இலங்கினர். 'சுய ஆட்சிக் கிளர்ச்சி தளர்ந்து

விழுமாறு விடமாட்டேன்; என்னுயிர் போயினும் போக; கிளர்ச்சியை மட்டும் விடேன்!' என்று ஐயர் கர்ச்சித்த கர்ச்சனை இந்தியாவை எழுப்பி விட்டது. நரிகளெல்லாம் அரிகளாயின.

"அந்நாளில் ஐயர் சிலசமயம் கோதண்டபாணி யாகவும், சிலசமயம் காண்டீபனுகவும் விளங்கினர். அவர் தோற்றத்திலேயே வீரமும் அஞ்சாமையும் பொங்கித் ததும்பி வழிந்துகொண்டிருந்தன. அத் தோற்றம் என்றும் எனது உள்ளத்தை விட்டகல்வ தில்லை. மணி ஐயரின் வீரமுழக்கம் அதிகார வர்க் கத்தை நடுக்குறச் செய்தது; பிரிட்டிஷ் ராஜதந்திரி களைக் கலக்குறச் செய்தது. பார்லிமெண்டிலும் மணி ஐயர் பேச்சாகவே இருந்தது. உலக நோக்க மும் மணி ஐயர்மீது திரும்பலாயிற்று. அவ் வேளையில் இந்தியத் தமிழ் மணி உலகுக்கு ஒரு வான் மணியாய் மிளிர்ந்தது என்று சொல்லலாம். அஞ்ஞான்று மணி ஐயருக்குற்ற வீரத்தையும், அஞ்சாமையையும், தியாகத்தையும் என்னென்று சொல்வேன்!

"ஐயரின் சுதந்திர முழக்கம் இந்தியா அளவில் நில்லாது அமெரிக்காவரை சென்றது. அவர்தம் தியாக உணர்வு 'ஸர்' என்னும் பெரும்பட்டத் தையுந் துறக்கச் செய்தது.

"ரௌலட் சட்டத்தையொட்டிக் காந்தியடிகள் சத்தியாக்கிரக அறிக்கை பிறப்பித்தார். அதில் கைச்சாத்திடலாகாதென்று பெசண்டம்மையார் தம் நண்பர் பலருக்குத் தெரிவித்தார். அந்நிலையில்

டாக்டர் சுப்பிரமணிய ஐயர் அறிக்கையில் கைச் சாத்திட்டுக் காந்தியடிகள் முயற்சிக்கு ஊக்கம் ஊட்டினார். இதனால் ஐயர் மனச்சான்று வழி நடப்பவர் என்பது விளங்கவில்லையா!

"டாக்டர் சுப்பிரமணிய ஐயர் சமூகச் சீர்திருத் தத்துக்கும் கால்கொண்டவர் என்பதை இங்கே விரித்துக் கூறவேண்டுவதில்லை. அவர் காலத்தில் சீர்திருத்தத்தை வலியுறுத்துதற்கு அஞ்சா நெஞ்சம் வேண்டும். இந்நாளில் கோழைகள்கூடச் சீர்திருத் தத்தைப் பற்றிப் பேசலாம். பிறப்பில் ஜாதி வேற்றுமை இன்மை, உடனுண்ணல், கலப்பு மணம் முதலியவற்றை மணி ஐயர் ஆதரித்து வந்தது உலகறிந்ததொன்று. சென்னைச் சட்டசபையில் ஸ்ரீமான் சாஸ்திரியார் கொண்டுவந்த சீர்திருத்த மசோதாவையும், பனகால் ராஜா கொண்டுவந்த இந்து தர்ம பரிபாலன மசோதாவையும் பலப்பல எதிர்ப்புக்களிடை மணி ஐயர் ஆதரிக்க முன் வந்தார்.

"மயிலை முனிவர் தொழிலாளர் இயக்கத்தின் அவசியத்தை உணராமலில்லை. இந்தியாவில் முதல் முதல் காணப்பெற்ற சென்னைத் தொழிலாளர் சங் கத்தின் முதல் ஆண்டு விழாக் கூட்டத்தில் மணி ஐயர் தலைமை வகித்து அறிவுறுத்திய மொழிகள் என்றும் மறக்கற்பாலனவல்ல. தொழிலாளர் வேலை நிறுத்தக் காலங்களில், அவ்வேலை நிறுத்தங்கள் நியாயமானவை என்று மணி ஐயர் பத்திரிகை

களுக்கு எழுதியும், தம்மால் இயன்ற துணை புரிந்தும் தொழிலாளர் நேயராகவே விளங்கினார்.

"மயிலை முனிவர் வாழ்க்கை, வாழ்வுக்கோரிலக்கியமாக நிற்பது. ஒருவரிடத்தில் எத்துணைக் கலைகள், எத்துணைத் தொண்டுகள் விளங்கின! அத்தகைய ஒருவரை இந்நாளிற்காண்டலரிது. தமிழ் நாட்டு இளைஞர்கள் அப்பெரியார் வாழ்வைக் குறிக்கோளாகக் கொண்டு தங்கள் வாழ்வை அமைக்க முயல்வார்களாக!"

## 4. அரசியலும் பிறவும்

நாட்டு உணர்ச்சியில் வீறிட்டெழுந்த சுரேந்திர நாத பானர்ஜி இங்கிலாந்திலும் மற்ற இடங்களிலும் அரசியற் சார்பாய்ச் செய்த பேருரைகள் முதலியாரின் மாணவ வாழ்விலேயே அரசியல் உணர்ச்சியாம் வித்தை விதைத்தன. விபின சந்திர பாலர் சென்னை போந்து, சென்னைக் கடற்கரையில் ஆற்றிய பேருரையும், அரவிந்தர் நடத்தி வந்த 'வந்தே மாதரம்' என்னும் பத்திரிகையும், அரவிந்தர் விசாரணையும், திலகர் சுதேசி இயக்கமும் முதலியாரின் அரசியல் உணர்ச்சிக்கு ஆக்கமளித்தன. ஆதலின், முதலியார் தம் பிற்கால வாழ்விற்கு அடிகோலுவார் போன்று சமூகத் தொண்டை மேற்கொண்டார்.

1915-ஆம் ஆண்டு இராயப்பேட்டையில் 'சகோதர சங்கம்' என்னும் ஒரு சங்கம் திரு. M. S. காமத்து முதலியோர் முயற்சியால் நிறுவப்பெற்றது. அச்சங்கத்திற்கு ஸர். டி. சதாசிவ ஐயர் தலைவராய் அமர்ந்தார். திரு. காமத்துக் காரியதரிசியாராயும், முதலியார் காரியக் கூட்டத்தின் அங்கத்தினராயும் அமர்ந்தனர். அதன் ஆதரவில் நான்கு பாடசாலைகள் காணப்பெற்றன. அவற்றுள் மூன்று ஆண் பாடசாலைகள்; ஒன்று பெண் பாடசாலை. அந்நான்கு பாடசாலைகளும்

முதலியார் மேற்பார்வையில் இருந்துவந்தன. சங்க அங்கத்தினர் பக்கத்திலிருந்த சேரிகளுக்குச் சென்று அச்சேரி மக்கட்குப் பல உதவிகளைச் செய்துவந்த னர். முதலியாரும் தம் உழைப்பால் பலர் நன்மதிப் பைப் பெற்ருர்.

அக்காலத்தில் 'திராவிடன்' பத்திரிகை வளர்ச்சி பெற்றுப் பெரிதும் மக்களிடையே உலாவி வந்தது. ஒரு நாள் அப்பத்திரிகையில் முருகக் கடவுளின் பிறப்பினைப்பற்றி மிக இழிவாக எழுதப்பெற்ற கட்டுரை ஒன்று வெளிவந்தது. அதனைக் கண்டித் தற்பொருட்டு இராயப்பேட்டையில் ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரின் தலைமையில் ஒரு கூட்டம் கூட்டப்பெற்றது. திரு. வி. கலியாணசுந்தர ஞர் 'திராவிடன்' பத்திரிகையின் போக்கையும், கட வுளைப்பற்றி இழித்துக் கூறிய கட்டுரையாளரின் மனப்பான்மையையும் கண்டித்தார்; "என் வசத்தில் ஒரு பத்திரிகை இருக்குமாயின், 'திராவிடன்' பத்தி ரிகையின் போக்கினையும், வீணர்களுடைய மனப் பான்மையினையும் யாவரும் அறியும் வண்ணம் செய்வேன்" என்று கூறினர். 'திராவிடன்' பத்தி ரிகை அதுமுதல் முதலியார் கொள்கைகளை இழித்து எழுதிக்கொண்டே வந்தது. நாள் சில சென்றன.

திவான்பகதூர் கேசவப் பிள்ளையின் தலைமை யில் கோகலே ஹாலில் ஒரு கூட்டம் கூடிற்று. அக் கூட்டத்தில், முதலியார் 'திராவிடரும் காங்கிரசும்' என்னும் பொருள்பற்றிப் பேசியபோது ஜஸ்டிஸ் கட்சியின் கொள்கைகளையும், 'திராவிடன்' பத்தி

ரிகையின் போக்கையும் கண்டித்துப் பேசினர். இதுவே ஆசிரியர் கலியாணசுந்தரனரின் அரசியல் பேச்சுக்களில் கன்னிப்பேச்சாம். அன்று இவர் பேசிய முறையினையும், பொருட்சிறப்பினையும் நோக்கிப் பெரியோர் பலர், "முதலியார் பள்ளிக்கூட ஆசிரியராய் இருத்தலைப்பார்க்கிலும் பத்திரிகை ஆசிரியராய் இருப்பாராயின், நாட்டிற்குப் பெரு நன்மை உண்டாகும்" எனக் கூறினர். முதலியாரைப் பத்திரிகை ஆசிரியராக்க வேண்டும் என்னும் எண்ணம் திரு. M. S. காமத்து முதலியோர் உள்ளத்தில் அரும்பலாயிற்று.

சில வாரங்களுக்குப் பிறகு 'மதராஸ் பிரசிடென்சி அசோசியேஷன்' என்னும் ஓர் அரசியல் சங்கம் பல பெரியோர்களால் நிறுவப்பெற்றது. அச்சங்கத்திற்குத் திவான்பகதூர் கேசவப் பிள்ளை தலைவராய் அமர்ந்தார். திரு. வி. கலியாணசுந்தர முதலியார், திரு. குருசாமி நாயுடு, டாக்டர் வரதராஜுலு நாயுடு, திரு. டி. வி. கோபாலசாமி முதலியார் முதலியோர் காரியதரிசியராய் அமர்ந்தனர். அச்சங்கத்தின் சார்பாகப் பல கிளைச் சங்கங்கள் தோன்றித் தமிழ் நாட்டிற்குத் தொண்டு செய்து வந்தன. இது நிற்க.

திரு. M. S. காமத்து, திரு. குமாரசாமி செட்டியார் ஆகிய இருவரும் சேர்ந்து, 'பிரிட்டிஷ் இந்தியா பிரஸ்' என்னும் பெயர்கொண்ட ஓர் அச்சுக்கூடத்தை நடத்த முன் வந்தனர். அவ்வச்சுக்கூடத்

தின் பதிப்புரிமைப் பொறுப்பு முதலியாருக்கு வழங்கப்பட்டது.

'காங்கிரஸ் கொள்கைகளைத் தழுவிக் கூறும் பத்திரிகையொன்று தமிழ் நாட்டிற்கு இன்று தேவையா ?' என்னும் வினா காங்கிரசில் பற்றுள்ள பிராமணர் அல்லாதார் கருத்தை அறியும்பொருட்டு, 'இண்டியன் பேட்ரியட்டு' என்னும் பத்திரிகையில் வெளியிடப்பெற்றிருந்தது. அதனை வாசித்த பலர், பிராமணர் அல்லாதாரால் நடத்தப் பெற்றுவந்த 'திராவிடன்' பத்திரிகையின் கொள்கைகள் பலவற்றைத் தாக்கவும், காங்கிரஸ் கொள்கைகளை நிலை நாட்டவும் தமிழ்ப் பத்திரிகையொன்று இன்றியமையாததென எண்ணித் 'தமிழ்ப் பத்திரிகையொன்று தமிழ்நாட்டிற்குத் தேவை' என 'இண்டியன் பேட்ரியட்'டுக்குக் கடிதம் பல போக்கினர்.

1917-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 7-ஆம் தேதி திரு. வி. கலியாணசுந்தர முதலியாரை ஆசிரியராகக் கொண்டு 'தேசபக்தன்' என்னும் பத்திரிகை வெளிவந்து உலவிற்று. இப்பத்திரிகைக்கு ஆக்கம் தரவேண்டித் திரு. வி. கலியாணசுந்தர முதலியார், டாக்டர் ராஜன், திரு. C. ராஜகோபாலாச்சாரியார், திரு. ஆதிநாராயண செட்டியார், திரு. M.S. காமத்து முதலியோரைக் காரிய நிருவாகத்தினராய்ப் பெற்ற ஒரு லிமிட்டெட் கம்பெனி தோன்றிற்று. திரு. காமத்துக் 'காரியதரிசி' பதவியை ஏற்றார். முதல் முதல் தமிழ் மணத்தோடு அரசியற்செய்திகளைக் கூறி வந்த பத்திரிகை இஃது ஒன்றே எனக்

கூறல் மிகையாகாது. 1919-ஆம் ஆண்டு இதற்காகக் கட்டப்பெற்றிருந்த ஈடுகாணம் ரூ. 1000 அரசாங்கத்தாரால் பறிமுதல் செய்யப்பட்டது. பின்பு 'ரூ. 5000 ஈடுகாணம் செலுத்திய பின்னரே பத்திரிகையை நடத்துதல் வேண்டும்' என அரசாங்கத்தார் செய்தி போக்கினர். அவ்வீடுகாணமும் விரைவிலே செலுத்தப்பெற்றது. பத்திரிகையும் முன்போலவே தொண்டாற்றிற்று. சிறந்த தொண்டினை ஆற்றத்தொடங்கிய இப்பத்திரிகைக்கு உண்டான இடையூறுகள் பல. இப்பத்திரிகையின் வாயிலாய்த் திரு. வி. க. தமிழ் நாட்டிற்குச் செய்த சேவை மிகப்பெரிது. இவர் இதினின்றும் விலகி, 1920-ஆம் ஆண்டு 'நவசக்தி'யைத் தோற்றுவித்ததை முன்னர்க் கண்டோம்.

திரு. வி. கலியாணசுந்தரனார் நண்பர் பலரோடு ஊர் ஊராய்ச் சுற்றுப்பிரயாணம் செய்து, காங்கிரஸ் கொள்கைகளைப் பரப்பலானார்; பல காங்கிரஸ் கூட்டங்களில் தலைமை வகித்துத் தலைமைப் பேருரைகள் ஆற்றினார். இவரோடு சேர்ந்து தமிழ் நாட்டிற்குத் தொண்டாற்றியவருள் திரு. ஈ. வே. இராமசாமி நாயக்கர், டாக்டர். வரதராஜுலு நாயுடு, திரு. C. ராஜகோபாலாச்சாரியார் ஆகிய மூவரும் முக்கியமானவர். 1921-ஆம் ஆண்டு எழுந்த சத்தியாக்கிரக இயக்கத்தில் முதலியார் ஈடுபட்டு உழைத்த உழைப்பு மிகப்பெரிது. சாத்தூர் முதலிய இடங்களில் 144-ஆவது சட்டம் தாண்டவமாடிற்று. அவ்விடங்களில் முதலியார்

பல மேடைகளில் பேசியும் அச்சட்டத்தால் இவர் ஒரு சிறிதும் பாதிக்கப்படவில்லை. தமிழ் நாட்டுக் காரியக்கமிட்டி வேலூரில் கூடியிருந்தபொழுது முதலியாரைத் தவிர மற்றத் தலைவர்களுக்கு 144-ஆவது சட்டம் வழங்கப்பெற்றது. இதற்குக் காரணம் அரசாங்கத்தார் இவரை அரசியற் சார்பாகப் பிடிக்க எண்ணவில்லையென்றும், சென்னையில் அன்று நடந்து வந்த 'மில்' கலகத்தின் சார்பாகப் பிடிக்கக் கருதினர் என்றும் சிலர் கூறுகின்றனர்.

காஞ்சீபுரத்தில் 1925-ஆம் ஆண்டு நிகழ்ந்த மாகாண மகா நாட்டில் தலைமை வகித்து இவர் ஆற்றிய பேருரையும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளும் முக்கியமானவை. *

விஷயாலோசனைக் கூட்டத்தில் சட்டசபை நுழைவைப்பற்றி விவாதம் நிகழ்ந்தது. முடிவில் சட்டசபை நுழைவைக் காங்கிரஸ் ஏற்கவேண்டுமென்னும் தீர்மானமே நிறைவேறிற்று. அதனை அடிப்படையாகக்கொண்டு திரு. எஸ். இராமநாதன் வகுப்புரிமைத் தீர்மானத்தைக் கொண்டுவந்தார். அது பலமாக எதிர்க்கப்பெற்றுத் தோல்வியுற்றது.

பின்னர் மகாநாடு கூடியதும் விஷயாலோசனைக் கூட்டத்தில் நிறைவேறிய பாடலிபுரத் தீர்மானத்தின் ஒரு பகுதியாகிய 'சட்ட சபை நுழைவைக் காங்கிரஸ் ஏற்க வேண்டும்' என்னும் தீர்மானம்

---

* இந்நிகழ்ச்சிகளைத் திரு. வி. க. எழுதிய 'எனது நிலை' என்னும் மகுடம் புனைந்த கட்டுரை இனிது விளக்கும்.

எடுத்துக்கொள்ளப்பட்டது. அது திரு.ஈ.வே. இராம சாமி நாயக்கர், திரு. C. ராஜகோபாலாச்சாரியார் முதலியோரால் பலமாக எதிர்க்கப்பெற்று வீழ்ச்சி யுற்றது. பின்னர் விஷயாலோசனைக் கூட்டத்தில் தோல்வியுற்ற வகுப்புரிமைத் தீர்மானத்தை மகா நாட்டில் திரு. எஸ். இராமநாதன் கொண்டுவந்தார். 'விஷயாலோசனைக் கூட்டத்தில் நிறைவேறிய சட்ட சபை நுழைவைக் காங்கிரஸ் ஏற்க வேண்டும்' என்னும் தீர்மானம் மகாநாட்டில் தோல்வியுற்றமை யால், சட்டசபை நுழைவில்லாவிடத்து வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் பயனற்றதென்றும், வகுப்பு வித்தியாசத்தைக் காங்கிரசில் கொண்டுவந்து புகுத் துவது தகுதியுடையதன்றென்றும் கூறி, தலைவர்க் குள்ள தனிப்பட்ட உரிமையால் முதலியார் அத்தீர் மானத்தைத் தாமே தள்ளிவிட்டார். இச்செய்கை யால் திரு. இராமசாமி நாயக்கருக்கு இவர்மீது கோபம் பொங்கி எழுந்தது. பிராமணரல்லாதார்க் குப் பிற்காலத்தில் வரக்கூடிய தீங்கினை அறியாராய்ப் பிராமணர்களின் சூழ்ச்சிக்கு இரையாகி முதலியார் அத்தீர்மானத்தைத் தள்ளிவிட்டார் எனத் திரு. நாயக்கர் கருதினர். அதனல், அவர் அம்மகாநாட்டி லேயே முதலியாரை வைது, அவ்விடத்தினின்றும் விலகி வெளியேறினர். அதுமுதல் திரு. இராமசாமி நாயக்கர் நடத்தி வந்த 'குடியரசு' கலியாணசுந்தர ஞரின் கொள்கைகளையும், செய்கைகளையும் பல வாருகக் கண்டித்து வந்தது. 'நவசக்தி'யும் 'குடி யரசு' கேள்விகளுக்குத் தக்கவாறு பதில் இறுக்க

லாயிற்று. இருவருக்கும் நிகழ்ந்த சொற்போரின் சிலகூறுகள் திரு. முதலியார் எழுதிய 'தமிழ்ச் சோலை' இரண்டாம் பகுதியில் இடம்பெற்றுள்ளன.

திரு. இராமசாமி நாயக்கரும், கலியாணசுந்தரனாரும் சொற்போர் புரிந்தனர். ஆனால், இருவரிடத்தும் பேரன்பு நிகழலாயிற்று. திரு. இராமசாமி நாயக்கரை முதலியார் தம் உயிர்க்கினிய நண்பராகக் கருதினார்; அவ்விதமே நடைமுறையிலும் காட்டினார். திரு. நாயக்கரும் முதலியாரைத் தம் உயிர் நண்பராகக் கொண்டனர். இதனை வலியுறுத்தும் நிகழ்ச்சிகள் பல உள.

சின்னாட்களுக்குப் பிறகு காங்கிரஸ் கொள்கைகளில் சில மாறலாயின. அதனால், கலியாண சுந்தரனாரும் 1926-ஆம் வருடம் காரியக் கூட்டத்தினின்றும் விலகிச் சாதாரண அங்கத்தினராய் 1929-ஆம் ஆண்டு வரையிலும் இருந்துவந்தார். காங்கிரஸ் அங்கத்தினராய் இன்று முதலியார் இல்லை எனினும், காங்கிரசின் வளர்ச்சியில் இவருக்குப் பெரு விருப்புண்டு.

## 5. முதலியாரும் தொழிலாளரும்

இந்தியத் தொழிலாளர் இயக்க வரலாறு இன்னும் மகிழ்ச்சியூட்டும் நிலையில் எழுதப்பெற வில்லை. பத்திரிகைகளில் வெளிவந்த செய்திகளும், சிற்சிலர் எழுதிய குறிப்புக்களும், திரு. வி. கலியாண சுந்தரனார் 'இந்தியாவும் விடுதலையும்' என்னும் மகுடம் தாங்கிய தம் நூலுள் எழுதிய இந்தியத் தொழிலாளர் இயக்க வரலாற்றுச் சுருக்கமுமே இன்று நமக்குத் துணைபுரியும் நிலையில் இருக் கின்றன. இவற்றால் அறியக்கிடக்கும் குறிப்புத் தொகுதி இப்பேரியக்கக் கடலின் ஒரு திவலையே யாகும். ஆதலின், ஒரு தனி நூல் வேண்டும்.

1908-ஆம் ஆண்டு சுதேச இயக்கத்தால் நாட்டிடை எழுந்த பெருங்கிளர்ச்சி, பார்லிமெண்டு அங்கத்தினர் சிலரை இந்தியா நோக்குமாறு தூண்டிற்று. அவருள் தொழிற்கட்சித் தலைவர் கீர்ஹார்டியும் ஒருவர். அவர் சென்னையில் தங்கிய காலை பொருள்கள் வாங்கும்பொருட்டு ஸ்பென்சர் கம்பெனிக்குச் செல்லுதலுண்டு. அந்நாள் சுந்தர னார் அக்கம்பெனியில் 'கிளார்க்' பதவி தாங்கிப் பணியாற்றி வந்தார். அப்பெருந்தலைவரை நேரிற் காணும் பேறு சுந்தரனார்க்குக் கிடைத்தது. பத்திரி கைகளில் கீர்ஹார்டியின் வரலாற்றுச் சுருக்கம் வெளிவந்தது. அவர் தோற்றமும் வரலாற்றுச்

சுருக்கமும் முதலியார் உள்ளத்தே படிந்து ஒரு புது உணர்ச்சியைத் தோற்றுவித்தன.

அது முதல் அன்பர் சுந்தரனுர் மேல் நாட்டுத் தொழிலாளர் இயக்க வரலாறுகளையும், தொழிலாளரைப்பற்றி எழுந்த நூல்களையும் படிக்கலானுர். அப்பயிற்சியால் இவர் உள்ளத்தே எழுந்த உணர்ச்சிகள் மிகப் பல. அவை வாய்ப்பின்மையால், உள்ளத்தின் ஒரு பாங்கர் ஒடுங்கி நின்றன.

சென்னைச் சூளைப் பட்டாளத்தில் 'வேங்கடேச குணமிர்த வர்ஷணி' என்னும் ஒரு சபை சமயத் தொண்டு ஆற்றி வந்தது. அச்சபைக்குத் திரு. செல்வபதி செட்டியார் காரியதரிசியாராயிருந்து தொண்டு புரிந்து வந்தார். ஒரு நாள் அவர் அன்பர் கலியாணசுந்தரனுரை அச்சபையின் சார்பில் ஓர் உரை நிகழ்த்துமாறு அழைக்க வெஸ்லி கல்லூரியை அடைந்தார். அப்பொழுது முதலியார் அக்கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியர் பதவியை வகித்திருந்தனர். திரு. செட்டியார் வேண்டுகோட்கு முதலியாரும் இசைந்தனர்; குறிப்பிட்ட நாள் 'வேங்கடேச குணமிர்த வர்ஷணி' சபையை நண்ணிப் பேருரை ஆற்றினுர். அக்கூட்டத்திற்கு வந்திருந்தோருள் பெரும்பாலோர் தொழிலாளரே. அன்னுர் முதலியார் உரையால் பெரிதும் கவரப்பெற்றனர். அதனுல், முதலியார் பலமுறை அச்சபையின் சார்பில் பேசும் வாய்ப்புப் பெற்ருர். நாளுக்கு நாள் தொழிலாளர் கூட்டம் பெருகிற்று.

1917 - ஆம் ஆண்டு சுந்தரனுர் கல்லூரி வேலையைவிடுத்துத் 'தேசபக்தன்' ஆசிரிய பீடத்தில் அமர்ந்தார். அந்நாள் வெளிவந்த ஐரோப்பிய யுத்த நிகழ்ச்சிகளும், ருஷ்யச் செய்திகளும் இவர் உள்ளத்தைக் கவர்ந்தன.

சென்னை மாகாணச் சங்கத் தலைவராயிருந்த திவான்பகதூர் கேசவப் பிள்ளையோடு முதலியார் அச்சங்கத் தொடர்பால் நெருங்கிப் பழகி வரலானுர். திவான்பகதூர் பிள்ளை 'குத்தி'யினின்றும் சென்னையை நோக்கும்பொழுதெல்லாம் முதலியாரைக் கண்டு பேசுதல் வழக்கம். அவரால் மில் தொழிலாளர் குறைபாடுகள் 'இந்தியன் பேட்டிரியட்டு' என்னும் பத்திரிகையில் எழுதப்பெற்று வந்தன. அவற்றுள் சில 'தேசபக்தனி' லும் மொழிபெயர்க்கப் பெற்றன. திவான்பகதூர் கேசவப் பிள்ளையோடு திரு. செல்வபதி செட்டியாரும், திரு. ஜி. ராமாஞ்சலு நாயுடுவும், சுந்தரனுரும் நெருங்கிப் பழகினர். பெரும்பாலும் அவர்களால் மில் அதிகாரிகள் போக்கும், தொழிலாளர் குறைபாடுகளுமே பேசப்பட்டு வந்தன.

அப்பேச்சின் விளைவால் 1918-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 2-ஆம் தேதி ஐங்காராமாயம்மாள் பங்களாவில் வேங்கடேச குணமிர்த வர்ஷணி சபையின் சார்பில் தொழிலாளர் கூட்டமொன்று கூட்டப்பெற்றது. தொழிலாளர் ஆயிரக்கணக்கில் போந்து கூட்டத்தைச் சிறப்பித்தனர். அன்று ஜனுப் குலாமி அமீத் என்பவர் 'கூட்டுறவு' என்

னும் பொருள்பற்றிப் பேசினர். பின்பு சுந்தரனுர் மேல் நாட்டில் தொழிலாளர் இயக்கம் தோன்றிய வரலாற்றினையும், பொருளாதார விடுதலையின் மேன்மையினையும், தொழிலாளர் சங்கம் ஒன்று நிறுவவேண்டுவதன் அவசியத்தையும் விளக்கிக் கூறினர். தொழிலாளர் மனத்தே அந்நாள் அரும்பிய உணர்ச்சி இன்றும் நின்று நிலவுகிறது. அக் கூட்டத்திற்குத் தலைமை வகித்தவர் ஓர் அரசாங்க உத்தியோகஸ்தர். அவர் சமயக்கூட்டம் எனக் கருதித் தலைமை ஏற்ருர். அன்பர்கள் பேசிய பேச்சு அவர்க்கு வெறுப்பை உண்டாக்கிற்று. அதனுல், அவர் இவர்கள் பேச்சிற்கு மறுப்புரை இறுதியில் வழங்கினுர். மறுப்புக்கு மறுப்பு, திரு. செல்வபதி செட்டியாரால் வழங்கப் பெற்றது. கூட்டமும் கலைந்தது.

திவான்பகதூர் கேசவப் பிள்ளை சென்னை சேர்ந்ததும் சுந்தரனுர் அவரைக் கண்டு தொழிற் சங்கமொன்று நிறுவவேண்டுவதன் அவசியத்தைத் தெரிவித்தார். திவான்பகதூர் பிள்ளையும் தோழர்கள் செல்வபதி செட்டியாரும், ராமாஞ்சலு நாயுடுவும் தம்மைக் கண்டு அப்பொருள்பற்றிப் பேசினுர்கள் என முதலியாருக்குக் கூறினுர். அவர் அளித்த ஊக்கத்தால் மேற்படி பங்களாவில் தொழிலாளர்க்கு ஆக்கந்தரும் கூட்டங்கள் பல கூட்டப் பெற்றன. அக்கூட்டங்களில் திரு. வாடியா ஆங்கிலத்தில் நிகழ்த்திய உரையைச் சுந்தரனுர் மொழி பெயர்த்துக் கூறிவந்தார். திவான்பகதூர் கேசவப்

பிள்ளையின் விருப்பத்திற்கிணங்கித் தொழிலாளர் சங்கத்திற்குத் தலைமை வகிக்க, திரு. வாடியா இணங்கினர்.

1918-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 27-ஆந் தேதி சனிக்கிழமை, 'சென்னைத் தொழிலாளர் சங்கம்' நிறுவப்பட்டது. திரு. வாடியா தலைவராகவும், திரு. வி. கலியாணசுந்தரனும், திவான்பகதூர் கேசவப்பிள்ளையும், வேறு சிலரும் உதவித் தலைவராகவும், தோழர் செல்வபதி செட்டியாரும், ராமாஞ்சலு நாயுடுவும் காரியதரிசியராகவும் தெரிந்தெடுக்கப்பட்டனர். அன்று முதல் தொழிலாளர் சங்கம் கடனாற்றத் தொடங்கிற்று. முதலியார் காங்கிரஸ் சார்பாக வெளியூர்கட்குச் சென்று பேசியபொழுதெல்லாம் தொழிலாளர் இயக்கத்திற்கு ஆக்கந் தேடி வரலானர். இவர் பேச்சாலும், தொழிலாளர் இயக்கத்தின் நலம் கருதிப் பணியாற்றிய பிறர் பேச்சாலும் நாடெங்கும் பல சங்கங்கள் நிறுவப் பெற்றன. அவைகளுள் குறிப்பிடத்தக்கன மின்சாரத் தொழிலாளர் சங்கம், எம். & எஸ். எம். தொழிலாளர் சங்கம், மண்ணெண்ணெய்த் தொழிலாளர் சங்கம், டிராம்வேத் தொழிலாளர் சங்கம், அலுமினியத் தொழிலாளர் சங்கம், ஐரோப்பிய வீட்டுத் தொழிலாளர் சங்கம், தென்னிந்திய இரயில்வேத் தொழிலாளர் சங்கம் (நாகை), கோவை நெசவுத் தொழிலாளர் சங்கம் முதலியன. அந்நாள் முதலியாரோடு ஒத்துழைத்தவர்கள், தோழர்கள்

சக்கரைச் செட்டியார், இ. எல். ஐயர், என். தண்ட பாணிப் பிள்ளை, ராஜகோபாலாச்சாரியார், ஆதி நாராயண செட்டியார், எம். எஸ். சுப்பிரமணிய ஐயர், வி. ஓ. சிதம்பரம் பிள்ளை, டாக்டர் நடேச முதலியார், எம். ஸி. ராஜா, கஸ்தூரிரங்க ஐயங்கார், என். எஸ். இராமசாமி ஐயங்கார் (கோவை), ஜார்ஜ் ஜோசப் (மதுரை) முதலியவர்கள். தென்னிந்தியாவில் எழுந்த தொழிற்கிளர்ச்சி நாடு முழுவதும் பரவிற்று. தொழிற்சங்கங்களில் தொண்டு புரிய வந்த தலைவர்களில் பெரும்பாலோர் காங்கிரஸ்காரர்; ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்தவரும் சிலர் இருந்தனர். எவரும் தத்தம் கட்சிப் பிணக்குகளைக் கொண்டு வந்து சங்கங்களில் நுழைக்கவில்லை. தொழிற்சங்கம் தொடக்கத்தில் ஆற்றிய சேவையை ஒருவிதச் சமுதாய ஊழியமாகவும், சீவகாருணியத் தொண்டாகவும் மக்கள் கருதினர்கள். சங்கக் கூட்டங்களில் இராப் பாடசாலை அமைப்பு, சுகாதாரம், சம்பளக் குறைவு இன்னோரன்ன பொருள்களே பேசப்பெற்று வந்தன.

சென்னைத் தொழிலாளர் சங்கம் தோன்றிய சில வாரங்களுக்குள் எதிர்ப்புக்கள் தோன்றின. அன்று சென்னைக் கவர்னராயிருந்த லார்டு பென்ட்லண்டு திரு. வாடியாவை வரவழைத்து எச்சரிக்கை செய்தனர்.

'இந்தியாவுக்குத் தொழிலாளர் இயக்கம் வேண்டுவது இல்லை' என்று கருதிச் சிலர் 'மெயில்' பத்திரிகையில் பல கட்டுரைகள் வெளியிட்டனர்.

'நியூ இந்தியாவி' லும், 'தேசபக்தனி' லும் அவற்றுக்கு மறுப்புக்கள் எழுதப்பெற்றன.

தொழிலாளர் இயக்கந்தோன்றிய சில மாதங்களுக்குள் கதவடைப்புக்களும், வேலை நிறுத்தங்களும் நிகழ்ந்தன. வேலை நிறுத்தத்தில் சென்னைத் தொழிலாளர் சங்கம், டிராம்வேத் தொழிலாளர் சங்கம், மண்ணெண்ணெய்த் தொழிலாளர் சங்கம், அச்சுத் தொழிலாளர் சங்கம் ஆகிய நான்கும் குறிப்பிடத்தக்கன. வேலை நிறுத்த விவரங்களும், பிறவும் திரு. வாடியாவின் வீர உரைகளைக்கொண்ட 'லேபர் இன் மெட்ராஸ்' என்னும் நூலில் பரக்கக் காணலாம்.

1919-ஆம் ஆண்டு மே மாதம் திரு. வாடியா கூட்டுப் பார்லிமெண்டு முன்பு இந்திய அரசாங்க மசோதாவைப்பற்றி இந்தியத் தொழிலாளர் சார்பில் பேசவும், வாஷிங்டனில் அந்நாள் நடைபெற்ற சர்வ தேசத் தொழிலாளர் மகாநாட்டிற்கு விஜயம் செய்யவும் ஐரோப்பா செல்லவேண்டி இருந்தமையால், திருமதி சரோஜனி தேவியாரின் தங்கைமார்களுள் ஒருவராகிய திருமதி மிருநாளினி சட்டோபாத்யாயா என்பவரைத் தொழிலாளர் இயக்கத்தில் அவர் ஈடுபடுத்திச் சென்றனர். அவ்வம்மையார் தொழிலாளர் இயக்கத்திற்குப் பெருந்தொண்டு ஆற்றினார். மத்தியத் தொழிலாளர் சங்கமொன்று நிறுவவேண்டுவதன் அவசியத்தை அம்மையார் அடிக்கடி அனைவர்க்கும் வலியுறுத்தி வந்தார். இவ்வெண்ணத்திற்கு அடிகோலியவர் பெஸண்டு அம்மையார்.

1920-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 21-ஆந் தேதி சென்னையில் லாட் கோவிந்த தாஸ் பங்களாவில் முதன்முறை மாகாணத் தொழிலாளர் மகாநாடு கூடிற்று. அம்மகாநாட்டிற்குத் திவான்பகதூர் கேசவப்பிள்ளை தலைமை வகித்தார். சுந்தரனார்க்கு வரவேற்புத் தலைமைப் பதவி கொடுக்கப்பெற்றது. தொழிலாளர் பிரதிநிதிகள் வெளியூரினின்றும் உள்ளூரினின்றும் மகாநாட்டிற்குப் போந்தனர். வரவேற்புத் தலைமையுரையில் திரு. வி. க.*மத்தியச் சங்கமொன்று நிறுவப்படல் வேண்டும் என்று வலியுறுத்திக் கூறினார்.

1920-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 4-ஆம் தேதி இம்மகாநாடு கூடியதன் பயனாய், மத்தியத் தொழிலாளர் சங்கம் நிறுவப்பெற்றது. தலைமைப் பதவியை ஏற்குமாறு வேண்டிக்கொள்ளப்பெற்றோர் அனைவரும் அப்பதவியை ஏற்க மறுத்தனர். அங்ஙனம்

---

*"தொழிலாளர் சங்கங்கள் ஆங்காங்கே நாடோறும் தோன்றி வருகின்றன. அவைகளை வழிதுறையில்லாமல் வளர்த்து வருவதால், பல இடர்கள் இடையில் நேர்ந்துவிடும். ஆதலால், எல்லாத் தொழிற்சங்கங்கட்கும் நடுநாயகமாக ஒரு மத்தியச் சங்கமிருத்தல் வேண்டும். அச்சங்கத்தில் எல்லாத் தொழிற்சங்கங்களும் சேர்தல் வேண்டும். மத்தியச் சங்கம் ஒன்றிருப்பது தொழிலாளர் இயக்கத்துக்கு ஆக்கந் தேடுவதாகும். ஒரு மத்தியச் சங்கம் அமைக்க ஸ்ரீமதி மிருநாளினி சட்டோபாத்யாயா செய்துவரும் முயற்சிக்கு இம்மகாநாடு துணை செய்யுமென்று நம்புகிறேன்."

மறுத்தவருள் சுந்தரனாரும் ஒருவர். எனினும் இறுதியில் அனைவரும் சுந்தரனாரையே பதவியேற்றுக் கடனாற்றுமாறு வேண்டினர். மேலும், 'திரு. வாடியா இந்தியா திரும்பியவுடன் சுந்தரனார் தலைவர் பதவியினின்றும் விலகுதல் கூடாது என்னும் உறுதி மொழியும் அவர்பால் பெறல் வேண்டும்' என உரத்த குரலில் பலர் பேசினர். முடிவில் கலியாண சுந்தரனார் எல்லோராலும் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டார். திருமதி மிருநாளினி காரியதரிசியார் பதவியை ஏற்றார்.

அக்காலை பெரும்பாலும் எல்லாச் சங்கங்களும் மத்தியச் சங்கத்தில் அங்கம் பெற்றிருந்தன. தலைவர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் இருந்த ஒற்றுமை பெரிதும் பாராட்டற்குரியது. அவ்வொற்றுமையால் செயற்கருஞ்செயல்கள் நிகழ்ந்தன.

ஒவ்வொரு வாரமும் கடற்கரையில் மத்தியத் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் கூட்டம் கூட்டப் பெற்றது. ஒவ்வொரு சங்கத் தொழிலாளரும் தத்தம் சங்க நிலையத்தினின்றும் ஆர்வத்துடனும் ஆரவாரத்துடனும் அணியணியாக நின்று கொடிகளைத் தாங்கி ஊர்வலம் வந்து கடற்கரையைச் சேரலாயினர். தொண்டர் படைகள் காக்கி உடை அணிந்து, தடிகளை ஏந்தி, ஒழுங்கு முறையைக் காத்து வந்தன. அக்காட்சி சிலர்க்கு மகிழ்ச்சியையும், சிலர்க்கு வெறுப்பையும் தந்து வந்தது. கூட்டங்களில் சங்கத் தலைவரும், தொழிலாளரும் பேசுதல் வழக்கம். ஒரு சங்கத்துக்குரிய தொழிற்

சாலையில் வேலை நிறுத்தமோ கதவடைப்போ நிகழும்பொழுது எல்லாச் சங்கத்தாரும் அநு தாபங்காட்டி வருதல் வழக்கம். ஊர்வலங்களி லும் கூட்டங்களிலும் அவர் கலந்து கொண்டதோ டன்றி வேலை நிறுத்தம் செய்யவும் சித்தமாய் இருந்தனர். இந்நிகழ்ச்சி வில்லிங்டன் பிரபு வைத் தொழிலாளர் சட்டமொன்று செய்யுமாறு தூண்டிற்று. விசாரணைக் கூட்டம் ஒன்று காணு மாறு ஜஸ்டிஸ் குமாரசாமி சாஸ்திரியாரைக் கவர் னர் வேண்டினர். அக்கூட்டத்திற்குச் சாஸ்திரி யாரே தலைவராயிருத்தல் வேண்டும் என்பது கவர்னர் விருப்பம். 'ஜஸ்டிஸ் குமாரசாமி சாஸ்திரி யாரைத் தலைவராகப் பெறும் விசாரணைக் கூட்டம் நன்மை புரிதற்கு ஏற்றதாகாது' எனத் தொழிலா ளர் கருதிக் கிளர்ச்சி செய்தனர். விசாரணைக் கூட்டத்தில் தொழிலாளர் பிரதிநிதிகளும் இருத்தல் வேண்டும் எனவும், தலைவர் தெரிந்தெடுப்பில் மத்தி யச் சங்கத்தின் கலப்பும் இருத்தல் வேண்டும் எனவும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

இங்கிலையில் திரு. வாடியா இந்தியா திரும்பினர். அவருக்கு மத்தியச் சங்கத்தின் சார்பில் ஒரு பெரு வரவேற்பளிக்கப்பட்டது.

மத்தியச் சங்கம் வழக்கம் போல ஒரு நாள் கூடிற்று. பலர் வரவில்லை. திரு. வி. கலியாணசுந்தர ஞர் தலைமைப் பதவியினின்றும் தாம் விலகுவதாக வும், தமக்குப் பதிலாக, திரு. வாடியாவைத் தலைவ ராக ஏற்றுக்கொள்ளுமாறும் வேண்டுதல் செய்தார்.

அவர் வேண்டுகோள் நிறைவேறிற்று. இந்நிகழ்ச்சி பத்திரிகைகளில் மறுநாள் வெளிவந்தது. அங்கத்தினர் பலர் இதனை விரும்பவில்லை. அதனால், அவர்கள் தங்களுக்கு அழைப்புத்தாள் அனுப்பாமலே கூட்டப்பெற்ற கூட்டம் உறுதி செய்த தீர்மானம் தகுதியற்றதென்றும், வேறொரு கூட்டம் கூட்டப்பெற வேண்டும் என்றும் முதலியாரிடத்துக் கூறினர். பெரும்பான்மையோர் விருப்பத்துக்கிணங்கி வேறொரு கூட்டம் கூட்டப்பெற்றது. அக்கூட்டத்தில் முன்செய்த தீர்மானம் தள்ளப்பெற்றுத் தோழர் சக்கரைச் செட்டியார் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டார். திரு. வாடியாமீது எவர்க்கும் வெறுப்பு இல்லை. சங்கம் தியசாபிகல் சொஸைட்டி. மயமாக ஆதல் கூடாது என்னும் எண்ணத்தாலும், அன்னி பெஸண்டு அம்மையார்மீது அக்கால அரசியலார் கொண்ட வெறுப்பாலும் இந்நிகழ்ச்சி நிகழ்ந்ததெனப் பலர் கருதுகின்றனர். ஆக்கந்தரக் கூடிய பெரியோர் உதவியின்மையால் மத்தியச் சங்கம் வீழ்ச்சியுற்றது.

'தொழிலாளர் இயக்கத்திற்கு வேர் போன்றமர்ந்து முதலாளிகளைத் தொல்லையில் ஆழ்த்துவது சென்னைத் தொழிலாளர் சங்கம்' என்று பண முதலாளிகள் கருதினார்கள். தாய்ச் சங்கமாகிய சென்னைத் தொழிலாளர் சங்கத்தை ஒழித்துவிட வேண்டும் என்று சிலர் பேசியும் எழுதியும் வந்தனர்.

பக்கிங்காம் மில்லில் சிறு சிறு குழப்பங்கள் தோன்றலாயின. 20-10-1920ல் ஓர் ஐரோப்பிய உத்தியோகஸ்தர் ரிவால்வருடன் தம் டிபார்ட்மெண்டினுள் நுழைந்தார். சிலர் வெறுப்புற்று அந்த ரிவால்வரைப் பிடுங்கி வெளியில் எறிந்தனர். அந்நிகழ்ச்சியைத் தொடர்ந்து சில கோரப் பேச்சுக்கள் நிகழ்ந்தன. கலகம் விளைந்தது. இந்நிகழ்ச்சியினை வேறு சிலர் வேறு வகையாகக் கூறுகின்றனர். உண்மை அறிதற்கு வழியில்லை. ஆனால், உத்தியோகஸ்தர் ரிவால்வருடன் வந்ததும், அந்த ரிவால்வர் போலீஸாரிடம் ஒப்படைக்கப் பெற்றதும் எல்லோராலும் அபிப்பிராய பேதம் இன்றிக் கூறப்பட்டு வருகின்றன.

பக்கிங்காம் மில் மூடப்பட்டது. கலகம் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே வந்தது. பாதுகாப்புக்கென்று சங்க நிருவாக சபையிலிருந்து தோழர்கள் B. P. வாடியா, திரு. வி. கலியாணசுந்தரனார், ஜி. ராமாஞ்சலு நாயுடு, வேதநாதம், எஸ். நடேச முதலியார், வரதராஜ நாயகர், கேசவலு நாயுடு, சைட் ஜலால், கோ. மா. நடேச நாயகர், நமசிவாயம் பிள்ளை ஆகிய பதின்மரைக்கொண்ட சிறு கூட்டம் கூட்டப்பெற்றது. அக்கூட்டத்தின் மீது பென்னி கம்பெனியார் ஹைகோர்ட்டில் (11-11-1920) வழக்குத் தொடுத்தனர்; கலகத்திற்குக் காரணம் அச்சிறு கூட்டமே எனக் கருதினர். அக்கலகத்தால் ஏற்பட்ட நஷ்டத்திற்கு ஈடாக 75,000 ரூபாய் அப்பதின்மரும் செலுத்த வேண்டும்

எனவும், வேலை நிறுத்தம் முடியும் வரையில் சங்கத்தில் அன்னார் வாய் திறத்தல் கூடாதெனவும் கேட்டனர்.

தொழிலாளர் சார்பில் ஸர். ஸி. பி. இராமசாமி ஐயர், ஸர். அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர், திவான் பகதூர் சல்லா குருசாமி செட்டியார், திரு. வேங்கடரமணராவ் நாயுடு, திரு. எஸ். துரைசாமி ஐயர் முதலியோர் வழக்கை நடத்த நின்றனர். ஜஸ்டிஸ் பிலிப்ஸ் இவ்வழக்கிற்கு நீதிபதியாய் அமர்ந்தார்.

வேலை நிறுத்தம் முடியும் வரையில் பக்கிங்காம் மில் தொழிலாளர் கூட்டத்தில் மேற்குறிப்பிடப்பெற்ற பதின்மரும் பேசுதல் கூடாது என்னும் வாய்ப்பூட்டு முதலில் வழங்கப்பெற்றது. வழக்கு விசாரணையில் இருந்த வரையிலும் கூட்டங்களெல்லாம் தொழிலாளர்களாலேயே நடத்தப்பெற்று வந்தன. மில் அதிகாரிகள் வேறு ஆட்கள் உதவியால் வேலையைப் போலீஸ் துணைகொண்டு நடத்தி வந்தார்கள். போலீஸ் லாரிகளில் வெளித் தொழிலாளர் போதல் வருதல் வழக்கம். அந்த லாரிகளைக் கூட்டங்கூட்டமாக நின்று தொழிலாளர் கண்டு வந்தனர். பல சமயங்களில் கைதட்டிச் சிரித்தனர் என்றும், லாரிகள்மீது கற்கள் எறிந்தனர் என்றும் சிலர் கூறுகின்றனர். போலீஸார் கூட்டத்தை ஒரு நாள் சுட்டனர். அந்நிகழ்ச்சியால் இருவர் உயிர் துறந்தனர்; சிலர் காயமுற்றனர்.

சங்கத்திற்கென்று பாங்கில் ஒரு பெருந்தொகை இருந்தது. அத்தொகை சங்கத் தீர்மானத்தின்படி

தொழிலாளர்க்கு விநியோகம் செய்யப்பட்டது. இந் நிகழ்ச்சி, விசாரணை முடிவதற்கு முன்னே நிகழ்ந்தது.

பிரமுகர் பலர் தொழிலாளர்க்கும் பென்னி கம்பெனியாருக்கும் இடைநின்று சமாதானம் செய்ய முயன்றனர். அந்நாள் சென்னை போந்திருந்த கர்னல் வெட்ஜ்வுட்டும் பஞ்சாயத்துச் செய்ய முயன்றார். பயன் விளையவில்லை.

பின்னர், தொழிலாளர் சார்பில் திரு. வாடியா வும், கம்பெனியார் சார்பில் ஸர். ஸிம்ஸனும், திரு. ஸிம்மண்ட்ஸூம், நடுநிலையில் டாக்டர் அன்னி பெஸண்டு அம்மையாரும், திரு. புருஷோத்தம தாஸூம் நின்று ஒரு முடிவுக்கு வந்தனர். முடிவினைத் தொழிலாளர்க்கு அறிவிப்பதற்கு முன் சகோதரியார் மிருநாளினி வழக்கம் போலக் கலியாணசுந்தரனுர் வீட்டை அடைந்தார். மோட்டார் வண்டி வாயிலில் நின்றது. வண்டியில் சகோதரி யாரோடு வழக்கமாக வரும் திரு. வாடியா காணப் படவில்லை. "வாடியாவுக்கு என்ன?" என்று முதலி யார் அவ்வம்மையாரைக் கேட்டனர். "வாடியா வுக்கு ஒன்றுமில்லை; பஞ்சாயத்து நடந்தது; நல்ல முடிவு ஏற்பட்டிருக்கிறது; புறப்படுங்கள்; பேசிக் கொண்டே போகலாம்" என்று அவ்வம்மையார் கூறினர். சகோதரியார் மேற்குறிப்பிடப்பெற்ற ஐவர் சேர்ந்து நல்ல முடிவு செய்தனர் என்று கூறி னரேயொழிய, விவரத்தைக் கூறவில்லை. வண்டி 'நியூ இந்தியா' நிலையத்தை அடைந்தது. முதலியாரை

எதிர்பார்த்துக்கொண்டிருந்த அன்பர்கள் வாடியாவும், ராமாஞ்சலு நாயுடுவும் வண்டியில் ஏறினுர்கள். முதலியார் திரு. வாடியாவை முடிவைப்பற்றி விசாரித்தார். அவர், 'முடிவு நல்ல முடிவு; விரிவாகக் கூட்டத்தில் சொல்லுகிறேன்' என்று சொன்னுர். வண்டி கோகுல தாஸ் பங்களாவை நோக்கி ஓடிற்று. அங்குத் திரு. புருஷோத்தம தாஸ் தங்கி இருந்தார். வண்டி பங்களாவை நண்ணியதும் வண்டியினின்றும் திரு. வாடியா இறங்கி, திரு. தாஸினிடம் சிறிது நேரம் பேசித் திரும்பினர். சமாதானம் ஏற்பட்டிருப்பதைத் தொழிலாளர் ஒருவாறு அறிந்தனர். அதனுல், சங்கத்தில் பெருங்கூட்டம் கூடியிருந்தது. திரு. வாடியா சிறிது நேரம் தொழிலாளரை நோக்கிச் சமாதான முடிவுகளைப் பற்றிக் கூறினுர். 'நல்ல முடிவு; நீங்கள் எல்லோரும் வேலைக்குச் செல்லுங்கள். பதின்மூன்று பேர் இப்பொழுது சேர்த்துக்கொள்ளப்படமாட்டார். அவரும் சில நாட்களுள் சேர்த்துக்கொள்ளப்படுவார். நான் இரண்டொரு நாட்களில் மேனுட்டிற்குச் செல்ல வேண்டியிருக்கிறது. இப்பொழுதுள்ள அமைப்பின் விதமே சங்கம் நடைபெறும். மில் அதிகாரிகளாலும் நம் சங்க அமைப்பு அங்கீகரிக்கப்படும். திரு. வி. க. பார்த்துக்கொள்வார்' என்று கூறி விரைவாக வண்டியில் ஏறினுர். வண்டியில் சமாதான நிபந்தனைகளைக் கொண்ட தாள்களைத் திரு. வி. க. பார்க்க விரும்பி, திரு. வாடியாவைக் கேட்டனர். பெஸண்டு அம்மையாரிடம் அவை

இருப்பதாக அவர் கூறினார். முதலியாருக்கு அந்நிலையில் எவ்வித ஐயமும் தோன்றவில்லை. திரு. வாடியா சங்கக் கூட்டத்தில் வெளியிட்ட நிபந்தனைகள் பத்திரிகைகளில் வெளிவந்தன. ஐவர் நிபந்தனைகள் 'நியூ இந்தியா'வில் மட்டும் வெளியாயின. அவைகட்கும் திரு. வாடியா கூறியவற்றிற்கும் வேற்றுமை இருந்தது. முதலியார் திரு. வாடியாவை நண்ணி வேற்றுமையின் காரணம் யாதென வினவினார். திரு. வாடியா தாம் கூறியவையே உண்மை எனவும், 'நியூ இந்தியா'வில் வெளி வந்தவை தவறு எனவும் கூறி, அவரை அனுப்பிவிட்டார். அடுத்த நாள் தொழிலாளர் வேலைக்குச் சென்றனர். நிபந்தனைகள் பத்திரிகைகளில் வேறுபட்டிருந்தமையைக் கண்ட சில தலைவர்கள், தொழிலாளரைக் கிளப்பி விட்டார்கள். பத்திரிகைகளில் மறுப்புக்கள் தோன்றின. பலவித மறுப்புக்களுக்கிடையே திரு. வாடியா (31-1-21) பம்பாய்க்குப் புறப்பட்டார்.

பின்னர், டாக்டர் பெஸண்டு அம்மையார் விரும்பியவாறு திரு. வி. க. கம்பெனியாருக்கு ஒரு கடிதம் எழுதினார். நியூ இந்தியாவில் வெளிவந்த நிபந்தனைகள் பஞ்சாயத்தாரால் முடிவு செய்யப்பட்டன என்பதும், திரு. வி. எல். சாஸ்திரியார் எழுதிய பகிரங்கக் கடிதம் உண்மையை எடுத்துக் காட்டியதேயாகும் என்பதும் விளங்கலாயின. இவைகள் எல்லாவற்றையும் உடன்கொண்ட சில கட்டுரைகள் 'நவசக்தி'யில் வெளிவந்தன. இவைகள் தொழி

லாளர்க்கும், பிறர்க்கும் உண்மையை விளக்கமாக எடுத்துக்காட்டின.

தியசாபிகல் சொஸைட்டியில் உண்டாகிய பிணக்கால் திரு. வாடியா மேனுடு போக நேர்ந்தது என்பதும், ஆயிரக்கணக்கான மக்களை வெளியே துன்ப நிலையில் விடுத்துத் தாம் போகத் துணிய வில்லையென்பதும், தம் மனத்திற்கிசையா நிபந்தனை களை ஒருவாறு ஏற்றுத் தொழிலாளரை மில்லுக்குள் அனுப்ப இசைந்தனர் என்பதும் பின்னர்த் தெரிய லாயின. திரு. வாடியாவிடத்தில் தொழிலாளர் கொண்ட வெறுப்பு இவ்விஷயத்தை அறிந்த பின்னர் ஓரளவு மாறிற்று.

திரு. வி. கலியாணசுந்தரனர் 1921ல் சங்கத் திற்குத் தலைவராய் அமர்ந்து பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்ட சில பேருரைகள் தொழிலாளர்க்கு ஆற்றினர். அவ்வுரைகள் தொழி லாளர்க்கு ஒருவிதப் புது உணர்ச்சியைத் தந்தன. பணக்காரர் பலர் முதலியார் பொருளாதாரப் பேச்சினை வெறுத்தனர்.

ஸர். டி. சதாசிவ ஐயருடன் திரு. வி. கலியாண சுந்தரனர் சமயத் தொண்டாற்ற 17-5-1921ல் திருப்பாதிரிப்புலியூர்க்குச் சென்றிருந்தார். ' கர்னுட் டிக் மில் கார்டிங் டிபார்ட்மெண்டில் குழப்பம்' என் னும் தலைப்புக்கொண்ட ஒரு செய்தி பத்திரிகை களில் வெளிவந்தது. அதனைக் கண்டதும் திரு. வி. க. சென்னை போந்தார். கார்டிங் டிபார்ட்மெண்டில் சம்பளத்தைப் பற்றி எழுந்த தகராறும், அதை

யொட்டி ஆதித்திராவிடர் இருவர் தள்ளப்பெற்ற மையும் அவருக்கு அறிவிக்கப்பட்டன. சங்கத்தின் கட்டளையின்றித் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்தது தவறு எனக் கூறி வேலைக்குப் போகுமாறு முதலியார் தொழிலாளர்க்கு அறிவுறுத்தினர். அவர் விருப்பத்திற்கிணங்கித் தொழிலாளர் வேலைக்குச் சென்றனர். எல்லாத் தொழிலாளர் போனஸூம் பறிமுதல் செய்யப்பட்டதாக மில் அதிகாரிகளால் அறிக்கை செய்யப்பெற்றது. கார்டிங் டிபார்ட்மெண்டில் தொழிலாளர் செய்த குற்றத்திற்காக எல்லோரையும் தண்டிப்பது தகுதியாகாதென்று யாவரும் கருதினர். அதனுல் தொழிலாளர், சங்கம் போந்து நடந்ததை அறிவித்தனர். ஒரு டிபார்ட்மெண்டு தொழிலாளர் செய்த தவறுதலுக்காக எல்லாத் தொழிலாளரையும் தண்டித்தல் நியாயம் அன்று என்றும், மற்றத் தொழிலாளர் தாமே வலிந்து வேலை நிறுத்தம் செய்யவில்லை என்றும், மில் மூடப்பட்டமையால் அவர் வெளியே நிற்றல் நேர்ந்தது என்றும், அவர்தம் போனஸைப் பறிமுதல் செய்தது முறை அன்று என்றும் சங்கம் நிறைவேற்றிய தீர்மானம் மில் அதிகாரிகளுக்குப் போக்கப்பெற்றது. மில் அதிகாரிகள் அதற்குச் செவி சாய்க்கவில்லை. லேபர் கமிஷனர்க்கும், தொழில் இலாக்காப் பொறுப்பேற்றிருந்த திரு. கே. சீனிவாச ஐயங்காருக்கும் தொழிலாளர் விண்ணப்பம் செய்தனர். மில் நடைமுறையில் தலையிடுதற்குத் தமக்கு அதிகாரம் இல்லையென்றும், அதற்குரிய சட்டமும் இல்லையென்றும் கூறி,

அன்னுர் வாளா இருந்தனர். அரசாங்கமும் இவ் விஷயத்தில் தலையிட விரும்பவில்லை.

3-6-'21ல் பக்கிங்காம் மில் தொழிலாளர் ஒன்றுசேர்ந்து ஒரு டிபார்ட்மெண்டின்பொருட்டு முழு மில் தொழிலாளரைத் தண்டித்தது தவறென்றும், கர்னுட்டிக் மில் தொழிலாளர்க்கு நியாயம் வழங்க வேண்டுமென்றும், 11-ஆந் தேதிக்குள் பதில் வாராவிடின் தாமும் வேலைநிறுத்தம் செய்ய நேரிடும் என்றும், மில் அதிகாரிகளுக்குச் சங்கத்தின் வாயிலாகத் தெரிவித்தனர். குறிப்பிடப்பெற்ற நாளுக்குள் பதில் கிடைக்கவில்லை. அதனுல், பக்கிங்காம் மில் தொழிலாளர் 14-ஆந் தேதி சங்க நிலையத்தில் கூடி 20-ஆந் தேதி அனுதாப முறையில் தாம் வேலை நிறுத்தம் செய்ய உறுதி கொண்டிருப்பதாக மில் அதிகாரிகட்கும் அரசாங்கத்தாருக்கும் அறிவித்தனர். பக்கிங்காம் மில் தொழிலாளர் 20-ஆந் தேதி வேலை நிறுத்தம் செய்யமாட்டாரென முதலாளி கூட்டம் எண்ணிற்று. 19-ஆந் தேதி கூடிய கூட்டத்தில் கலியாணசுந்தரனுர் நிலைமையை நன்கு விளக்கினுர். தொழிலாளர் பிடிவாதமாய் நின்று மறுநாள் மில்லுக்குப் போகவில்லை. லேபர் கமிஷனர், போலீஸ் கமிஷனர் முதலியோர் வேடிக்கை பார்த்தவண்ணம் நின்றனர். போராட்டத்தை நேரிய முறையில் நடத்தச் சுந்தரனுர் உளங்கொண்டார். அவருடன் தோழர்கள் சக்கரைச் செட்டியாரும், ஈ. எல். ஐயரும் கலந்துகொண்டனர்.

தொழிலாளர் சங்கத்தை அடியோடு சாய்த்து விட அநேகவித முறைகள் கோலப் பெற்றன.

தொழிலாளரிடை வகுப்புப் பிணக்கு அடிகோலப் பெற்றது. அதற்குச் சிலர் இரையாயினர். ஆதித் திராவிடரும் வேறு சிலரும் மில்லுக்குச் செல்ல லாயினர். அன்னார்க்குப் பலவித நலன்கள் செய்யப் பட்டன. அவர்கள் ஒருவிதக் குறையுமில்லாமல் தொழிற்சாலைக்குச் செல்லவும், வீடு திரும்பவும் பற்பல ஏற்பாடுகள் மில் அதிகாரிகளால் செய்யப் பெற்றன. கூட்டங்கூட்டமாக ஆதித்திராவிடர்கள் மில்லுக்குச் செல்லுங்கால் தொழிலாளர் நின்று வேடிக்கை பார்த்தல் வழக்கம். ஆயிரக்கணக்கான தொழிலாளர் மில்லுக்குள் போகாது பலவித இடையூறுகளுக்கும் பட்டினிக்கும் இரையாயினர். அவர்களுக்குப் பதிலாகப் பலர் வெளியூர்களி லிருந்து கொண்டுவரப் பெற்றனர். நாளுக்குநாள் கருங்காலிகள் செய்த செயல்களால் கத்தி வெட்டுக் களும், வெடி வீச்சுக்களும், வீடுகளில் தீ வைப்பும், பலவித மூர்க்கச் செயல்களும் நிகழ்ந்தன. இந்நிலை திரு. வி. கலியாணசுந்தரனாரைப் பெருந்தொல்லை யில் மூழ்கச் செய்தது. காங்கிரஸ் தொண்டை அவர் விடுக்கவில்லை; தமிழ் நாட்டில் சத்தியாக்கிரகத் தொண்டையும் செய்தே வந்தார். இவர் நிலை பலரைக் கவலைக் கடலில் ஆழச் செய்தது.

4-7-'21ல் நீலகிரியினின்றும் வில்லிங்டன் பிரபு சென்னை சேர்ந்தார். அவர் தொழிலாளர்க்கு வேறுபட்ட கருத்துடையார் பலரைக் கண்டு முதலில் பேசினர்; பின்பு பல தலைவர்களை வர வழைத்து ஆலோசனை செய்தார். மறுநாள் மாலை

6 மணிக்குக் கவர்னர் மாளிகைக்கு முதலியார் அழைக்கப்பெற்ருர். அவ்வழைப்புக்கு இணங்கிக் கவர்னர் மாளிகையை முதலியார் அடைந்தார். இவர்க்கு முன்னமே தோழர்கள் சக்கரைச் செட்டியார், இ. எல். ஐயர், ஜலில்கான், அப்துல் ஹகீம் ஆகிய நால்வர் அங்கே போந்திருந்தனர். 6 மணிக்கு மந்திரிமார் வலப்பக்கமும், நிர்வாக அங்கத்தினர் இடப்பக்கமும், வில்லிங்டன் பிரபு நடுவிலுமாக அமர்ந்தனர். மேல் நாட்டு முறைப்படி வந்தன முறைகள் நடந்தேறின. வில்லிங்டன் பிரபு மேற்குறிப்பிட்ட முதலியார் உள்ளிட்ட ஐவரையும் பார்த்து, "தொழிலாளர் வேலைநிறுத்தம் காரணமாகச் சென்னையில் கத்திக் குத்துக்களும், வெடிகளும், வீடு தீ வைப்பும் நடந்து வருகின்றன. இவற்றுக்கெல்லாம் மூலமாயிருப்பவர்கள் நீங்களே என்று அறிகின்றேன். அமைதியைக் காக்கும் பொறுப்பு அரசாங்கத்திற்கு இருக்கின்றது........" என்று கூறினர். ஐவரில் ஒருவர், "யாம் காரணம் அல்லேம்" என்ருர். மற்ருெருவர், "நீதிமன்றம் இருக்கிறதே!" என்ருர். வேருெருவர், "விசாரணை வேண்டும்" என்ருர். இன்னெருவர், "தொழிலாளர் சங்கத்திற்கும் எனக்கும் தொடர்பேயில்லை. யான் தவருக அழைக்கப்பெற்றேன்" என்ருர். திரு. வி. கலியாணசுந்தரனர், "எல்லோருக்கும் நியாயத் தீர்ப்பு நாள் இருக்கின்றது" என்று கூறினர். நியாயத் தீர்ப்பு நாள் என்னும் சொற்ருெடர் வில்லிங்டன் பிரபுவின் மனத்தை உறுத்திற்று.

சுந்தரனாரை உற்று நோக்கிவிட்டு அவர், " பொழு தாகிறது, யான் உங்களை எச்சரிக்கை செய்யவே அழைத்தேன். தீ வைப்பு முதலிய கோரச் செயல் கள் இனி நிகழுமாயின் நீங்கள் நாடு கடத்தப்படு வீர்கள் " என்று அழுத்தமாகக் கூறி, அனைவர்க்கும் விடை தந்தார்.

அன்றிரவு டாக்டர் நடேச முதலியார் சுந்தர னாரைக் கண்டு வில்லிங்டன் பிரபு ஐவரையும் நாடு கடத்தும் உறுதிகொண்டே சென்னை நோக்கினர் எனவும், ஸர் தியாகராச செட்டியாரும், தலைமை அமைச்சர் பனகல் ராஜாவும் நாடு கடத்தும் செயலால் தமது கட்சிக்குக் கெட்ட பெயர் விளையும் என்றும், ஒத்துழையாமையும், மலையாளக் குழப்ப மும் கனன்று நிகழுங்கால் நாடு கடத்தலும் நிகழு மாயின் நகரத்தில் குழப்பம் பெருகும் என்றும், தாம் பதவியினின்றும் விலகலும் நேரும் என்றும் கூறித் தடுத்தமையால் நாடு கடத்தும் எண்ணத் தைக் கவர்னர் விட்டுவிட்டார் எனவும் கூறினர். " செட்டியாரும், பனகலும் எனக்கு நன்மை செய்ய வில்லை. தீமையே செய்தனர் " என்று முதலியார் சொல்லி டாக்டரை அனுப்பினர்.

தொழிலாளரில் ஒரு சிலர்மீது போலீஸார் வழக்குத் தொடுத்தனர். கலக நிகழ்ச்சிகளை விசாரித் தற்பொருட்டு ஒரு கமிட்டி நிறுவப்பெற்றது. அதில் ஜஸ்டிஸ் எய்லிங் என்பவர் தலைவராயும், ஸர் வேங்கடரத்தின நாயுடுவும், கர்னூல் நரசிம் மாச்சாரியும் அங்கத்தவராயும் அமர்ந்தனர்.

விசாரணை 10-8-'21ல் ஆரம்பமாயிற்று. கலக நிகழ்ச்சிகள் மாஜிஸ்டிரேட்டுக் கோர்ட்டில் விசாரணையிலிருத்தலை எடுத்துக்காட்டிச் சங்கம் விசாரணையில் கலந்துகொள்ள மறுத்துவிட்டது. எயிலிங் கமிட்டி விசாரணையால் பயன் ஒன்றும் விளையவில்லை. அறிக்கை மட்டும் வெளிவந்தது.

அச்சமயத்தில் • போலீஸ் கமிஷனரிடமிருந்து 'சட்டத்தையும் அமைதியையும் காக்க அரசாங்கத்தார் செய்யத் தக்கனவற்றைச் செய்வர்' என்னும் கருத்துக்கொண்ட கட்டளை பிறந்தது.

இக்கலகக் குழப்பத்தால் தொழிலாளர்மீது 29-8-1921ல் துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பெற்றது. நூற்றுக்கணக்கான மக்கள் காயமுற்றார்கள். எழுவர் இறந்தனர். இறந்தவருள் ஒருவர் பெண்பாலார். இச்சண்டை சென்னையைக் கலக்கிவிட்டது. மில்லைச் சூழ்ந்துள்ள பாகங்களில் சுமார் 6 மாத காலம் பயம் தாண்டவம் புரிந்தது.

இவ்வித நிலையில் ராஜா ஸர் ராமசாமி முதலியார் பங்களாவில் ஸர் பி. தியாகராச செட்டியார் தொழிலாளர்க்கு ராஜதந்திரம் பொதுளிய ஓர் உரை செய்தார். ஸர் பி. தி. செட்டியார், "நண்பர்களே, இனி உங்களுக்குப் பிடிவாதம் வேண்டா. நீங்கள் சிறிது ராஜதந்திரம் கற்றுக்கொள்ளல் வேண்டும். நாளுக்கு நாள் மில்களில் புதிய ஆட்கள் சேர்க்கப்படுகிறார்கள். புதியவர்கள் தொழிலைப் பயின்றுவிடுவார்களானால், பின் உங்களுக்குப் பெருங்கஷ்டம் விளையும். போலீஸ் இரா

ணுவக் காவல்களைக் கடந்து அவர்களைத் தடுத்தல் உங்களால் இயலாது. நீங்கள் எல்லோரும் வேலைக்குச் செல்வீர்களானால், அவர்கள் உடனே வீட்டிற்கு அனுப்பப்படுவார்கள். நன்மை விளையும். உங்கள் சங்கமும் சாகாது" எனக் கூறித் தொழிலாளர் மனத்தை மாற்றினர். ஸர் செட்டியாரின் ராஜதந்திர சொற்பெருக்கில் தொழிலாளர் மூழ்கி வேலைக்குச் சென்றனர். செட்டியார் நினைத்த வண்ணம் தொழிலாளர்க்கு ஆக்கமே விளைந்தது. தொழிலாளர் சங்கமும் பென்னிக் கம்பெனியாரால் ஏற்றுக்கொள்ளப் பெற்றது.

1921-ஆம் ஆண்டு நேர்ந்த வேலை நிறுத்தத்திற்குப் பிறகு போட்டிச் சங்கம் தலைகாட்டிற்று. அச்சங்கத்தால் தொழிற்சங்கத்திற்குத் தீங்கு விளைதல் கூடும் என்பதை உணராத சிலர் அச்சங்கத்திற் சேர்ந்து உழைக்கின்றனர். மில் தொழிலாளிகள் தயவால் அச்சங்கம் நடக்கின்றது. மேற்குறிப்பிட்ட வேலை நிறுத்தத்தின் பயனாகப் பலர் வேலை இழந்தனர். அவர்கட்கு வெளியூர்களில் வேலை தரும் முயற்சியில் தலைவர்கள் ஈடுபட்டார்கள். தொழிலாளர் குடும்பங்கள் பல துன்பங்களுக்கு உள்ளாயின.

1920ல் சென்னை ஹைகோர்ட்டில் தலைவர்கள் மீது தொடுக்கப்பெற்ற வழக்கின் பயனாகத் தொழிற் சங்கச் சட்டம், தொழிற் சச்சரவுச் சட்டம், தொழிலாளர் நஷ்ட ஈட்டுச் சட்டம் முதலிய சட்டங்கள் தோன்றின. அவைகளில் தொழிற்சங்கச் சட்டம்

முக்கியமானது. தொழிலாளர்க்கு நன்மை பயக்கும் சட்டங்கள் இன்னும் பல பிறத்தல் வேண்டும்.

1923-ஆம் ஆண்டு சுந்தரனுர், திரு. கோ. ம. நடேச நாயகரைத் தலைவராக அமர்த்தித் தாம் விலகினுர். திரு. நடேச நாயகருக்குப் பிறகு டாக்டர் ஜி. எஸ். அருண்டேலும் (1924 - 1926), திரு. பி. சிவராவும் (1926 - 1935) தலைவராய் அமர்ந்தனர். பின்னர்த் தொழிலாளர் விருப்பத்திற்கு இணங்கித் திரு. வி. க. சங்கத் தலைவரானுர்.

1939ல் சூளையில் மில் வேலை நிறுத்தம் நிகழ்ந்தது. அதைக் காரணமாகக்கொண்டு முதலாளிகள் அம்மில்லை மூடிவிட்டார்கள். மில் மூடப்பெற்றமைக்கு உரிய காரணம் வேலை நிறுத்தம் அன்று; மில்லின் கஷ்ட நஷ்ட நிலைமையேயாகும். வேலை நிறுத்தத்தின்போது தொழிலாளர் கைது செய்யப்பட்டனர். தொழிலாளர்கள் காங்கிரஸ் மந்திரி சபையின் உதவியை நாடினர். பயன் ஒன்றும் விளையவில்லை. ஆயிரக்கணக்கான தொழிலாளர் உதவியின்மையால் பொருள் முட்டுப்பாடுற்றனர். பட்டினி வாட்டச் சிலர் இறந்தனர். உதவி செய்ய அரசாங்கம் முன்வரவில்லை; பொது மக்களும் முன்வரவில்லை. தொழிலாளர்க்குச் சேரத் தக்க சம்பளத்திற்காக ரூபாய் 35,000க்குச் சங்கம் வழக்குத் தொடர்ந்தது. தொழிலாளர்க்கு அனுகூலமாகவே வழக்கு முடிந்தது. திரு. எஸ். பார்த்தசாரதி ஐயங்காரும், திரு. வி. கே. திருவேங்கட ஆச்சாரியாரும் இவ்வழக்கிற்கு உதவி செய்தனர்.

சூளை மில் தொழிலாளர் பலர்க்குப் பக்கிங்காம் கர்னட்டிக் மில்களிலும் வேறு இடங்களிலும் வேலை கிடைத்தது.

1942-ஆம் ஆண்டு மீண்டும் இடர்கள் உண்டாயின. கர்னட்டிக் மில் ஸ்பின்னிங் டிபார்ட்மெண்டில் சிறு வேலை நிறுத்தம் ஏற்பட்டிருந்தது. அதைத் தொடர்ந்து கதவடைப்பு ஏற்பட்டது. சட்டப்படி பதினன்கு நாட்களுக்கு முன் அறிக்கை செய்யப் பெருமையால், அது வேலை நிறுத்தம் என்றே கருதப்பெற்றது. 11-3-'42ல் போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். ஒன்பது பேர் உயிர் துறந்தனர். பலர் காயமுற்றனர். பின்னர்த் தலைவர்களின் சம்மதம் பெற்றுத் தொழிலாளர் வேலைக்குத் திரும்பினர். இறந்தவர் குடும்பங்களுக்குப் பண உதவி அளித்தற்காக ஒரு சிறு நிதி (727-8-0) சேர்க்கப்பெற்றது. அந்நிதி இறந்தவர் குடும்பங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்டது.

24-8-'42ல் மில்லுக்குள்ளே வேலை நிறுத்தம் நிகழ்ந்தது. பக்கிங்காம் கர்னட்டிக் மில்கள் மூடப்பட்டன. சங்கத் தலைவர்கள் தொழிலாளர்க்கு அறிவு புகட்டினர்கள். அதனல் அவர்கள் மீண்டும் வேலைக்குத் திரும்பினர்கள். 51 பேர் வேலையை இழந்தனர்.

1943-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 14-ஆந் தேதி சென்னைத் தொழிலாளர் சங்கம் 'வெள்ளி விழா'க் கொண்டாடிற்று.

திரு. வி. கலியாணசுந்தரனுர் தமக்குள்ள உடல் தளர்ச்சியாலும், இளைஞர் தம்பதவியை ஏற்றுப் பணியாற்றல் வேண்டும் என்னும் எண்ணத்தாலும் தலைமைப் பதவியைவிட்டு 30-5-'43ல் விலகினுர். சுந்தரனுர் பல காரணங்களைக்கொண்டு தலைமைப் பதவியை ஏற்பதும் விடுப்பதுமாய் இருந்தனரே யன்றிச் சங்கம் தோன்றியது முதல் இன்று வரையி லும் அதினின்றும் விலகவில்லை; 27-5-'43ல் முற்றி லும் விலக எண்ணினுராயினும், தொழிலாளர் இவரை விட்டு நீங்க விரும்பவில்லை. இன்றும் முதலியார் காரியக் கூட்டத்தில் அங்கத்தினராய் இருந்து வருகிருர்.

திரு. வி. கலியாணசுந்தரனுர் பலதுறைகளில் படிந்து தொண்டாற்றினுர். இவர் தொண்டின் பெரும்பகுதியை ஏற்று நின்றது தொழிலாளர் இயக்கமே. இவ்வியக்கத்தால் எழுந்த கலகங்கள் இவர் அமைதியைத் தாக்கின. ஆனுல், அவை தன்னலமற்று ஆன்மத் தூண்டுதலால் கடனுற்றிய இவர்பால் தோற்று ஒழிந்தன. இவர் தொழிலாளர்க் குச் செய்த தொண்டினைப் பாராட்டி எழுதிய அறிஞர் பலர். அவருள் இருவர் உரைகளை ஈண்டுத் தருகின்றேன்:

"சென்னைத் தொழிலாளர் சங்கம் இன் றைக்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னுல் ஆரம்பிக்கப்பட்டது. இந்தியாவிலேயே முதன் முதலில் அமைக்கப்பட்ட தொழிலாளர் சங்கம் இதுதான் என்று சொல்வார்கள். இதன் அமைப்

பில் பங்கு பெற்றவர்களில் முக்கியமான ஒருவர் திரு. வி. க.

"ஆரம்ப நாட்களில் சென்னைத் தொழிலாளர் சங்கத்திற்கு எத்தனையெத்தனையோ ஆபத்துக்கள் நேர்ந்தன. அந்த ஆபத்துக் காலத்திலெல்லாம் அளவிலாத தைரியத்துடன் எதிரிகளுக்கு முன்னால் திறந்த மார்புடன் நின்றவர் திரு. வி. க. முதலியார். ஒரு தடவை ஒரு பெருந்தொழிலாளர் கூட்டத்தில் போலீசார் துப்பாக்கிப் பிரயோகஞ்செய்து, நாலைந்து பேர் மாண்டார்கள். மாண்ட தொழிலாளிகளின் பிரேத ஊர்வலத்துக்குப் பத்தாயிரக் கணக்கில் தொழிலாளர்கள் கூடினார்கள் ; ஊர்வலத்தைப் போலீசார் தடுக்கவில்லை.

"இந்த விபரீத சம்பவங்களின்போதெல்லாம் போர்முனையின் முன்னணியில் நின்று திரு. வி. க. தொழிலாளர்களுக்குத் துணை புரிந்தார். எந்த நிமிஷத்திலும் தமது மார்பில் துப்பாக்கிக் குண்டு பாயக்கூடும் என்ற நிலையில் அவர் அஞ்சா நெஞ்சுடன் தொழிலாளருக்குத் தொண்டுசெய்தார்."*

—'கல்கி'

"திரு. வி. க. அன்புகனிந்தொழுகும் அரிய மனம் உடையவர் ; தீமைக்கு அஞ்சும் நெஞ்சு படைத்தவர் ; தொழிலாளர் மேடையில் பெருவீரராய் விளங்குபவர் ; குண்டுகள் வீச்சிடையே குன்றாத உள்ளத்தோடும் உழைப்பவர்.

---

* குமரி மலர்

போர் ஆரவாரம் எவ்வாறே எங்கும் பரவிவிடுகிறது. முன்னைய உலகப் போர் முடிந்த போது சென்னையில் நிகழ்ந்த தொழிற்போரைக் குறித்தோம். இப்போது நடக்கும் போரிடையும் தொழிற்போர் மூண்டது. குண்டு வீச்சுக்களையும் ஓராண்டுக்கு முன்னே நேரே கண்டோம். அப்போதும் திரு. வி. க.வே சென்னைத் தொழிற் சங்கத்தின் தலைவர். அமைதியாம் இவர் வடிவம் கொந்தளிப்பிடையே இயங்கிவரக் கண்டோம். அமைதியே முடிவில் வென்றது. இயற்கையின் போக்கு அது. இவர் வாழ்க்கையின் மறைபொருளும் அதுவே ஆம். "*

—திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், M.A., B.L., M.O.L.

தொழிலாளர் வெல்க! தொழிலாளர் வாழ்க!

---

* திரு. வி. க. மணிவிழாக் கண்ணி

# 6. விடுதலை வேட்கை

விடுதலை, அகவிடுதலை புறவிடுதலை என இரு வகைப்படும். அகவிடுதலையாவது ஆன்ம விடுதலை. இது,

‘பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு’ (350)

என எழுந்த மறைவழி நின்று இயற்றும் இடைவிடா இறை வழிபாட்டால் பெறத்தகுவது. ‘பற்றற்ருன் பற்றினைப் பற்றற்கு’ அமைந்துள்ள வழிகள் பல. அவற்றினைப்பற்றிக் ‘கடவுட் காட்சி’ என்னும் தலைப்பின்கீழ்க் காண்போம். அக விடுதலைக்கு அரண்செய்து நிற்பது புறவிடுதலையே. ‘புறவிடுதலையின் துணையின்றி அகவிடுதலை பெறக் கூடும்’ எனக் கருதுவாரும் உளர். ஆனுல், புற விடுதலையின் துணையால் அகவிடுதலை எளிதாதல் உன்னி நோக்கற்பாலது.

உறுதியான உள்ளமுடையார் எண்ணிலர் வாழும் நம்நாட்டில் அகவிடுதலை பெறுவார் இந் நாள் குறைந்துள்ளமைக்குக் காரணம் புறவிடுதலை இன்மையேயாகும். பயனிலாக் கட்டுப்பாட்டால், பிறவற்ருல் நசுக்குறும் மக்கள் உள்ளத்திருந்து எழும் துன்ப அலைகள் - ஏக்க அலைகள் - எங்கும் பரவி நிற்கின்றன. அவைகள் உறுதியான உள்ள

முடையாரைத் தாக்கி அவர்தம் உறுதியைக் குலைக்கின்றன; சோர்வையும், பயத்தையும் அளிக்கின்றன. அந்தோ! அன்னாரும் நாளடைவில் உள்ளக் கட்டற்று மற்றார்போல ஆகின்றார். ஆனால், மிகமிக உரம்பெற்ற உள்ளமுடையார் இவ்வலைகட்கு இரையாகார். இத்தகையோர் எத்துணைபேர் இருத்தல் இயலும்! இதனை உளங்கொண்டே நம் சுந்தரனாரும் 'அகவிடுதலைக்குப் புறவிடுதலை வேண்டற்பாலது. புறவிடுதலை இல்லாத இடத்தில் அகவிடுதலை உறுதல் அரிது' என 'இந்தியாவும் விடுதலையும்' என்னும் தம் நூலுள் கூறியுள்ளார்.

ஆதலின், நாம் முதலில் புறவிடுதலையில் கருத்தைச் செலுத்துவோம். இதற்கு ஆக்கம் அளிப்பன பல. அவற்றுள் நாட்டு விடுதலை, பெண்ணுரிமை, கலை வளர்ச்சி என்பன முக்கியமானவை.

## நாட்டு விடுதலை

குறிப்பிட்ட எல்லைக்குட்பட்ட நிலப்பரப்பு மட்டுமா நாடு? அன்று. அந்நிலப்பரப்பும், அதனுள் வாழும் மக்களும், அவர்தம் மொழியும், ஒழுக்கமும், பிறவும் சேர்ந்த ஒன்றே நாடாம்.* ஈண்டு 'நாட்டு விடுதலை' என்னும் தொடர்,

---

* "ஆசிரியர் பனம்பாரனார் நிலப் பரப்பைமட்டும் 'தமிழ் கூறு நல்லுலகத்து' என்று கூறினாரில்லை. அவர் அந்நிலப் பரப்பில் வாழும் மக்கள் வழக்க ஒழுக்கங்கள் முதலியவற்றை உளப்படுத்தியே, 'தமிழ் கூறு நல்லுலகத்து' என்றார். எனவே, தமிழ் நாடென்பது, தமிழ் மொழி பேசும் மக்கள் வாழும் வெறும் நிலப்பரப்பு மாத்

சிறப்பாகப் பிறர் ஆட்சியினின்றும், கட்டுப் பாட்டினின்றும் விடுபடுதலைக் குறிக்கின்றது. கட்டுப்பாடற்றது நாடாகாது. ஆனால், அக்கட்டுப் பாடு நாட்டு மக்களால் அமைக்கப்படுதற்கும் பிறரால் அமைக்கப்படுதற்கும் வேற்றுமையுண்டு. நாட்டு மக்களால் அமைக்கப்படும் கட்டுப்பாடு, காலநிலை நோக்கி ஆக்கம் பெறுதலும் பெருமையும் கொள்ளும். பிறரால் ஆக்கப்பெறும் கட்டுப் பாட்டின் நிலையை உலக சரித்திரம் நன்கு விளக்கி வருகின்றது. என் வீட்டு நிலையைப் பிறர் எவ்வாறு நன்கு அறிதல் இயலும்? அறியினும், அவர் விரைவில் நன்மை செய்ய முற்படுவரோ? இது மனித இயற்கை. பிறரைக் குறைகூறுதலில் பயனில்லை. ஆதலின், ஒரு நாட்டின் முன்னேற்றத் திற்குச் சுய ஆட்சி இன்றியமையாதது. இதனை உளங்கொண்டே ஆசிரியர் கலியாணசுந்தரனார்

---

திரமன்று, அம்மக்களின் நடை உடைகள், வழக்க ஒழுக் கங்கள், கல்வித் துறைகள், தொழில் முறைகள், அரசியல் நெறிகள், இன்னோரன்ன பல சேர்ந்த ஒன்றே தமிழ் நாடென்பது. **நாடு என்பது வெறும் நிலப்பரப்பு மட்டு மன்று. புராண நூல்கள் நாட்டுப் படலங் கூறுமிடத்து வெறும் நிலப்பரப்பை மட்டும் கூருது, மக்கள் வழக்க ஒழுக்கங்கள் தொழில் முறைகள் முதலியவற்றைக் கிளந்து கூறுவது கவனிக்கற்பாலது.** ஒவ்வொரு நாட்ட வர்க்குஞ் சிறப்பாகச் சில வழக்க ஒழுக்கங்களிருப்பது போலத் தமிழ் மக்கட்குஞ் சிறப்பாகச் சில வழக்க ஒழுக்கங்களிருக்கின்றன. அவைகளைக்கொண்ட ஒன்றே தமிழ் நாடாகும்.''—தமிழ்நாடும் நம்மாழ்வாரும், பக். 1.

1917-ஆம் ஆண்டே இம்முயற்சியில் தலைப்பட்டார்; உள்ளத்தெழுந்த உணர்ச்சி உந்திய நிலையால், உடலுறு வருத்தம் நோக்காது, தமிழ்நாடு முழுவதும் சுற்றிச் சுற்றி வீரமுழக்கம் செய்து, ஒடுங்கிக் கிடந்த தமிழரைத் தட்டி எழுப்பினர். இவர் ஆற்றிய வீர முழக்கமும், 'தேசபக்தன்', 'நவசக்தி' ஆகிய இரண்டு பத்திரிகைகள் வாயிலாக இவர் எழுதிய வீர உரைகளும், தமிழர் உள்ளத்தே நாட்டுரிமை வேட்கையைக் கால்கொள்ளுமாறு செய்தன. இன்றும் இளைஞரும் முதியோரும் இவர் படைத்த சொற்றொடர்களைச் சொல்லிச் சொல்லி இன்புறுகின்றனர். அவைகள் சின்னாளில் 'சுந்தரனார் சொற்றொடர்கள்' என்னும் சிறப்புப் பெயரைக் கொள்ளவும் கூடும். பண்டைத்தமிழர் வீரத்தை இந்நாள் தமிழர் உள்ளத்தில் நடம்புரியச் செய்த தமிழ்வீரரை வாழ்த்துகின்றேன்; வணங்குகின்றேன்.

## பெண்ணின் பெருமையும் உரிமையும்

'தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.' (56)

[தன்னையும் காத்துத் தன்னைக் கொண்ட கணவனையும் பேணி, நன்மை அமைந்த புகழ்களையும் படைத்துச் சோர்வின்மை உடையவளே பெண் என்று சொல்லப்படுவள்.—மணக்குடவர்.]

இக்குறளால் நாயனர், குடும்பப் பொறுப் பணைத்தினையும் பெண்ணின்பால் ஒப்படைத்திருக்

கின்றமை புலனுகின்றது. பெண், கற்பினின்றும் வழுவாமல் தன்னைக் காத்துக்கொள்கின்ருள் ; தன் கணவனைக் காக்கின்ருள். 'மனைவி கணவனைக் காக்கின்ருள்' என்னும் சொற்ருெடர் 'நான் மகன் ; எல்லாம் என்னுல் நிகழ்கின்றன' என எண்ணும் ஆண்மகனுக்குச் சிறிது வருத்தத்தைத் தரும் ; திகைப்பை அளிக்கும். உண்மை எப்பொழுதும் உள்ளத்தை உறுத்துதல் இயல்பு.

'தற்கொண்டான் பேணி' என்னும் தொடர்க்குப் பரிமேலழகர், 'தன்னைக் கொண்ட கணவனையும் உண்டி முதலியவற்ருல் உபசரித்து' எனப் பொருள் கூறினர். உடல் உரமுறுதற்கு உண்டி வேண்டற்பாலதே. துன்ப அலையால் தாக்குண்டு தலைவன் வருந்துங்காலை அறிவுடைய பெண் அளிக்கும் ஊக்கம் அவ்வுண்டியினும் சிறப்புடைத்தாகும். ஈண்டு நாயனுர் 'பேணி' என்னும் சொல்லைப் பெய் திருத்தலை ஊன்றி நோக்குதல்வேண்டும். இச்சொல் எண்ணுவார் எண்ணமெல்லாம் ஏற்று நிற்கின்றது. தன் உடலைக் காத்து, உணர்வுக்கு ஊக்கம் அளித்து, தான் செல்லும் நல்லாற்றிற்குத் துணை நிற்கும் பெண்ணினும் ஒருவனுக்குக் கண்காணும் தெய்வம் உண்டோ !

பெண் கொள்ளும் கடமை மிகப் பெரிது! தன்னைக் காத்துக்கொள்கின்ருள் ; தன் கணவனைக் காக்கின்ருள் ; குடும்பத்திற்குப் பெரும்புகழைப் படைக்கின்ருள் ; இத்துணை செயலேற்றும், சோர் வற்று நிற்கின்ருள். இப்பெண்ணைத் தெய்வமென்று

வழங்காது அறிஞர் எச்சொல்கொண்டு வழங்குவர்? இப்பெண்களின் தூய வடிவங்கள் - தன்னலக் கட்டற்ற வடிவங்கள் - சுந்தரனார் மனக்கண் முன் என்றும் காட்சி அளிக்கின்றன. அவைகளில் என்றும் ஒன்றும் மனத்தால் இவர் தம்மையும் பெண்ணென்றே பலர்க்கும் கூறுகின்றார்; *பெருங் கவிஞர்களையும் தீர்க்கதரிசியர்களையும் பெண்க ளென்றே கருதுகின்றார். ஏன்? அவர்கள் உருவமும் இவர்க்குப் பெண் உருவமாகவே தோன்றுகின்றது. ஆதலின் இவர் பெண்களைப் 'பெண்தெய்வம், பெண்தெய்வம்' என்று பலகாலும் கூறுவா ராகின்றார்.

இப்பெண்தெய்வம் கூடி வாழ்தற்கு ஓர் ஆண்தெய்வமும் வேண்டற்பாலதே.† தன்னலக் கட்டற்ற இருவர் கூடின் ஒருவராதல் ஒருதலை. தன்னலக்கட்டற்ற தலைவி, தன்னை மறக் கின்றாள்; தலைவனைத் தான் இருத்தற்குரிய இடமாகக் கொள்கின்றாள்; அவன் நினைப் பன்றி வேறு நினைப்பற்றவளாய் ஆகின்றாள். தன் னலமற்ற தலைவனும் அங்ஙனமே ஆகின்றான். ஆதலின், தலைவன் இருத்தற்குரிய இடம் தலைவி என்பதும், தலைவி இருத்தற்குரிய இடம் தலைவன் என்பதும் போதரும். இதனை உளங்கொண்டே

---

* 'பெண்ணின் பெருமை' மூன்றாம் பதிப்பு-பக். 22, 'ஆணில் பெண்மை'

† 'உள்ளொளி' முதற்பதிப்பு - பக். 115, 'காதலும் கடவுளும்'

இளங்கோ அடிகள், கோவலன் வெட்டுண்டு மாண்ட செய்தியைச் செவியுற்ற கண்ணகி நிலையைக் கூறியகாலை,

'கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
நிலைக்களம் காணுள் நெடுங்கணீர் உகுத்து'

எனக் கூறுவாராயினர். இக்கருத்தினை,

'கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்
திருநுதற்கு இல்லை இடம்' (1123)

எனவும்,

'நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து' (1128)

எனவும் எழுந்த திருவள்ளுவர் குறள்கள் நன்கு வலியுறுத்தும்.

திருவள்ளுவரையும், இளங்கோவடிகளையும் கடந்து திருத்தக்கதேவர் சிறிது மேற்செல்லுகின்ருர் :

'தன்னமர் காத லானும்
தையலும் மணந்த போதில்
பொன்னனுள் அமிர்த மாகப்
புகழ்வெய்யோன் பருகி யிட்டான்
மின்னவிர் பூணி னுனை
வேற்கணுர்க்கு இயற்றப் பட்ட
மன்னிய மதுவின் வாங்கி
மாதரும் பருகி யிட்டாள்.' (சிந். 190)

சச்சந்தன் தன் மனைவியை அமிர்தமாகப் பருகினான். அவளும் அவனை மதுவெனப் பருகினாள். ஒருவரையொருவர் விழுங்கினர். இருவரும் ஒருவராயினர். இருவர் என்னும் வழக்கு நீங்கிற்று. இதுவன்றோ உண்மைக் காதல் ! என்னே காதலின் திறம் !

*இருவர் ஒருவராம் நிலை திரு. வி. க. உள்ளத்தைக் கவர்ந்தது. இதன் உண்மையை இவர் தம் அனுபவத்திலும் கண்டார் ; இந்நிலையினை உலகினர் அனைவரும் எய்துதல்வேண்டும் எனக் கருதித் தாம் எழுதிய நூல்களிலெல்லாம் †இல்லற வாழ்வின் மேன்மையையும், உண்மைக் காதலின் திறத்தையும் பலப்பல முறையில் மக்கள் மனம் கொள்ளும் வண்ணம் எழுதியுள்ளார்.

'என்னொடு போந்த இளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்
கடுங்கதிர் வெம்மையிற் காதலன் தனக்கு
நடுங்குதுயர் எய்தி நாப்புலர வாடித்
தன்துயர் காணாத் தகைசால் பூங்கொடி
இன்துணை மகளிர்க்கு இன்றி அமையாக்
கற்புக்கடம் பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால் !'

என்று சாபானுக்கிரக ஆற்றல் பெற்ற கவுந்தியடி

* 'உள்ளொளி' முதற்பதிப்பு - பக். 113, 'ஓருயிர் ஈருடல்' ; திருக்குறள் - திரு. வி. க. விரிவுரை முதற் பதிப்பு - பக். 529, 'காதலால் இருமையறல்'

† 'உள்ளொளி' முதற்பதிப்பு - பக். 119, 'இயற்கை வாழ்க்கை' ; 'பெண்ணின் பெருமை' மூன்றும் பதிப்பு - பக். 121 - 132, 'இறை வழி'

களால் பெரிதும் பாராட்டப்பெற்ற கண்ணகியைக் கோவலன் விடுத்து மாதவியை நண்ணி, நாள் பல கழித்தான். அவன் பிரிவு கண்ணகியை வாட்டிற்று. என் செய்தாள் அவள்? தன் மனநிலையைப் பிறர் அறியாவண்ணம் வாழ்ந்தாள்; அவன் தன்னை அணுகும் நாளை எதிர் நோக்கி நின்றாள். சுருங்கக் கூறின், கற்புத்தெய்வம் தன் தெய்வம் நோக்கி நின்றதென்றே கூறல் வேண்டும். கோவலன் பிறர் பழிப்புக்கு ஆளாயினன் எனினும், கண்ணகிக்கு அவன் தெய்வமாகவே விளங்கினன்.

கண்ணகியின் பார்ப்பனத் தோழியாகிய தேவந்தி என்பவள், ஒருநாள் கண்ணகியின் நிலை கண்டு இரங்கி, அவளை நோக்கி, "நீ நின் தலைவனால் வெறுக்கப்பட்டாய் அல்லை; முற்பிறப்பில் கணவன் பொருட்டுக் காக்க வேண்டியதொரு நோன்பு தப்பினாய். அதனால், தீங்கு மிக்கது; அத்தீங்கும் கெடுவதாக! காவிரி கடலோடு எதிர்த்து அலைக்கும் சங்கமத்து அயலதாகிய நெய்தற்கானலிலே சோமகுண்டம், சூரியகுண்டம் என்னும் பெயர் கொண்ட இரண்டு தடாகங்கள் உள்ளன. அவைகளில் மூழ்கிக் காமவேள் கோட்டம் புக்கு அவனைத் தொழுதார், இப்பிறப்பில் தம் கணவரோடு பிரிவின்றி இருந்து, இவ்வுலக இன்பம் நுகர்வர்; மறுமையில் போக பூமியினும் போய்ப் பிறந்து தம் கணவரோடு அவ்வுலக இன்பம் துய்ப்பர். ஆதலான், யாமும் ஒருநாள் ஆடக்கடவோம்" என்று

கூறினுள். அவ்வுரையினைச் செவியுற்ற கண்ணகி *'பீடு அன்று' என இருந்தனள்.

'பீடு அன்று' எனக் கண்ணகி கூறிய சொற்ருெடர் கற்புடை மங்கைக்குக் கணவனையன்றி வேறு தொழத்தகு தெய்வம் இல்லை என்பதை நன்கு உணர்த்துகின்றது. இப்பெண்தெய்வத்தைப் பிரிந்துறைந்த கோவலன் மடமைதான் என்னே!

கோவலன், மாதவிபால் வெறுப்புண்டு கண்ணகியை நண்ணி, அவள்

**'வாடிய மேனி வருத்தங்கண்டு யாவும்**
**சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்**
**குலந்தரு வான்பொருட் குன்றம் தொலைந்த**
**இலம்பாடு நாணுத் தரும்எனக்கு'**

எனக் கூறினன். மாதவிக்குக் கொடுக்கும் பொருட் குறைபாட்டால் அவன் தளர்ந்து கூறினுன் எனக் கண்ணகி நினைந்து, ஒளி பொருந்திய முகத்தே நலம் பொருந்திய சிறிய முறுவலை விளைத்து, 'இன்னும் சிலம்புள; கொண்ம்' எனப் பகர்ந்தாள்.

கோவலன் கண்ணகியைப் பிரிந்தான்; வேறு பெண்ணோடு வாழ்ந்தான். மங்கையர் உள்ளத்தைக் கலக்குதற்கு இவைகளினும் வேறு வேண்டுவதில்லை. தன்னலமற்ற கண்ணகியின் உள்ளத்தை இவை கலக்கும் ஆற்றல் பெற்றில. கண்ணகி தன் காதற் கனியை - தெய்வத்தைக் கண்டு மகிழ்ந்தாள்.

---

* 'தெய்வந்தொழுதல் எங்கட்கு இயல்பு அன்று' —அடியார்க்குநல்லார்.

அவன் உளம் மகிழ்ந்து வாழும் நிலையை அவள் விரும்பினள் ; ஆதலின், தன்பாலுள்ள சிலம்புகளை விருப்பொடு கொடுக்க முன் வந்தாள். கண்ணகி யாகிய கற்புத் தெய்வத்திற்கு உரிய தெய்வமோ கோவலன் !

கோவலன் அழைப்புக்கிணங்கி அவள், அவன் சாயைபோலப் பின் தொடர்ந்தாள் ; தான் கண்ட தீய கனவையும் அவனுக்குக் கூறவில்லை ; அவ னொடு பொருந்தி வாழவே விரும்பினுள். இவள் கற்பின் திறத்தை என்னென்று புகழ்வது !

இக்கற்புத் தெய்வத்திற்கு ஒத்த தெய்வமாம் சேரன் செங்குட்டுவன் மனைவியின் அறிவையும், அத்தெய்வத்திற்குத் தெய்வமாய் நின்ற சேரன் செங்குட்டுவனின் உயரிய பண்பையும் இனிக் காண் போம் :

சேர மன்னனுகிய செங்குட்டுவன் மலைவளம் காண விரும்பி நாற்படை புடைசூழத் தன் மனைவியாகிய வேண்மாளுடனும், தம்பியாராகிய இளங்கோ அடிகளுடனும் வஞ்சி முற்றும் நீங்கிப் பேராற்றங்கரை இடுமணலெக்கர்பால் அமர்ந்தான். மலைமிசை வாழ்ந்த மக்கள் மலைதரு பொருள்கள் பலப்பல கொண்டு மன்னவன் அடிதொழுது,

**‘ஏழ்பிறப்பு அடியேம் வாழ்கநின் கொற்றம்**
**கான வேங்கைக் கீழோர் காரிகை**
**தான்முலை இழந்து தனித்துயர் எய்தி**
**வானவர் போற்ற மன்னொடும் கூடி**
**வானவர் போற்ற வானகம் பெற்றனள்**

**எந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ**
**நின்னாட்டு யாங்கள் நினைப்பினும் அறியேம்.'**

என்று கண்ணகி காதலனுடன் விமானத்தமர்ந்து சென்றமையை அறிவித்தார்கள். *அவ்வரலாற்றை அங்கு வீற்றிருந்த சீத்தலைச் சாத்தனார், அனைவர்க்

---

*' திண்திறல் வேந்தே செப்பக் கேளாய்
தீவினைச் சிலம்பு காரண மாக
ஆய்தொடி அரிவை கணவற்கு உற்றதும்
வலம்படு தானை மன்னன் முன்னர்ச்
சிலம்பொடு சென்ற சேயிழை வழக்கும்
செஞ்சிலம்பு எறிந்து தேவி முன்னர்
வஞ்சினம் சாற்றிய மாபெரும் பத்தினி
அஞ்சில் ஓதி அறிகெனப் பெயர்ந்து
முதிரா முலைமுகத்து எழுந்த தீயின்
மதுரை மூதூர் மாநகர் சுட்டதும்
அரிமான் ஏந்திய அமளிமிசை இருந்த
திருவீழ் மார்பின் தென்னர் கோமான்
தயங்கிணர்க் கோதை தன்துயர் பொறாஅன்
மயங்கினன் கொல்லென மலரடி வருடித்
தலைத்தாள் நெடுமொழி தன்செவி கேளாள்
கலக்கம் கொள்ளாள் கடுந்துயர் பொறாஅள்
மன்னவன் செல்வுழிச் செல்க யான்எனத்
தன்உயிர் கொண்டவன் உயிர்தே டினள்போல்
பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்
கொற்ற வேந்தன் கொடுங்கோல் தன்மை
இற்றெனக் காட்டி இறைக்குரைப் பனள்போல்
தன்னாட் டாங்கண் தனிமையின் செல்லாள்
நின்னாட்டு அகவயின் அடைந்தனள் நங்கை—'

கும் தெளிவாகக் கூறினர். அதுகேட்டு, மன்னன் பாண்டியற்கு உற்ற நிலை கண்டு வருந்திப் பின் வேண்மாளை நோக்கி,

'உயிருடன் சென்ற ஒருமகள் தன்னினும்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினும்
நன்னுதல் வியக்கும் நலத்தோர் யாரென'

வினவினன்.

வேண்மாளாம் பத்தினித் தெய்வத்திற்குத் தெய்வமாய் இலகிய செங்குட்டுவன், பத்தினித் தெய்வங்களின் பண்பு கூறுதற்குத் தன் காதலியாம் பத்தினித் தெய்வமன்றி வேறு எவரும் அருகர் அல்லர் என உணர்ந்தான்; ஆதலின், தன்னுடன் வந்திருந்த அமைச்சரைக் கேட்டிலன்; அறிவு சான்ற அடிகளாரைக் கேட்டிலன்.

நாயகன் கேட்ட அக்கேள்விக்கு வேண்மாள்,

'காதலன் துன்பம் காணது கழிந்த
மாதரோ பெருந்திரு உறுக வானகத்து
அத்திறம் நிற்கநம் அகல்நாடு அடைந்தஇப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்'

என மொழிந்தாள்.

'இருவருள் வியக்கும் நலத்தோர் யார்?' எனச் செங்குட்டுவன் கேட்ட கேள்விக்கு வேண்மாள் அளித்த விடையைக் கூர்ந்து நோக்குக. ஊன்றி நோக்குவார்க்கன்றி ஏனையோர்க்கு இவ்விடையுள் பொதுளிய பொருள் விளங்குதல் அருமை. நுண் ணறிவிலா ஒருவன் இவ்விடை பெற்றிருப்பின்,

'யான் கேட்டதற்கு இதுவோ விடை?' எனக் கடிந்து கூறி அவள் மனத்தைப் புண்படுத்தி யிருப்பன். என் செய்தான் செங்குட்டுவன்? அவள் நிலையை உணர்ந்தான்; இருவர் பண்பிலும் அவள் மனம் தோய்ந்து நின்றமையை அறிந்தான்; இருவருள் வியக்கும் நலத்தவர் இன்னூர் என்று துணிந்து கூறுதற்கு அவள் இசையாமையை ஓர்ந்தான்; கண்ணகியின் தெய்வக் காட்சியில் - வீரக் காட்சியில் - கற்புக் காட்சியில் அவள் படிந்து நின்றமையை, 'பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்' என்னும் தொடரால் உணர்ந் தான்; தன் நாடு அடைந்த பத்தினிக் கடவுட்குத் தன் கடன் இறுக்கும் பொறுப்பை அவள் உணர்த்தி யமைக்குப் பெரிதும் மகிழ்ந்தான். ஆதலின், மாலை வெண்குடை மன்னவன், அவள் குறிப்பினைக் கட் டளையெனக் கொண்டு, நூலறி புலவரை நோக்கி னன். இவனினும் பெண்ணின் பெருமையை உணர்ந்தார் உளரோ இவ்வுலகில்!

இனி வேண்மாள் உள்ளத்தில் படிந்த கற்புத் தெய்வங்களின் பண்பைச் சிறிது நோக்குவோம்: கணவன் இறந்த செய்தி செவியுற்ற உடனே கண் ணகி உயிர் விட்டிருத்தல் வேண்டும். அவள் அது செய்திலள். கள்வனல்லாத தன் கணவனைக் 'கள் வன்' என்று பிறர் கருதவிட்டு ஏகுமோ தன்னல மற்ற கற்புத் தெய்வம்! அவள் இறந்த கணவனை எழுப்பினுள்; அவனெடு உரையாடினுள்; பாண்டி யன் முன்சென்று வழக்குரைத்தாள்; கணவனுக்கு

நேர்ந்த பழியைப் போக்கினுள் ; வானவர் வடிவில் வந்த கணவனெடு வானவர்க்கு விருந்தாயினுள். தற்கொண்டான் பேணித் தகைசான்ற சொற்காத் தாள் கண்ணகி.

பாண்டியன் மனைவிக்கு அத்தகைய செயல் இல்லை. ஆதலின், அவள், 'மன்னவன் செல்வுழிச் செல்க யான்' எனத் தன்னுயிர்கொண்டு அவன் உயிர்தேடினள்போல் மாய்ந்தாள்.

இவ்விருவருள் ஒவ்வொருவரும் தத்தம் நிலை யில் உயர்ந்தோரே. எவரை வியக்கும் நலத்தவர் என்று கூறுவது ! ஆதலின், வேண்மாள் அவரவர் நிலைக்கு ஏற்பக் கூறினுள்.

இனி நாம் அறிந்த பெண்தெய்வங்களை நோக்குவோம் :

மனைவி மக்களை மறந்து வெளி வருவோர் எண்ணிலர். அவருள் பரந்த அன்பினுல், அருளால், ஆன்மத் தூண்டுதலால் வெளி வருவோர் சிலரே. செய்தவப் பயனுல் பற்றற்று இல்வாழ்வைத் துறப்போரைக் குறைகூறுதற்கு எவர்க்கும் உரிமை யில்லை. இத்தகைய பெரியோர் நிலை மிகப்பெரிது. இவரை எச்சொல்கொண்டு புகழ்வேன் ! இவ ருள் பகவான் இராமகிருஷ்ண பரமஹம்சர் ஒருவர். இவர் உள்ளத்துறவுடையார் ; பேரன்பர் ; பார்க்கு மிடந்தோறும் பரமனைக் கண்டார். அதனுல், மனை வாழ்வு இவர் மனத்தே நீங்கிற்று. இந்நிலையில் என் செய்தார் இவர் மனைவியார் ? கணவரையே தெய்வ மெனக் கருதும் கற்புத்தெய்வமாம் சாரதா தேவி

யார், இராமகிருஷ்ணரை நினைந்துநினைந்து சின்னாள் கழித்தார்; பின்னர் 'மனைவி' என்னும் மனப் பான்மையை விடுத்துக் கணவரைக் குருவாகக் கொண்டார்; பணியாற்றினார்; உலகு புகழ் பெரும் புகழ் எய்தினார்.

இன்னொரு பெண் தெய்வம் நம்முன் உலவுகின் றது. அத்தெய்வம் எது? காந்தியடிகளின் தர்ம பத்தினியாராம் கஸ்தூரி பாய் அம்மையாரே. காந்தியடிகள் பெற்ற பெருமைக்கும், பெறுகின்ற பெருமைக்கும், இனிப் பெறும் பெருமைக்கும் மூல காரணம் கஸ்தூரி பாய் அம்மையாராவர்.* இவ் வம்மையாரின் தூய வாழ்வை - தன்னலமற்ற

---

* "கஸ்தூரிபாயின் கற்பொழுக்கத் திறனே காந்தி யடிகளை மகாத்மாவாக்கிற்று. 'கொழுநனே தெய்வம்' என்னுங்கொள்கையில் அம்மையார் தலைசிறந்து விளங்கு கிறார். அடிகளும் அவ்வாறே கஸ்தூரிபாயைக் கருது கிறார். அவர், 'என் மனைவியைச் சகோதரியாகவும் தாயாகவும் தெய்வத் தன்மையுடையவளாகவும் கொள்கி றேன்' என்று பன்முறை கூறியிருக்கிறார். காந்தியடிகள் கஸ்தூரிபாய்மாட்டுத் தமக்குள்ள அன்பை ஹிந்து மதத் தின் மாண்புரைக்கு முகத்தான் ஓரிடத்தில் விளக்கியிருக் கிறார். 'எனது மனைவியிடம் எனக்கு எவ்வளவு அன் புண்டோ அவ்வளவு அன்பு எனக்கு ஹிந்து மதத்தி லுண்டு' என்பது அடிகளின் வாய்மொழி. இவ்வன்பால் விழுங்கப்பட்ட இருவருக்கும் நிகழும் உள்ளுறு புணர்ச்சி யில் எழுவதே காதலின்பமென்பது."

—'மனித வாழ்க்கையும் காந்தி அடிகளும்' நான்காம் பதிப்பு - பக். 171.

நிலையை-காந்தியடிகள் எழுதிய சுயசரித்திரத்திலும், திரு. வி. க. எழுதிய 'மனித வாழ்க்கையும் காந்தி அடிகளும்' என்னும் நூலிலும் பரக்கக் காணலாம்.

தன்னலமற்றுத் தலைவன் நினைப்பும் மைந்தர் நினைப்பும் மனத்தே குடிகொள்ள வாழும் பெண்ணின் உள்ளத்தில் உரிமை என்னும் சொல் இடம் பெறுமோ? உரிமை என்னும் சொல்லையும் அதன் பொருளையும் கனவிலும் எண்ணாத பெண்ணிற்குக் கேடு சூழும் மனிதன் மனிதனா? அப்பெண்தெய்வத்தை விடுத்துப் பிற மங்கையரை நண்ணி வாழும் ஆடவனை அறக்கடவுள் ஒறுக்குமன்றோ!

இதுவரையிலும் இக்கற்புத் தெய்வங்களின் உயர்வினைக் கண்டோம். இத்தகையார் தொகை மிகமிகச் சிறியது. சுயநலக்கட்டு நாளடைவில் நீங்குதற்குரிய நிலையில் இருக்கும் பெண்டிரே பெருந் தொகையினர். இவர்க்கு அரண்செய்யவே சுந்தரனாரின் 'பெண்ணின் பெருமை' என்னும் நூல் எழுந்தது.

பகவான் அரவிந்தரைப் பொதுவாக உலகத்தினரும் சிறப்பாக இந்தியரும் நன்கு அறிவர். சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன் அவர் அரசியலில் ஈடுபட்டு அரிய தொண்டு ஆற்றினார்; கன்னியாகுமரி முதல் இமயம் வரையில் உள்ள மக்களைத் தட்டி எழுப்பினார்; அவர்கட்கு நாட்டுப்பற்றினை ஊட்டினார். பிறர்பொருட்டு வாழ்தல்வேண்டும் என்னும் எண்ணமும், கடவுளை நேரில் காணவேண்டும் என்னும் எண்ணமும் அவர் உள்ளத்தே நின்று

அவரை ஊக்கின. நாட்டுப்பற்ருல் வீறிட்டெழுந்த அவர் உள்ளத்திற்கு ஆக்கந்தரும் நிலையில் அவர் மனைவியார் நின்ருரில்லை. அதனுல், அவர் சிறிது மனமுடைந்தவராய், மனைவியார்க்குப் பல கடிதங்கள் எழுதினுர்.

* "என்னுடனே வா. தெய்வ காரியத்தை நிலைநிறுத்தும்பொருட்டு நாம் இவ்வுலகத்திற்கு வந்திருக்கின்ருேம். அதனை இப்பொழுதே தொடங்குவோம்." —பக். 16.

"சுக துக்கங்கள் எல்லாவற்றையும் அமைதியுடன் ஈசனது திருவடிகளிலே சமர்ப்பணம் செய்துவிடுவதாகிய ஒரு வழிதான் மனிதனுக்குண்டு." —பக். 4.

"மனைவியே கணவனுக்குத் தைரிய ஹேது ஆவாள் என்பதை நான் உனக்கு மீண்டும் வற்புறுத்திச் சொல்லுகிறேன். தனது சொந்தச் சாயையை அவன் தன் மனைவியிடத்தே காண்பதனுலும், தனது உள்ள விருப்பத்தின் எதிரொலியை அவளிடமிருந்து கேட்பதனுலும் அவனது வல்லமை இருமடங்காகிவிடுகின்றது." —பக். 15.

"நீ என்ன சொல்லுகிருய்?" —பக் - 10.

"இவ்விஷயத்திலே உன் சம்மதி அளிப்பாயா? .........நீயும் இதற்குச் சம்மதித்து ஆத்ம யக்ஞம் செய்ய இணங்குவாயாஞல், எனது விருப்பம் நிறைவேறுதல் எளிதாகும்." —பக். 10.

---

* பகவான் அரவிந்தர் பத்தினியாருக்கு எழுதிய கடிதங்கள்—லோகோபகாரி, சென்னை.

" 'ஈசா, எனது கணவனுக்கு நான் ஒரு தடையாயிராமல் அவனுடைய ஜீவலட்சியத்தி லேயும் அவன் முக்திக்குச் செய்யும் முயற்சியிலே யும் அவனுக்கு உதவி செய்து துணைநிற்கும்படி அருள் செய்க!' என்னும் பிரார்த்தனையை ஈசனி டத்தில் எப்போதும் கேட்டுக்கொள்." —பக். 18.

இவ்வுரைகளால் பகவான் அரவிந்தர் தம் மனைவியாரைத் தமக்குத் துணைபுரியுமாறும், தம் மொடு இணைந்த வாழ்வு நடத்துமாறும் வேண்டு கின்றமை புலனாகின்றது. நம் கலியாணசுந்தரனார் "பெண்ணின்பால் பெண்மை, தாய்மை, இறைமை என்னும் மூன்று நீர்மைகள் விளங்குதல் கருதற் பாலது" என்று 'முருகன் அல்லது அழகு' என்னும் நூலில் கூறுகின்றார். இம்மூன்றும் அரவிந்தர்பால் விளங்குதலைக் காண்க. இம்மூன்று குணங்களும் சேரப்பெறாத ஒருவர், தம்மொடு மாறுபட்டுத் தமக்கு இடையூறாய் நிற்கும் மனைவியாரை இவ்விதம் வேண்டுதல் செய்வரோ? அவர் எழுதிய பல பக்கங்கள் கொண்ட கடிதங்கள், ஒரு பக்தன் தன் வழிபடு தெய்வத்தை வேண்டுதல் போலவும், தாய் மகளுக்கு நன்னெறி புகட்டுதல் போலவும், குரு தன் மாணவிக்கு உபதேசம் செய்தல் போலவும், தோழி தன் தோழிக்கு நல்லுரை கூறுதல் போலவும் காட்சி அளிக்கின்றன.

அரவிந்தர் உபதேசம் பயன் அளிக்கவில்லை. வீறிட்டெழுந்து அவர்க்குத் துணைபுரிய அம்மையார் உளங்கொள்ளவில்லை. அரவிந்தர் தாம் மேற்

கொண்ட பணியைத் தொடர்ந்து ஆற்றினர். அதனை அவர் *இறைவன் ஏவலினுல் தாம் செய்வ தாகக் கருதினர்.

மக்கள் விடுதலை கருதி அவர் பலப்பல வழியில் உழன்று உழன்று பார்த்தார். முடிவில் அவர் ஆன்ம சக்தியாலன்றி அவ்விடுதலையைத் தம் நாடு பெரு தென்று கருதித் தவம் புரியத் தொடங்கினர். அம்மையார் தம் பின்னுளில் அரவிந்தர்பால் மாருக் காதலுடையராய்த் தனித்தே வாழ்ந்தனர்; ஆனல், அவருடன் உறையும் வாழ்வு ஏற்றிருந்தால் சாரதா தேவியாரைப்போல உலகு புகழ் பெரும்புகழ் எய்தியிருப்பாரன்றே!

அரவிந்தர் நாட்டுரிமை கருதித் தியாகமூர்த்தி யானர். அவரை அனைய தியாகமூர்த்திகள் கணக் கற்றோரை உடையது நம் நாடு. சிலர் பிற்கால இந்தியாவுக்கு நாட்டு மக்களைத் தகுதியுடையவர்க ளாக்கும் பணியினை மேற்கொண்டு பள்ளிக்கூடங் களிற் புகுந்தனர்; சிலர் விஞ்ஞானக் கலையைக்

---

* "இப்பொழுது எனக்கென்று சொந்தமாகச் சுதந்திரம் இல்லை. எனது மனம் போனவாறு நான் எதுவும் செய்யமுடியாது. ஆண்டவன் கட்டளைப்படியே எதுவும் செய்ய முடியுமென்ற விஷயத்தில் நீ திருப்தி யடைய வேண்டும். நீ இங்கே வரும்பொழுது இதன் பொருள் உனக்கு விளங்கும். ஆண்டவன் எனக்கு அன்பு கூர்ந்து அளித்தது போல உனக்கும் என்றும் மாருத அந்தக் கருணையை அளிப்பான் என்று நம்பு கிறேன்."—பகவான் அரவிந்தர்...கடிதங்கள் - பக். 20.

கற்றுத் தொழிற்சாலைகளில் புகுந்தனர். மற்ருர் தமக்குகந்த பணியை மேற்கொண்டு தொண் டாற்றினர் ; ஆற்றுகின்ருர். அவருள் பலர் பிறர் அறியாவண்ணம் வாழ்ந்தனர் ; வாழ்கின்ருர். சிலர் பிறர் அறிதற்குரிய வாய்ப்புப் பெற்ருர் ; பெறு கின்ருர். ஆன்மத் தூண்டுதலால் தொண்டாற்றும் இவரை - இவர்தம் செயலை - ஆராய்தற்கு எவர்க் கும் உரிமையில்லை. ஆராயப் புகுந்து இவர்தம் உள்ளத்தைப் புண்படுத்துவோர், இவர்தம் செய லைத் தடுப்போர், நாட்டிற்கு ஏற்படும் நலத்தைக் கெடுப்போராவர்.

'பெண்களுக்குக் கல்வி அவசியமா ?' என் னும் வினவை அடிப்படையாகக் கொண்ட சொற் பொழிவுகளும் கட்டுரைகளும் சுமார் இருபத் தைந்து ஆண்டுகளாக அறிஞர்களால் செய்யப் பெற்றும் எழுதப்பெற்றும் வருகின்றன. ஆனல், இந்நாள் பெண்கல்வி என்னும் தலைப்பின்கீழ் உரை யாற்றுவார் மிகக் குறைந்துவிட்டனர். இதற்குக் காரணம், மக்கள் பெண்களுக்குக் கல்வி அவசியம் என உணர்ந்தமையேயாம். பெண்ணுக்குக் கல்வி கொடுப்பதற்கோ தடுப்பதற்கோ எவர்க்கும் உரிமை யில்லை. பெண்களைக் காத்தற்கே பெற்ருேர்க்கும் உடன் பிறந்தார்க்கும் உரிமையுண்டு. கல்வியில் வளம்பெற்று உயரும் பெண்ணை மேன்மேலும் உயருமாறு விடுவது அழகு. செல்வாக்கு இல்லாத தந்தை என் செய்வான் ! அந்நிலையில் மற்றவர் நாட்டின் நலங்கருதி உதவி செய்ய முன் வருதல்

வேண்டும். படித்தலில் பெரிதும் பின்வாங்கும் பெண்ணைப் பல்லாண்டு படிக்குமாறு தூண்டுதல் அழகன்று. பெண்களுக்குக் கல்வியளிக்க மறுத்திருந்த சில குடும்பங்கள் இப்பொழுது பெரிதும் முனைந்து நிற்கின்றன.

ஒரு பெண் ஒன்பதாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது அவளுக்கு வயது பதினெட்டு. மேலும் தொடர்ந்து கற்பதற்கு அப் பெண்ணிற்கு மனம் செல்லவில்லை. ஆறுவது பாரம் வரையிலும் அவள் படித்தே தீரவேண்டும் என்று தந்தையாரும் உடன் பிறந்தோரும் உளம் கொண்டனர். அப்பெண் மனம், குடும்பத்து இளைஞன் ஒருவன்மீது படர்ந்தது. அவ்விளைஞன் மிகவும் நல்லவன் ; நன்கு கற்றவன் ; ஒழுக்கத்திற் சிறந்தவன். அவனும் அவளை மணக்க விரும்பினான். இருவரும் பலமுறை சந்தித்துப் பேசியதுண்டு. காதற்பேச்சு அவரிடை என்றும் எழவில்லை. அவ் விளைஞனின் பெற்றோரும் தம் விருப்பத்தை அப் பெண்ணின் பெற்றோர்க்குத் தெரிவித்தனர். அன் னார் அவளை அவனுக்கு மணம் செய்துகொடுக்க முன் வந்திலர் ; அவள் குறிப்பிட்ட அளவு படித்தல் வேண்டுமென்பதில் உறுதிகொண்டனர். அப்பெண் தன்மீது பெருங்காதல் கொண்டிருந்தமையை அவ் விளைஞன் அறியான். அவளும் தன் காதலின் வேகத்தை எவர்க்கும் தெரிவிக்கவில்லை. பெண் நாளுக்கு நாள் உருக்குலைந்து என்பெழுந்தியங்கும் யாக்கையைப் பெற்றாள். அவள், உடல் நோயால்

வருந்துவதாகப் பெற்றோர் கருதினர். அவள் நோய் காதல் நோய். அப்பெண்ணை மணமுடிக்க, பெற்றோர் இசையாமையால் அவன் வேறு பெண்ணை மணந்துகொண்டான். அந்நிகழ்ச்சி அவள் நோயை அதிகப்படுத்திவிட்டது. அப்பெண்ணின் பின் வாழ்வைத் தொடர்ந்து எழுத என் பேனு பின் வாங்குகின்றது; கண்கள் மங்குகின்றன. பெற்றோர்களே! பெண்களுக்குக் கல்வி அளித்தற்கு முன்னர்த் தயங்கினீர்கள்; இன்று முனைந்து நிற்கின்றீர்கள். இருகாலும் உங்களிடம் 'நான்' எனும் முனைப்பின் வேகமே ஆட்சி புரிகின்றது. ஆணையோ பெண்ணையோ ஆட்டிவைப்பதற்கு உங்களுக்கு என்ன *உரிமை இருக்கிறது! அப்பெற்றோர் அவள் மன

---

*"உரிமையாவது உயிர்கட்குக் கடவுளால் அளிக்கப்பட்ட ஒரு பெரும் இயற்கைக் கொடை. தன்னைப் போலவே உயிர்களும் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி உலகில் வாழவேண்டும் என்பது கடவுள் நோக்கம். அவ்வருள் நோக்கத்துக்கு மாறுபட்டுப் பிறர் உரிமை தடிவோர், கடவுள் உண்மையில் உறுதியுடையோராகார். எவ்வுயிர் உரிமைக்கும் எவரும் கேடு நிகழ்த்தலாகாதென்பது பொது அறம். அங்ஙனமாக மன்பதைத் தோற்ற வளர்ச்சிக்கெனக் கடவுளருளால் தாய்மையைப் பெற்ற மென்மைப் பெண்மகளின் உரிமையை வன்மை ஆண்மகன் சில இடங்களில் மறித்தும் பறித்துமிருக்கிறான்! இயற்கை நியதிக்கு முரணி நின்று பெண்ணுரிமை கடந்து 'பெண்ணுக்கு எவ்வளவில் உரிமை வழங்கலாம்; எவ்வளவில் வழங்கல் கூடாது' என்னும் ஆராய்ச்சியில் தலைப்படல் எத்தகை அறியாமை!"

—பெண்ணின் பெருமை - பக். 30.

நிலை அறிந்து மணம் முடித்திருப்பின், அவள் அற வாழ்வு நடாத்தி அறிஞர் புகழ வாழ்ந்திருப்பாள். ஆணவம் தாண்டவம் புரிந்தது. கல்வி மதிப்பு மனத்தே கால்கொண்டது. அவள் காதல் நிலையைக் காணுதற்குக் கண் இல்லாமற்போயிற்று.

காதல்மணத்தைப் பற்றியும், மறுமணத்தைப் பற்றியும் கட்டுரைகளும் நூல்களும் பலப்பல இந் நாள் வெளி வந்துள்ளன. அவற்றுள் கூறப்பெற் றுள்ள கருத்துக்களில் சில எனக்குத் தக்கனவாகத் தோன்றவில்லை. அவைகளைப்பற்றி விரிவாக எடுத்து ஆராய்தற்கு இஃது இடமன்று. ஆதலின், இம் மணங்களைப்பற்றிச் சுந்தரனார் எழுதிய உரைகளில் சிலவற்றை ஈண்டுத் தருகின்றேன் :

"காதலுக்கு ஒப்பானதுமில்லை ; உயர்வானது மில்லை. அஃது எல்லாவற்றையும் கடந்து நிற்பது. அதற்கு மேம்பட்டதொன்று இருத்தல் கூடாது. கடந்த ஒன்றைக் கடவுள் என்று சொல்வது மரபு. இதனால் 'காதற் கடவுள்' என்றோர் ஆட்சியும் பிறந்தது போலும். காதலனுக்குக் காதலியினுஞ் சிறந்த பொருள் வேறொன்றில்லை. இவளுக்கும் அப்படியே. அவனுக்கு இவள் கடவுள் ; இவளுக்கு அவன் கடவுள். இவர்க்கு வேறு தெய்வம் எற்றுக்கு ?

"காதல் இயற்கையா ? செயற்கையா ? இயற்கை என்று எவருங் கூறுவர். காதல் எவரால் செய்யப்படுகிறது? அது செய்யப்படுவதா? காதல் இயற்கையாக எழுவது. காதல் இயற்கையாத

வின், அஃது உலகில் வளரவேண்டுமென்னும் நோக்கத்தை இயற்கைத் தெய்வம் உடைத்தாயிருக்கிறது. இஃது இயற்கைத் தெய்வத்தின் படைப்பை நோக்கி நோக்கி அதன்கண் படியப் படிய இனிது விளங்கும்.

*  *  *  *

" இயற்கைத் தெய்வத்தின் நோக்கம் காதல் வளரவேண்டு மென்பது. அதை நூல்களும் வலியுறுத்துகின்றன. ஆதலின், இயற்கைத் தெய்வத்தின் நோக்கம் நிறைவேறச் சேவை செய்வது அத்தெய்வத்துக்கே சேவை செய்வதாகுமென்க. சேவை என்ருல் என்ன ? வழிபாடு என்ருல் என்ன ?

" ஒருவன் பிறந்தான் ; வளர்ந்தான் ; கற்பன கற்ருன் ; கேட்பன கேட்டான். ஒருத்தியும் பிறந்தாள் ; வளர்ந்தாள் ; கற்பன கற்ருள் ; கேட்பன கேட்டாள். அவன் உள்ளத்திலும் காதல் முகிழ்க்கிறது ; இவள் உள்ளத்திலும் காதல் முகிழ்க்கிறது. முகிழ்ப்பு இருவர் உள்ளத்தையும் ஒருமைப்படுத்துகிறது ; மணம் கமழ்கிறது. திருமணம் ஒருவித இயற்கை வழிபாடு. உலக வளர்ச்சிக்குத் துணைபுரிவது இயற்கைத் தெய்வத்தை வழிபடுவதாகும். இவ்வழிபாடு பெரும்பெரு வழிபாட்டுக்குக் கால்கொள்வது.

" ஒருவன் இளைஞனயிருந்த ஞான்று பெரிதும் தன்னையே நேசித்து வந்தான் ; ஒருத்தியும் இளமையில் தன்னையே நேசித்து வந்தாள். காதல் மணத்துக்குப் பின்னர் அவன் இவளை

நேசிக்கிறான்; இவளும் அவனை நேசிக்கிறாள். ஓரிடத்தில் கட்டுப்பட்டுக் கிடந்த அன்பு இப்பொழுது ஈரிடத்திற் செல்கிறது. அவ்வளவில் தன்னல மாசு அகல்கிறது. பின்னே மக்கட்பேறு உண்டாகிறது. இப்பொழுது தாயும் தந்தையும் தம்முடைய நலங்களை எல்லாம் மக்கட் பொருட்டுத் தியாகஞ் செய்கின்றனர். அவர், தம் பொருட்டு வாழாது மக்கட்பொருட்டு வாழ்வோ ராகின்றனர். மாறுதலைக் கருதுங்கள். ஒருவனும் ஒருத்தியும் தாய் தந்தையராகிய பின்னர்த் தம் நல நேசமென்னும் மாசினின்றும் விடுதலையடை தல் உன்னத்தக்கது. தன்னலம் அற்ற இடத்தில் எழுவது அன்பு. தாய் தந்தையரிடம் அன்பு கோயில் கொள்கிறது. அவ்வன்பு என்ன அறி வுறுத்தத் தொடங்குகிறது? 'உமக்கும் உம் மக்கட்கும் பசி பிணி முதலிய துன்பங்களிருப்பது போல மற்றவர்கட்கும் உண்டு. உம் பசி பிணி முதலிய துன்பங்களையும், உம் மக்களின் பசி பிணி முதலிய துன்பங்களையும் தீர்க்க நீர் முயல்வதுபோல, மற்றவர் பசி பிணி முதலிய துன்பங்களையும் தீர்க்க முயல்மின்' என்று அறிவுறுத்தத் தொடங்குகிறது. இஃது அன்பின் இயல்பு. அன்பின் அறிவுறுத்தலுக்குத் தாய் தந்தையர் செவிசாய்க்கின்றனர்; ஒல்லும்வகை அவர் தம் சக்திக்கு ஏற்பப் பிறர்க்குத் துணைபுரிய முயல்கின்றனர். கைம்மாறு கருதாது அன்பால் பிறர்க்குதவுவது விருந்தோம்பல் என்னப்படும். தம்மைத் தனித் தனியே நேசித்துக்கொண்டிருந்த வர் ஒருமை மனத்தவராய்த் தாய் தந்தையராய்த்

தியாகிகளாய் இப்பொழுது பிறக்குதவும் *அந்தணராகின்றனர். இந்நிலையில் அவர் 'தன்னல' மாசு அகலப்பெறுகின்றனர் ; அறவோர் ஆகின்றனர்.''

— 'உள்ளொளி' - முதற்பதிப்பு - பக். 115 - 118.

'' 'நாயகி இறந்தால் என் செய்வது ?' என்று சிலர் கேட்கின்றனர். 'நாயகன் இறந்தால் என் செய்வது ?' என்று கேட்பாரில்லை. இரண்டாமுறை மணம் வேண்டுமேல் அம்மணவுரிமை இருபாலார்க்கும் இருத்தல் வேண்டும். இரண்டாமுறை மணம் வேண்டுவதில்லை என்றே யான் சொல்வேன். ஒருமுறை ஒருத்தியுடன் காதல் கொண்டு மணஞ்செய்த பின்னை, மற்றொரு பெண்ணை மணஞ்செய்வது எற்றுக்கு ? காதல் ஒருவரிடம் நிகழுமேயன்றி மற்றவரிடம் நிகழாது. காதலால் ஒருமுறை வாய்க்கப்பெற்ற மனைவி, இன்னுயிர் துறக்க நேரினும், அவள் காதல் எங்ஙனம் நீங்கும் ? ஆதலால், காதலால் விழுங்கப் பெற்ற ஒருவன் இறப்பினும் ஒருத்தி மறுமணஞ் செய்ய வேண்டுவதில்லை. அவ்வாறே ஒருத்தி இறப்பினும் ஒருவன் மறுமணஞ் செய்ய வேண்டுவதில்லை. மனைவி உயிருடன் இருக்க, மேலும் மேலும் மணஞ்செய்வது பெருங்கொடுமை. அதைப்பற்றி ஈண்டு விரித்துக் கூறவேண்டுவதில்லை.

---

*அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான். —திருவள்ளுவர்

"புறனடையாக இங்கு இரண்டொரு குறிப்புப் பொறிக்க விரும்புகிறேன். திருமணம் நடந்தவுடன் அதாவது ஓராண்டு ஈராண்டுக்குள், மனைவி மரித்தால், பிள்ளைப்பேறு கருதி, இன்னொருத்தியை மகன் மணக்கலாம். வயது முதிர்ந்த ஒருவன், மனைவியை இழந்தபின், மனைவி நசையால் இடர்ப்படுவனேல், அவன் தன் வயதிற்கியைந்த ஒருத்தியை - அதாவது கணவனை இழந்த ஒருத்தியை - அவளும் விரும்பின் - மணந்துகொள்ளலாம். அங்ஙனஞ் செய்யாது, கிழவன் கன்னியைக் கட்டுவது கூடாது. இருவர் எவ்வயதில் எந்நிலையில் மணஞ்செய்துகொள்ளினும், வயது வேற்றுமை நான்கு அல்லது ஐந்துக்குமேல் இருத்தல் கூடாதென்பது கவனிக்கத் தக்கது."

—'பெண்ணின் பெருமை'-மூன்றும் பதிப்பு-பக். 235, 236

## அறிவுரை

பெண்ணணங்கே! நின்பால் ஒரு சக்தி உண்டு. அஃது உன்னுடன் பிறந்தது. நின் பெருமைக்கெல்லாம் அதுவே காரணம். அது தன்னைப் பயன்படுத்துவார் திறமைக்கேற்பப் பயனளிக்கும் இருபுறக் கூர் வாளை ஒக்கும். அதன் பெயர் என்ன? பிடிவாதம் - பிடிவாதமே. ஆண்டவனுல் உனக்கு அளிக்கப் பெற்ற அச்சக்தியால் நீ எதனையும் பெறலாம். நின் கணவன் அறநெறி விடுத்துத் தீநெறியில் செல்லுவானுயின், அவனை நீ அவன் வழிநின்று அச்சக்தியால் நல்வழிப்படுத்தலாம். நன்னெறியில் நின்ற நின் கணவன் தீநெறியை மேற்கொண்டமை

யால் மனந்தளர்ந்து அவனை நீ விட்டுப் பிரிதல் ஆகாது. துன்பத்தைப் பொருட்படுத்தாது நின் ஆன்ம சக்தியால், ஆண்டவன் உதவியால், அவனை நல்வழிப்படுத்தல் வேண்டும். உன்னால் ஆகாதது ஒன்றுமில்லை. நின் பெற்றோர் அந்நிலையில் தம்மிடம் வருமாறு அழைத்தால், நீ நின் காப்பிலுள்ள கணவனைக் கைவிட்டுச் செல்லாதே. எத்தனை நாள் உன் பெற்றோர் உன்னைத் தாங்குவர் ? அன்னார் இறந்த பிறகு அங்கு உன்னை மதிப்பவர் யார் ? நின் உடன் பிறந்தோர் அழைத்தாலும் செல்லாதே. அவரும் பின்னாளில் நின்னை வெறுக்கவும் நேரிடும். நீ எள்ளளவும் அங்கு மதிப்புக் காணமுடியாது. நின் காதலன் நின்னால் திருத்தப்பெறுவானாயின், உலகு புகழும் பெரும்புகழை நீ எய்துவாய்.

பெண்ணரசே ! நின்பால் நல்லியல்கள் இடம் பெற்றுள்ளன. அவை நாட்டிற்குப் பயன்படுமாறு நீ வாழ்தல்வேண்டும். தன்னலக்கட்டு நின்னைவிட்டொழியின், நீ தெய்வமாதல் ஒருதலை.பின் விளைவன ஓராத பெற்றோராலும் உடன் பிறந்தோராலும் வாணாள் முழுவதும் துன்புறும் பெண்டிர் பலரை யான் அறிவேன். அவருள், சிறிது பொறுமை இன்மையால் தாய் வீடு நண்ணித் துன்புறும் சிலரை நான் தினந்தோறும் காண்கின்றேன். அவர் நல்லறிவுடையார் ; மாசற்ற கற்புடையார் ; தம் கணவர்பால் சேர்ந்து வாழ இன்று விரும்புகின்றார்; தம் பிழையை நினைந்து நினைந்து வருந்துகின்றார். என் செய்வது ! நிலைமை பெரிதும் மாறிவிட்டது.

இன்பமும் துன்பமும் வாழ்நாளில் கலந்தே வரும். இன்பத்தை விரும்புவோரைத் துன்பம் அடைந்தே தீரும்.

தாயே! உன் சக்தியைச் சிறிது உன்னிப் பார்; உலக சரித்திரத்தைக் கூர்ந்து நோக்கு; பெண்டிர் தம் அருளால், அறிவால் உலகத்தைத் தம்வழி இயங்குமாறு செய்தமை நன்கு புலனுகும். நின் கடமையை நினை; நின் மக்கள் பிற்கால இந்தியா வுக்கு ஆக்கந் தேடவேண்டுபவர் என்பதை மற வாதே; ஆண்டவன் வழிநில்; அறிவின் வழிநில்; கடனுற்ற முற்படு; நின் இறைமையை நினைந்து முதன்மையைப் பெறு; தாய்மையை நினைந்து சிறந்த தாயாய் இரு; பெண்மையை நினைந்து அருளுடையையாய் வாழ். வாழ்க நின் வடிவம்! வாழ்க நின் அழகு! வாழ்க நின் வீரம்! வாழ்க நின் அறிவே!

## கலை வளர்ச்சி

அறிஞரால் நாடொன்று உயர்வாகக் கருதப் படுதற்கும் தாழ்வாகக் கருதப்படுதற்கும் அந்நாட் டின் கலைப்பெருக்கும் சுருக்கமுமே காரணமாகும். நம் இந்திய நாடு இன்றும் பிற நாட்டு அறிஞர் களால் உயர்வாகக் கருதப்பட்டு வருகின்றது. இதற்குக் காரணம், இது முன்னைநாள் பெற்றி ருந்த கலைவளர்ச்சியே. இற்றைநாள் எகிப்துக்கும், ரோமுக்கும், கிரீசுக்கும் என்ன பெருமை இருக் கிறது! ஆனுல், இவை முன் பெற்ற கலைவளர்ச்சி

நிலையால் இன்றும் அறிஞர் உள்ளத்தில் பெருமை யோடு வீற்றிருக்கின்றன. சில நூற்றுண்டுகளுக்கு முன் இங்கிலாந்து என்ன நிலையில் இருந்தது ? இப் பொழுது என்ன நிலையில் இருக்கிறது? இடையில் அது கலை வளர்ச்சியில் அரியாசனத்தில் வீற்றிருந் தது. எலிசபெத்து மகாராணியார் காலத்தில் அரும் பிய கலைவளர்ச்சி, இறைமையால் - தாய்மையால் - பெண்மையால் உலகினர் உள்ளத்தை ஒரு சேரக் கவர்ந்த விக்டோரியா மகாராணியார் காலத்தில் மிகமிக உன்னத நிலையை எய்திற்று. கலைவாணி இருமுறை மக்கள் நலங்கருதி ஆண்டுத் தோன்றி னள் போலும்! ஒரு காலத்தில் நாடொன்று பெறும் கலைவளர்ச்சி, அக்காலத்து அரசர் உயர் வினையும், மக்கள் பண்பினையும் அறிதற்குப் பெரி தும் துணைபுரிகின்றது.

கால் நூற்றுண்டாக உலகினர் பெரிதும் உலோகாயதத்தில் படிந்து நிற்கின்றனர். உலோ காயதம் அமைதியின்மை என்னும் குழவியை ஈன் றுளது. அக்குழந்தை போரை வளர்த்து வரு கிறது. மக்கள் மனத்தில் என்று கலைவளர்ச்சி கால் கொள்ளுகிறதோ, அன்றே போர் முடிவுறும். நாம் கடவுளை மறந்தோம்; கலையை மறந்தோம்; இரும் பையும் பொன்னையும் அதிகமாக மதித்துவிட் டோம். எதற்கும் அளவுண்டு.

இதனை உளங்கொண்டே அறிஞர் கலியாண சுந்தர முதலியார் 'மக்கள் வாழ்விற்குக் கலை இன்றி யமையாதது' என்று பலகாலும் கூறிவருகின்றார்.

கலை பல வகைப்படும். இந்தியர், கலையை அறுபத்து நான்காகக் கொண்டனர். அவற்றுள் காவியம், ஓவியம், இசை மூன்றும் முக்கியமானவை. இவைகளின் உயர்வும் இயலும் திரு. வி. க. எழுதிய நூல்களில் பெரிதும் இடம் பெற்றுள்ளன.

## காவியமும் ஓவியமும்

இயற்கையின் காட்சி புலன்களின் வழியாய்க் கவிஞன் உள்ளத்தே படிந்து அவன்றன் கற்பனு சக்தியோடு காவியம் என்னும் பெயர் பூண்டு வெளி வருகின்றது. அவ்விதமே அது ஓவியன் உள்ளத்தே படிந்து அவன்றன் கற்பனு சக்தியோடு ஓவியம் என்னும் பெயர் பூண்டு வெளிவருகிறது. காவியத்திற்கும், ஓவியத்திற்கும் மூலகாரணமாய் இருப்பது ஒன்றேயாதலின், அவை தொடர்புடையன. கவிஞன் வாயிலாய் வெளிவரும் இயற்கைக் காட்சி, சொற்களின் துணைகொண்டு சொல்லோவிய உருவில் திகழ்கின்றது. ஓவியன் வாயிலாய் வெளி வரும் இயற்கைக்காட்சி வருணம், கல், மரம் முதலியவற்றின் துணைகொண்டு ஓவிய உருவில் உலாவுகின்றது. கவிஞன் உள்ளத்தில் ஓவியப் பண்பு அமைந்திருத்தலும், ஓவியன் உள்ளத்தில் கவிதா சக்தி அமைந்திருத்தலும் கூர்ந்து நோக்கத் தக்கன. கவிஞனும் ஓவியனும் இயற்கையை வழி படுவோராதலின், காவியப் பயிற்சியாலும், ஓவியப் பயிற்சியாலும் மக்கள் பெறும் பயன் ஒன்றே யாகும். ஆராய்ச்சியாளர் ஜகப்பிரியரை ஓவியர்

என்று கூறுவதும், ஆஸ்கார் ஒயில்ட் தம்மை ஓவியர் என்று சொல்லிக்கொண்டதும் ஈண்டுக் கருதத்தக்கன. அயல் நாடுகளில் ஓவியப் புலமையும், காவியப் புலமையும் ஒருசேர அமையப்பெற்ற புலவர் பலர் இருந்தனர் ; இருக்கின்றனர். காவிய ஓவியப் புலமை பெற்ற ரஸ்கின் தம் ஆற்றலால் இங்கிலாந்துக்குப் பெரும்புகழைத் தந்தார். அவர் அனைய புலவர் பலரை நம் நாடு என்று பெறுமோ !

இனி நம் சுந்தரனார் காவிய ஓவியங்களைப் பற்றி எழுதிய உரைகளை நோக்குவோம் :

"...காவியக் கடலில் விழலாமா ? அக்கடலில் விழுந்தால் எழுதல் முடியுமோ ? நீர்க்கடலின் ஆழத்தைக் காண்டல் இயலும். காவியக்கடலின் ஆழத்தைக் காண்டல் இயலாது. ஆதலின், ஓதத்தில் சிறிது நேரம் நின்று பார்த்துப் பின்னே ஓவிய மலையிலேற முயல்வோம்.

* * * *

"பாட்டு இயற்கைப் படம் என்று சொல்லப்படுகிறது. படம் என்றால் புகைப் படமா ? எழுத்துப் படமா ? எழுத்தோவியப் படமா ? ஓர் அழகிய பசு நிற்கிறது. அதை ஒருவன் புகைப் படத்தில் இறக்குகிறான் ; மற்றொருவன் எழுத்தில் இறக்குகிறான் ; இன்னொருவன் எழுத்தோவியத்தில் இறக்குகிறான். இம்மூன்றனுள் எது இயற்கைப் படம் ? புகைப்படம் ஒரு நொடியில் எடுக்கப்படுகிறது. இப்படமெடுப்போன் நெஞ்சம் பசுவினுள் படிவதில்லை. அவன் நோக்கம் கருவியின்மீது செல்லும். அவனால் எடுக்கப்படும்

புகைப்படத்தில் பசுவின் புறத்தோற்றம் மட்டும் காணப்படும் ; பசுவின் இயல் அகம் முதலியன விளங்குவதில்லை. பசுவின் இயல் முதலியவற்றை உணர்த்தாத ஒன்று எப்படி இயற்கைப் படமாகும்? எழுத்துப் படத்தில் எழுத்துக் கூட்டங்கள் காணப்படுகின்றன ; சொல்லடுக்குகள் காணப்படுகின்றன. ஆனால், பசுவைக் காணோம். இப்படம் ஓவியக் கண்ணால் எழுதப்பட்டதன்று. எழுத்துஞ் சொல்லும் ஒருமைப்பட்டு ஓவியமாகிப் பொருளைப் புலப்படுத்தல்வேண்டும். ஓவியம் விளங்காத எழுத்துப் படம் இயற்கையாகாது. எழுத்தோவியப் படத்தில் பசு காட்சியளிக்கிறது. பசுவின் இயல், அகம் முதலியன விளங்குகின்றன. ஓவியம் எழுத்தை மறைத்துப் பசுவை உணர்த்துகிறது. அதனால் பசுத் தோற்றமும், இயலும், பிறவும் உள்ளத்தில் உறுகின்றன. அப்பசுவின் காட்சியால் விளையத்தக்க பயன்களெல்லாம் விளைகின்றன. காரணம் என்ன? பசுவை எழுத்தோவியன் நோக்குகிறான் ; ஊன்றி நோக்குகிறான். பசு அவன் மனத்தில் படிகிறது. பசுவும் அவன் மனமும் ஒன்றுகின்றன. அவன் மனம் பசுவாகிறது. அம்மனம் எண்ணமாகி எழுத்தாகி ஓவியமாகிப் பசுவைக் காட்டுகிறது. பசு ஓவியன் மனம் புகுந்து மீண்டும் வெளியாகிறது. உயிருள்ள பசு காட்சியளிக்கிறது ; பசுவின் இயல் முதலியனவும் விளங்குகின்றன; பயன்களும் விளைகின்றன. எழுத்தோவியத்தின் வெற்றி என்ன? வெற்றிமையுடைய எழுத்தோவியம் இயற்கைப் படம் ; பாட்டு.

"பாட்டு ஓவியம். எவ்வோவியம்? எழுத் தோவியம். அது வரி ஓவியமன்று; வடி ஓவிய மன்று. எழுத்தோவியமும் பிற ஓவியமும் வடி வத்தில் மட்டும் வேற்றுமை பெறும்; பொருளில் வேற்றுமை பெறுவதில்லை. ஒரு மயிலை ஒரு பாவாணனும் எழுதுகிறான்; ஓர் ஓவியனும் வரை கிறான். இரண்டும் வடிவில் வேற்றுமை அடை கின்றன; ஆனால், பொருளில் வேற்றுமை அடைவதில்லை. இரண்டும் மனத்தில் மயிலையே நிறுத்தும். இங்கே பாவாணனது பாட்டென் னும் எழுத்தோவியத்துக்கும், மற்ற வரி ஓவியத் துக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஓர்க."

— 'உள்ளொளி' - பக். 159 - 161

"இயற்கைக் கூறுகள் பலதிறத்தன. அக்கூறுக ளெல்லாம் பாக்களில் இறங்குகின்றன. பாக்க ளால் காவியம் ஆகிறது. காவியம் இயற்கைக் கோயில். இயற்கையை வழிபட்டால் என்னென்ன நலன்கள் விளையுமோ அவ்வளவு நலன்களும் காவிய வழிபாட்டிலும் விளையும். காவிய வழிபா டென்பது காவியத்தைக் கையால் கும்பிடுவதன்று; அதன்வழி நிற்க உறுதிகொண்டொழுகுவது. காவியத்தின் வழி வாழ்க்கையைப் படுத்துவது காவிய வழிபாடாகும்.

"காவியத்தில் என்ன இல்லை? இயற்கையில் என்னென்ன உண்டோ அவையெல்லாம் காவி யத்திலும் உண்டு. இயற்கையோடியைந்த வாழ்க் கைக்குக் காவியம் பெருந்துணை செய்யும்.

"காவியம் ஒரு நாட்டில் ஒரு மொழியில் மட்டுந் தோன்றுவதன்று. அஃது எந்நாட்டிலும்

எம்மொழியிலுந் தோன்றுவது. உலகில் பலவிடங்களில் காவியந் தோன்றியிருத்தல் கண்கூடு. காவியம் பிறவாத இடம் நாகரிகம் அற்றதாகும். நாகரிக நாடெல்லாம் காவியம் பெற்றே இருக்கும். காவியம் நாகரிகத்தின் அறிகுறிகளில் ஒன்று."

— 'உள்ளொளி' - பக். 169, 170

"கடவுள் உடலாகிய இயற்கை விரிந்து பரந்து நிற்கிறது. அஃது எளிய நெஞ்சில் அடங்குவதில்லை. எளிய நெஞ்சுக்கு இயற்கை ஓவியம் தேவை. ஓவியமாவது இயற்கையின் சுருக்கம். அதன் பெருக்கம் இயற்கை. பெருக்கைச் சுருக்குந் திறமை ஓவியனைப் பொறுத்தது. பெருக்கைச் சுருக்கும்பொழுது பெருக்கிலுள்ள கூறுகளும் நுட்பங்களும் உடன் தொடர்ந்து சுருக்கிலும் இறங்குமாறு ஓவியன் செய்தல்வேண்டும். இல்லையேல் அவன் எடுப்பது ஓவியமாகாது.

"இயற்கை மாயாகாரியம். மாயாகாரியங்களே தொண்ணூற்றாறு தத்துவங்களாக வகுக்கப்பட்டன; முப்பத்தாறு தத்துவங்களாகத் தொகுக்கப்பட்டன. இவைகளெல்லாம் சேர்ந்த ஒன்றே இயற்கை என்பது. இவ்வியற்கையை உடலாகக் கொண்டு, தான் உயிராக நின்று, கடவுள் அதை (இயற்கையை) இயக்குகிறது. இயற்கையெனில் இவைகளையெல்லாங் கொண்ட ஒன்று என்று கொள்க; வெறும் இயற்கையின் புறத் தோற்றத்தை மட்டுங் கொள்ளற்க. ஓர் ஓவியன் இயற்கையை எண்ணுகிறான் என்றால், அவன் உள்ளத்

தில் இயற்கையும் அதன் உள்ளுறையும் ஒன்றி இறங்குகின்றன என்று கொள்ளுதல்வேண்டும். இவை இறங்கப் பெருத உள்ளமுடையவன் இயற்கை ஓவியப் புலவனுகான். ஓவியன் இயற்கைத் தத்துவங்களை உணர்ந்து தெளிந்த புலவனுயிருத்தல் வேண்டும்.

" புலவன் இயற்கையை எண்ணுகிருன்; நினைக்கிருன் ; உன்னுகிருன் ; முன்னுகிருன். அவன் உள்ளம் இயற்கையில் தோய்கிறது ; படிகிறது ; திளைக்கிறது ; ஒன்றுகிறது. உள்ளம் இயற்கையாகிறது ; இயற்கை உள்ளமாகிறது. ஓவியம் உள்ளத்தில் கருக்கொள்கிறது. உள்ளத்தில் இயற்கை எண்ணங்கள் எழுகின்றன ; பொங்குகின்றன. இந்நிலையில் புலவன் ஓவியமெடுக்கிருன். அவனது எண்ண அலைகளின்வழிப் படிப்படியே ஓவியம் உருக்கொள்கிறது. அஃது இயற்கையின் படமாகத் திகழ்கிறது. இயற்கை, கடவுளின் கோயில். அதன் படமாகிய ஓவியமும் கடவுளின் கோயிலாகாது வேறு என்ன ஆகும் ?

" ஓவியம் எடுப்பதற்குப் புலவன் எதைத் துணையாகக் கொள்கிருன் ? வர்ணத்தையோ மரத்தையோ மண்ணையோ கல்லையோ செம்பையோ எதையோ ஒன்றைக் கொள்கிருன். ஓவியம் முகிழ்த்ததும் வர்ணமோ மரமோ மண்ணே கல்லோ செம்போ எதுவோ மறைவுறுகிறது. ஓவியக் கண்ணர்க்கு ஓவியமே தோன்றும் ; வேறெதுவும் தோன்ருது. மற்றவர்க்கு வர்ணமோ கல்லோ செம்போ தோன்றும்.

" ஒரு மாந்தோப்பில் ஒரு வீட்டின் வாயிற் படியில் சில கருங்கற்கள் கிடந்தன. அவைகளில் ஒன்றை ஓர் ஓவியன் எடுத்து, அதில் ஓர் அழகிய பெண் வடிவம் பொறித்தான். பெண் வடிவம் கண்ணையுங் கருத்தையுங் கவர்ந்தது. அங்கே ஓவியப் புலவர் சிலர் ஈண்டினர்; மற்றவருங் கூடினர். ஓவியக் கண்ணில்லா ஒருவர், 'என்ன கூட்டம்' என்று அங்கே போந்தனர். அவர், அங்குக் குழுமியிருந்தவரைப் பார்த்து, " என்ன! ஒரு வாரத்துக்கு முன்னே படியாய்க் கிடந்த ஒரு கல்லுக்கா இவ்வளவு வாழ்வு வந்தது? கல்லை வணங்கும் மூடப் பழக்கம் நம்மவரை விடுத்து என்று அகலுமோ தெரியவில்லை" என்று ஏசினர். அவருடன் சிலர் கலந்துகொண்டனர். ஒரு சாரார்க்கு ஓவியம் விளங்குகிறது; இன்னொரு சாரார்க்குக் கல் தோன்றுகிறது. இரு சாராரும் மனிதப் பிறவி தாங்கினவரே. ஓவியப் புலமை பெறுதொழியினும் ஓவிய நுட்பத்தை வியக்கும் புத்தியாதல் பெறுதல் வேண்டும். அப்புத்தி வாய்க்கப் பெறுதார் நிலை இரங்கத்தக்கது.

" மரத்தால் செய்யப்பெற்ற யானையொன்று இங்கு நிற்பதாக வைத்துக்கொள்வோம். அதைக் காண அப்பக்கத்திருந்து சிலரும் இப்பக்கத் திருந்து சிலரும் வந்தனர். முன்னவர் மரத்தின் இயலை நன்கு உணர்ந்தவர். மற்றவர் யானையின் இயலைச் செவ்வனே தெரிந்தவர். அவர், 'இம் மரம் எதுவாயிருக்கும்? அத்தியா யிருக்குமா? பலாவாயிருக்குமா? தேக்காயிருக்குமா?' என்று

சோதித்துச் சென்றனர். அவர் நெஞ்சில் மரமே நின்றது ; யானை தோன்றவில்லை. பின்னவர், 'யானையின் காது நன்றுயிருக்கிறது ; வால் அழகாயிருக்கிறது ; கால் அமைப்புச் செவ்விதா யில்லை' என்று பேசித் திரும்பினர். இவர் நெஞ்சில் யானையே நின்றது ; மரம் தோன்றவில்லை. மரம் யானையை மறைத்தது ; யானை மரத்தை மறைத்தது.

"பொன்னால் காப்புச் செய்யப்பட்டது. இப்பொழுது அது காப்பென்றழைக்கப்படுகிறதா ? பொன்னென்று அழைக்கப்படுகிறதா ? காப்பென்றே அழைக்கப்படுகிறது. பொன் இல்லாமலா போய்விட்டது ? காப்பு, பொன்னை மறைத்தது.

"இங்கே ஓவியம் புலவன் உள்ளத்திருந்து கல் மரம் பொன் வாயிலாக முகிழ்த்தது; முகிழ்த்ததும் கல் மரம் பொன் எங்கேயோ போயின. ஓவியத்தின் முன்னே அவை சூந்யமாகிவிட்டன. ஓவியத்தை முன்னி முன்னி அதில் ஒன்றுவோரை அது தனது முதலிடத்திற் சேர்க்கும்.

"பண்டைநாளில் பலதிற இயற்கைப் புலவர் இருந்தனர். அவருள் ஓவியப் புலவரும் வாழ்வு பெற்றிருந்தனர். இவரிடத்திருந்து சில அரிய ஓவியங்கள் பூத்தன."

— 'உள்ளொளி' - 179 - 183.

"காவிய ஓவியங்களோடு பழகினேன்; அவைகளில் படிந்தேன் ; படிந்து படிந்து உழன்றேன் ;

பன்னெடுநாள் உழன்றேன் ; உழல உழல அவைகள் என்ன செய்கின்றன ? நன்றி செய்கின்றன. எவ்வழியில் ? அவைகள் தங்கள் முதலாகிய இயற்கைக் கருவூலத்தில் எளியேனைப் பிடர் பிடித்துத் தள்ளுகின்றன. என்றுங் காணாத செல்வத்தை யான் காண்கிறேன். அங்கே கட்டில்லை ; காவலில்லை. செல்வக்கடல் ; கொள்ளக் கொள்ள வற்றாது; வரையாது. இயற்கை அன்னை தண்ணருள் பொழிகிறாள். அவள் கோலம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காவிய ஓவியமாகத் தோன்றுகிறது. ஞாயிறு, திங்கள், உடுக்கள், வானம், மலை, காடு, ஆறு, வயல், கடல், புழு, பூச்சி, பறவை, விலங்கு, மகள், மகன், குழந்தை முதலிய யாவும் காவிய ஓவியங்களெனப் பொலிகின்றன. இயற்கையுலகே தொல்காப்பியமாய்த் தோன்றுகிறது. அகிலம் ஒரு பெருங்கழகமாகக் காணப்படுகிறது.

"அக்கழக மாணாக்கருள் யானும் ஒருவனானேன். அங்கே ஆசிரியன்மாரில்லை. இயற்கைக் கூறு ஒவ்வொன்றும் ஆசிரியத் தொண்டு செய்கிறது. இங்கே காவியமும் ஓவியமும் புறத்தே வேறுபாடு காட்டுகின்றன. அங்கே வேறுபட்ட காட்சியே கிடையாது. எல்லாம் காவியம்; ஓவியம். இங்கே பள்ளியில் பலதிறப் பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. அங்கும் பலதிறக் கலைகளிருக்கின்றன. யான் மாணாக்கன் ; இயற்கைக் கழகத்தில் பயில்கிறேன்."

—'திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள்' - பக். 119, 120

## இசை

காவிய ஓவியக் கலைகளைப்போல இசைக் கலையும் மனித வாழ்விற்கு இன்றியமையாததே. இசைப் புலவன் 'திரிலோக சஞ்சாரி' எனவும், 'ஊனுடல் ஒழிந்தோரும் இருந்த இடத்திருந்தே இசை இன்பம் நுகர்வர்' எனவும் எழுந்துள்ள உரைகள் இசைக் கலையின் பெருமையை நன்கு உணர்த்தும். இனி இதன் உயர்வினையும் இயலினையும் திரு. வி. க. உரையால் காண்போம் :

"இசை வழிபாட்டை யோக வழிபாடென்றுங் கூறலாம். இசையின் பயன் எதுவோ அதுவே யோகத்தின் பயனும். யோகமாவது, புலன்கள் ஒருமைப்பட்டுக் கருவி கரணக் குறும்புகளையொடுக்கிக் கூட்டும் அமைதியில் இருமையுணர்வுகெட, அறிஞர் அகமுகத்தில் நிகழ்த்தும் ஒரு வழிபாடு. "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை" என்றார் அப்பரெம்பெருமானும். "யோக : சித்த வ்ருத்தி நிரோத" எனப் பதஞ்சலியார் யோகம் என்னுஞ் சொற்குப் பொருள் விரித்திருத்தலை நோக்குக. இந்நிலையை இசையுங் கூட்டுதலால், இசையின் பயனையும் யோகத்தின் பயனையும் ஒன்றென உரைக்கிறேன்.

* * * *

"எல்லாம் வல்ல மெய்ப்பொருள் உலகு உயிர்களில் பொருந்தியிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. எங்ஙனம் அப்பொருள் பொருந்தியிருக்கிறதெனில், அஃது அவைகளுள் இசைபடப்

பொருந்தியிருக்கிறதென்க. உலகு உயிர் கடவுள் மூன்றும் இசையில் பிணிக்கப்பட்டுக் கலந்து நிற்கின்றன. இந்நிலேயே அத்துவித நிலேயென்று அறிஞர் கூறுப. அத்துவித நிலேயும் இசை பரந்த நிலேயாகும். எல்லாவற்றிற்கும் அடிப்படையாயுள்ள அழகுப் பொருள் இசைமயமாயிருக்கிறதெனில், மற்றவைகளே இசை மயமென்று சொல்ல வேண்டுவதில்லே. ஆண்டவன் இசை மயத்தன் என்னும் உண்மையை நந்தமிழ்ப் பெரியோர்கள் உணர்ந்து உலகிற்கு அறிவுறுத்தி யிருக்கின்ருர்கள்.

"ஏழிசையாய் இசைப்பயனுய்
என்னுடைய தோழனுமாய்"

என்று வன்ருெண்டர் தமது தோழராங் கடவுளே வழுத்தியிருத்தல் காண்க.

"இசையாயிருப்பவனும் இறைவன்; இசைப் பயனு யிருப்பவனும் அவன். என்னே! இசையின் மாண்பு! இசை மயமாயுள்ள ஒன்றை இசையால் எளிதில் பெறலாமன்ருே? ஆகவே இசை வழிபாடும் இறைவனுக்கு இனியதொன்ருகும்.

"இசையின் இயல்புகள் பலப்பல. அவைகளுள் ஒன்று அதாவது தலேயாயது பன்மையை ஒருமைப் படுத்துவது. இசையில் இன்ப மருவுதற்குங் காரணமிதுவே. புலன்கள் ஒருமையுற்றுக் கருவி கரணங்களின் கொட்டத்தைக் குலேக்குமிடத்தில் எழுவது இசை. மற்றவிடத்தில் எழுவது வசை. இசைபாடப் புகுவோனுடைய புலன்கள் பன்மையுணர்விழந்து ஒருமையுணர்வு பெறுகின்றன. இசையைச் செவி மடுப்போனும் அந்நிலே

யெய்துகிருன். பொறி புலன் கருவிகரணச் சேட்டைகளினின்றும் மகனே இசை விடுதலை செய்கிறது. அவைகளினின்றும் விடுதலையடையும் ஒருவன் பின்னை எதனுடன் இசைவன்? அவன் இன்ப அன்புப் பொருளாம் அழகுடன் இசைவன். உயிர் சார்ந்ததன் வண்ணமா யிருப்ப தொன்ருகலின், அஃது ஒன்றை விடுத்ததும் மற்ரென்றைப் பற்றல் வேண்டுமன்ரே?

"இவ்வாறு இசைஞானி சேட்டைகளினின்றும் விடுதலையடைந்து, இன்ப அன்பில் இசைதலால் அன்பை அவன் எவ்வுயிரிலுங் காண்கிருன். இந்நிலையெய்தும் ஒருவன் எவ்வுயிர்க்காதல் தீங்கு செய்வனே? செய்யான். எவ்வுயிரிடத்தும் இரக்கங்கொள்ளும் ஒரு பெருந்தன்மையை இசை கூட்டுகிறது.

" ஒருவன் உலகில் இசைப் புலவனு யிருத்தல் வேண்டும்; அல்லது இசை கேட்டு உருகு முளத்தனு யிருத்தல் வேண்டும். இரண்டும் பெரு ஒருவன் மக்கள் இனத்தில் சேர்ந்தவனல்லன். அவனுல் இசைமயமாயுள்ள மன்பதைக்கே கேடு உண்டாகும். இசை யினிமை யுணராதவன் கொலைஞனே யாவன். இவ்வாறே ஷேக்ஸ்பியர் என்னுங் கவி மன்னர் கருதுகிருர். ஆதலால், மக்கள் இன்ப வாழ்விற்கு இசை இன்றியமையாததென்க."

—'முருகன் அல்லது அழகு' - நான்காம் பதிப்பு-பக். 80-85

## கடவுட்காட்சி

இறைவன் திருவடியைப் பற்றற்கு அமைந்துள்ள வழிகள் பல. ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு வழியைச் சிறப்பாகக் கூறுகின்றது. சில மதங்கள்

கடவுளை நேர்முகமாகக் கூருமல், மறைமுகமாகக் கூறுகின்றன. சில மதங்களில் குருமார் கடவுள் நிலையை ஏற்று நிற்கின்றனர். அவர்க்குச் செய்யப் படும் வழிபாடும் கடவுள் வழிபாடேயாகும். உலகில் முதல் முதலில் இயற்கை வழிபாடே முனைந்து நின்றது. நாளடைவில் சீதோஷ்ண நிலையையொட் டியும், மக்கள் பழக்க வழக்கங்களையொட்டியும் வழிபாட்டு முறைகள் மாறலாயின. எனினும், இயற்கை மூலமாய் இறைவனைப் பற்றும் நிலை கவிஞர் உள்ளத்தும் அறிஞர் உள்ளத்தும் ஆக்கம் பெற்றிருந்தது; பெற்றிருக்கின்றது. நம் சுந்தரனர் இயற்கையில் படிந்து படிந்து, இறைவன் தாளைப் பற்றும் முறையினை நன்கு உணர்ந்தார்; தாம் கண்ட அம்முறையை நம் முன்னைய அறிஞரினும் தெளி வாக மக்கள் மனம் கொள்ளும் வண்ணம் எழுதி யுள்ளார். அதனை அவர் கொண்ட சொல், தொடர் முதலியவற்றின் துணை கொண்டும், அவர் உரை கொண்டும் ஒல்லும் வகை யான் யாத்துள்ளேன். அதனைக் கீழ்த் தருகின்றேன் :

" ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு வித்து உண்டு. அவ்வவ்வித்து அததற்கு உரியதாய்த் துணைநின்று அதனையதனை ஓம்பி வருகிறது. அவ்வித்துக்களுள் ஒவ்வொன்றும் தொடர்பில்லாமல் இருக்கிறது. கடவுள் என்னும் வித்தோ, அத்தகையதன்று. அஃது எல்லா வித்துக்களுக்கும் வித்தாயிருப்பது.

"எல்லாவற்றிற்கும் வித்தாயுள்ள ஒன்று எல்லா வற்றிலும் இருத்தல் வேண்டும். எல்லாம் அதனல்

இயங்க வேண்டுமாதலால், அஃது இல்லாத இடம் இருத்தல் கூடாது. அதற்கு உரிய இடம் இங்கு அங்கு என்று குறிப்பிடுதற்கு இல்லை. அங்கு இங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிற்பதும், எங்கெங்கே பார்த்தாலும் அங்கங்கே நிற்பதும் அதன் இயல்.

" அதனை உணர்தற்கு அதன் உடலாய் உள்ள இயற்கையைப் புலன்களால் பற்றல் வேண்டும். இயற்கைக்கும் புலன்கட்கும் தொடர்புண்டு. இயற்கையும் புலன்களும் இயைந்து நிற்குமாறு படைப்பும் அமைந்திருக்கின்றது. இயற்கையோடு உறவு கொள்ள வேண்டுவது புலன்களின் கடன். புலன்களை விட்டுப் பிரியாது இயற்கை அவற்றை என்றும் கவர்ந்த வண்ணமாயிருக்கிறது. கவர்ச்சிக்குரிய பொருள் இயற்கையினிடம் ஒளிர்கிறது. அஃது, ' இயற்கை வேறு தான் வேறு என்று பிரித்துக் கூறுதற்கு இடனின்றி, இரண்டும் ஒன்றே ' என்று சொல்லத் தக்கவாறு நிற்கும் அழகு அல்லது கடவுளாகும்.

"அக்கடவுட்குத் தனித்த நிலையும் உண்டு. அவ் வியற்கையைப் பற்றுக்கோடாகக் கோடல் வேண்டும். அது கடவுளை உணர்த்தும். இயற்கையோடு உறவு கொள்ளும் அளவிற்கேற்ப, உயிர்களின் மாட்டுக் கடவுள் உணர்வும் பெருக்கெடுக்கும். 'இயற்கை விஷயங்களை நாள்தோறும் காண்கின்றோம்! இயற்கையுடன் வாழ்கின்றோம்! கடவுளைக் காண்கின்றோமில்லையே!' என்று சிலர் கருதலாம். காண்பன எல்லாம் காட்சி ஆகா. அங்ஙனமே

வாழ்வெல்லாம் வாழ்வாகா. புலன்களைத் தீய வழியில் செலுத்திக்கொண்டு இயற்கையை ஒரோ வழிக்காண்டலும், அதனுடன் வாழலும் முறையே அதைக் காண்டலும் ஆகாது; அதனோடு வாழ்தலும் ஆகாது. இறைவனை இயற்கை உணர்த்தும் என்னும் உறுதியோடு புலன்களை இயற்கைக்கு மாறுபட்ட நெறிகளில் தோயவிடாது அவைகளை இயற்கையில் நிலைபெறுத்தி, இயற்கையுடன் கலந்து உறவுகொள்ளப் பயிலல் வேண்டும்.

''இப்பயிற்சிக்கு முதன்முதல் வேண்டற்பாலது புலன் தூய்மை. புலன்களின் பயிற்சிக்கேற்ற வண்ணம் உலகில் வாழ்வு அமைகின்றது. புலன்கள் தீயவழியில் உழலின், வாழ்வும் தீயதாகும். அவை நல்வழியில் இயங்கின், வாழ்வும் நல்லதாகும். புலன்களின் நிலையைப் பொறுத்து வாழ்வு நிற்றலான், அப்புலன்களைத் தூய்மைப்படுத்துவதில் அன்பர் கண்ணுங் கருத்துமாய் இருப்பாராக.

'' கடவுளை உணர்தற்குப் புலன்களை அடக்குமாறு ஆன்றோர் அறிவுறுத்தியிருக்கின்றனர். புலனடக்கம் என்னும் சொற்றொடர் இந்நாள் தனக்குரிய பொருளிழந்து நிற்கின்றது. புலனடக்கம் என்பதற்குப் 'புலனை ஒடுக்கி அழித்தல்' என்னும் பொருள் சொல்லப்படுகிறது. அது தவறு. புலன் கெட்டால் அறிவு ஏது? வாழ்வு ஏது? கடவுள் மக்கட்குப் புலன்களை வழங்கியிருக்கின்றார். அவர் அப்புலன்களை வழங்காதிருப்பின், பிறவியால் என்ன பயன் உண்டாகும்? வாழ்வை இயற்கை மயமாக்கி,

இன்பம் நுகர்தற்பொருட்டே புலன்கள் ஆண்ட வனால் வழங்கப்பட்டுள்ளன. அப்புலன்களைக் கொண்டு இயற்கையைக் கண்ட வண்ணமாய், அதன் இசையைக் கேட்ட வண்ணமாய், அதன் இனிமையை நுகர்ந்த வண்ணமாய், அதன் மணத்தை முகர்ந்த வண்ணமாய், அதன் ஊறலை ஏற்ற வண்ணமாய் உலகில் வாழ்வு நடாத்த மாந்தர் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றனர் ; இல்லையேல், இன்பமிழந்து, துன்பக் குழியில் வீழ்வர்.

" 'இயற்கை வாயிலாக இறையைக் காண்டல் வேண்டும்' என்னும் எண்ணம் முதல் முதல் மாந்தர் நெஞ்சில் உறைந்து நிற்றல் வேண்டும். அவ் வெண்ணம் முதிர்ந்து முதிர்ந்து, புலன்களை இயற் கையில்செலுத்தும். புலன்கள் இயற்கையில் படிந்து படிந்து அவ்வியற்கையின்கண் விளங்கும் வடிவிலா அழகை உள்ளத்திற்கு உணர்த்தும். அவ்வழகு புலன்களுக்கும் உள்ளத்திற்கும் விருந்தாகி, அகப்புற வேற்றுமையை நீக்கி, சொல்லுதற்கரிய பேரின்பத்தை ஊட்டும். இது நிகழ்ச்சியில் நுகரத் தக்கது.

" கடவுளை வழிபடுவோர்க்கு அவரிடத்து இடையறா உறுதி இருத்தல் வேண்டும். உறுதி யின்றிச் செய்யப்படும் வழிபாடுகள் போலியாகவே முடியும். கடல் பொங்கி வரினும், மலை குலைந்து சாயினும், வான் இடிந்து வீழினும் 'கடவுள் காப் பார்' என்னும் உறுதி கடவுள் வழிபாட்டிற்கு

அடிப்படையானது. இவ்வுறுதியுடையார் எல்லா நலன்களையும் பெறுவர்.

"ஒன்றனிடத்தில் உறுதி எல்லார்க்கும் உருது. உறுதி, சிலர்க்கு எளிதிலும், சிலர்க்கு அரிதிலும் உறும். சிலர்க்கோ எளிதிலாதல், அரிதிலாதல் உறுதி உறுவதில்லை. உறுதிக்கு இன்றியமையாதது ஒன்றுளது. அஃது அன்பாகும். எவனுக்கு எப்பொருளினிடத்தில் அன்பு நிலைத்து முறுகி எழுகிறதோ அவனுக்கு அப்பொருளினிடத்து உறுதியும் படிந்து நிலைத்து நிற்கும். ஆகவே, உறுதி அன்புடன் தொடர்புடையது எனக்கொள்க.

"ஓர் அன்பன் தான் வழிபடும் கடவுளிடத்தில் குலையாத நிலைத்த நிறைந்த உறுதி கொண்டு பழகுவனேல், அவ்வுறுதி இறைவன் திருவருளை அவனுடன் இரண்டறக் கலக்குமாறு செய்யும். அவன் கடவுளாவன் என்றும் சொல்லலாம். அவன் என்ன நினைந்து வேண்டினும் பெறுவன். செயற்கருஞ் செயல்களும் அவனால் செய்தல் இயலும். அவன் எல்லாம் வல்ல சித்தனாகின்றான். உறுதிக்கு உள்ள அளவிலா வல்லமை சொலற்பாலதன்று. உறுதியின்றி 'முருகா! முருகா!!' என்று பல்லாண்டு போற்றினும், குறைகள் களையப்படமாட்டா. ஆதலால், வேண்டற்பாலது உறுதி! உறுதியே!! உறுதி நிலை பெறுதற்குப் பலதிற முறைகள் உண்டு. அவைகளுள் எவரும் எளிதில் ஆற்றக் கூடியன இரண்டு: ஒன்று நோன்பு; மற்றொன்று வழிபாடு.

"நோன்பு அல்லது விரதத்தால் உடல் வளம் பெறும். உடல் வளன், உயிர் நலனுக்குத் துணை புரியும். மன உறுதிக்கு உடல் நலம் இன்றியமை யாதது. உடல் நலம் இலா ஒருவன், நிலைத்த நெஞ் சம் பெறுதலரிது. நிலைத்த நெஞ்சிற்கு நல்லுடல் தேவை. நிலைத்த நெஞ்சிலேயே உறுதி கால் கொள்ளும். உறுதி நிலைக்கும் நெஞ்சம் பெறுத மகன் அந்தோ! ஏன் பிறந்தான்! அவன் எல்லாச் சிறுமை கட்கும் களியாடல்கட்கும் எளியனுய்ப் பிறவிப் பேற்றை இழப்பான். உடல் வளனுக்குக் கேடு சூழும் தீயொழுக்கங்கட்குக் காரணம், உறுதியின் மையாகும், யாண்டுமுள்ள அழகை உணர்தற்கு முன்னர், தன்பால் அவ்வழகை எழுந்தருளச் செய் வது அறிஞன் கடமை. ஆதலால், அழகு ஒழுகும் நல்லுடம்பு பெறமுயல்வதே அறிவுடைமை. நல் லுடல் நோன்பால் அமையும்.

"நோன்பு உள்ளுறுப்புக்களில் சேர்ந்துள்ள பழைய அழுக்குக்களைத் தள்ளி, அவ்வழுக்குக்களால் குவிந்த நச்சுப் பொதிகளை நீறுபடுத்தி, வெம்மை யைத் தணித்து, இயற்கைவழிக் குருதியை ஓட்டி, நரப்புக் குலைவை ஒழுங்குபடுத்தி, உரமூட்டி, உறுதி நிலைக்கத் தக்க உள்ளம் பெறும் உடலை நல்கும். நல்லுடல்வழி மனேவுறுதியையும், உறுதிவழி 'அழகு' எனும் கடவுளையும் பெறலாம். பெற்ருேர் இயற்கை மனமுடையராய், மாரு இளமையுடைய ராய், கடவுட்டன்மையுடையராய், அழியா அழ குடையராய்ப் பிறப்பிறப்புத் துன்பமின்றி இன்ப வாழ்வில் திளைப்பர்.

" இவற்ருல், ஆண்டவன் ஒருவன் என்பதும், அவன் இளமை-மணம்-இறைமை-அழகு உடைய வனுய் இருக்கின்ருன் என்பதும், அவ்வாண்டவனை அடைதற்குரிய நெறி இயற்கைச் செந்நெறி என்பதும் அறியக் கிடக்கின்றன."

திரு. வி. கலியாணசுந்தரனுரின் புற அக வேட்கையால் நம் தமிழ்நாடு பெற்ற நலத்தினை இதுவரையிலும் நாம் கண்டோம். இத்தகைய வேட்கை நம்மவருள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் அரும்பி மலர்தல் வேண்டும். இவ்வேட்கையுடையோர் பெருக்குக்கேற்ப நாடு பெருமையுறும்.

## 7. முடிவுரை

பிறவிகளில் மானிடப் பிறவியே உயர்ந்தது. எனினும், மாந்தர் குண குற்றங்களின் இருப்பிடமே யாவர். குற்றங்களினின்றும் அன்னூர் விடுபடுதற்கு இயற்கை துணைநிற்கின்றது. அத்துணையினை ஏற்றற்கு அவர் முந்துதல் வேண்டும். வாளா கிடப்பரேல் குறை யாருடையது ? நம் அறிஞர் சுந்தரனூர் இயற்கை வழிநின்று அன்பின் ஆக்கத்தால் தம் பிறவியில் அமைந்துள்ள குறைபாடுகளை ஒல்லும் வகை போக்கிக்கொண்டே உயர்கின்றூர். இதனை இவர் பெறும் புகழ் நன்கு காட்டுகின்றது. புகழ் ஒருவர் குற்றங்களினின்றும் நீங்கிக் குணக்கடலாம் இறைவனை நோக்கி உயரும் நிலையினைக் குறிக்கும் கருவியே அன்றி, மனித வாழ்வின் முடிவன்று. இவரை இத்துணையளவு புகழ்க்குரியராக்குவது இவர் நுண்ணுடலில் பெரிதும் ஆக்கம் பெற்றுள்ள அன்பேயாகும்.

அன்பர் பலர். அவருள் சிறந்தோர் திருவள்ளுவர், திருமூலர், நம்மாழ்வார், சம்பந்தர், அப்பர், தாயுமானவர், சேக்கிழார், இளங்கோ, இராமலிங்க சுவாமிகள் முதலியோர். இவர்கள் அன்பு ஆராய்தற்குரியது.

திருவள்ளுவர் மிகப் பெரியார்; பேரன்பர்; வாழ்வாங்கு வாழ்தற்கு வழி கூறிய வித்தகர் பல

ருள்ளும் தலைமை வகிக்கும் தனிச்சிறப்புவாய்ந்தவர். எத்தனையோ வகை உலக மாறுதலுக்கிடையில் இவர் புகழ் குன்றின்மேலிட்ட விளக்கென விளங்கு கின்றது. இவர் இயற்றிய திருக்குறள் மக்களை நல்லாற்றில் செலுத்தும் ஒப்புயர்வற்ற ஒரு நூல். 'மனம் புண்படும்' என நினையாது அறத்தின் ஆக்கம் கருதி அறவுரை கூறி உலகினை அறவழிப் படுத்த முயன்றமையால், இவர் உலகு புகழும் பெரும்புகழ் எய்தினர். இவர் உரைக்கு அரண் செய்யும் முறையில் வாழ்தல் எளிய காரியமன்று. இவர் கோலிய முறையில் வாழ முற்படுவார் தொடக்கத்தில் சிறிது இடருற்றுப் பின்னர் இணை யற்ற இன்பம் துய்ப்பர். திருக்குறள் காலும் அற நெறி அறவாழ்வு வாழாரை அலமரச் செய்யும். முதலில் புண்பட்ட நெஞ்சினெடு அந்நூலினை அவர் வெறுப்பினும் வெறுப்பர்; நாளடைவில் பிறவிக்கேற்ற முறையில் திருத்தமுறுவர். திருவள்ளுவரை அன்பிலார் எனக்கூற எவரும் முன் வாரார். ஆனல், இவர் கூற்றுக்களிற் பல இரக்க மிலார் உரைகள்போலத் தோன்றுகின்றன. மற்று ஆராய்ச்சியில் அவைகள் இரக்கமீதூரப் பெற்றூர் உரைகளாகக் காட்சி அளிக்கின்றன. 'அழ அழச் செய்வார் தம் மனிதர்' எனும் பண்டைமொழி இவர்க்கே பொருந்தும். வெறுப்பூட்டும் நிலையில் இரும்பு நெஞ்சினர் உரைகளும் முதிர்ந்த அன்புடையார் உரைகளும் வேற்றுமையின்றிக் காணுறும். கொடிய நெஞ்சினர் உரைகள் என்றும் துன்பமே

விளக்கும். அன்பர் உரைகள் முதலில் வெறுப்பைத் தந்து பின்னர் இன்பமளிக்கும். நம் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் அஞ்சாது பகர்ந்த அறவுரை சிலவற்றை ஈண்டுக் காண்போம்:

*ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்*
*செத்தாருள் வைக்கப் படும்.* (214)

*புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்*
*அறங்கூறும் ஆக்கம் தரும்.* (183)

*விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்*
*தீமை புரிந்தொழுகு வார்.* (143)

*இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்*
*துறந்தார் துறந்தார் துணை.* (310)

*செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்*
*அவியினும் வாழினும் என்!* (420)

*சாதலின் இன்னாத(து) இல்லை இனிததூஉம்*
*ஈதல் இயையாக் கடை.* (230)

*என்பி லதனை வெயில்போலக் காயுமே*
*அன்பி லதனை அறம்.* (77)

*சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு*
*நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.* (307)

இக்குறள்களைக் கூர்ந்து ஆராய்வார்க்குத் திருவள்ளுவனார் முதிர்ந்த அன்பு புலனாகும். இவற்றில் ஒன்றினை ஈண்டுச் சிறிது ஆராய்வோம்:

**புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்**
**அறங்கூறும் ஆக்கம் தரும்.**

[பிறனைக் காணாதவிடத்து இகழ்ந்துரைத்துக் கண்ட விடத்து அவனுக்கு இனியனாகப் பொய்யாகப் பேசி ஒருவன் உயிர் வாழ்தலைக்காட்டிலும், அதுசெய்யாமல் உயிர்விடுதல் அவனுக்கு அறநூல்கள் கூறும் பயனைக் கொடுக்கும்.]

புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்தலால் ஒருவன் பல வேறு பிறவிகளில் தன்னைத்தொடர்ந்து வரும் தீமைகளைச் சேர்த்துக்கொள்ளுகின்றான் ; அத்தகைய வாழ்வின் நீங்கி இறந்தொழிவானாயின் அப்பிறவியில் தன்னைச் சூழும் தீமையின் நீங்கி மறு பிறப்பிலேனும் நன்மையுறுவன். ஆதலின் நாயனார், 'சாதல் அறங்கூறும் ஆக்கம் தரும்' எனக் கூறினர். ஆழ்ந்த நோக்கிலார்க்கு நாயனார் கூற்றுச் சிறிது வெறுப்பைத் தரலாம். குடும்ப அமைப்பாலும், சுற்றத்தார் இயல்பாலும், தீயோர் நட்பாலும் திருத்த முறுதற்கு இயலாத நிலையிலிருக்கின்ற அவனுக்குச் சாதலினும் நன்மை பயப்பது வேறுண்டோ? நாயனார் அன்புடல் தாங்கினவர். அவர் உள்ளத்தைச் சிறிது ஊன்றி நோக்குதல் வேண்டும். தீவழி ஒழுகும் மகனைத் தாய், 'இவன் இறந்தொழியின் என் குடும்பம் சீருறும்' எனக் கூறுமாறு போலக் கூறுகின்றார் நாயனார். எத்தகைய தீயனாயினும் மகனை இழக்க விரும்பும் தாயும் உண்டோ? 'திருத்த இயலவில்லையே!' என்னும் ஏக்கமே அத்தாயினை அங்ஙனம் கூறுமாறு தூண்

டிற்று. மற்று ஒருவன் ஊழின் துணையின்றித் தன் விருப்பம்போல இறந்துவிடவும் இயலாது. இதனை நம் தெய்வப்புலவர் நன்குணர்வர்; புறங்கூறிப் பொய்த்துயிர் வாழும் வாழ்வு ஒழிதல் வேண்டும் என்னும் எண்ணத்தால் இங்ஙனம் கூறினர்.

இவ்வாறே, நம் பெருமானைப் பாடிப் பாடி 'நம்மாழ்வார்' எனப் பெயர் பெற்ற ஞான வள்ளலார்,

" சொன்னால் விரோதமிது ஆகிலுஞ்
 சொல்லுவன் கேண்மினோ
என்னாவில் இன்கவி யானொரு
 வர்க்கும் கொடுக்கிலேன்
தென்னா தெனாவென்று வண்டு
 முரல்திரு வேங்கடத்(து)
என்னானை என்னப்பன் எம்பெரு
 மா னுள னாகவே. (2985)

" உளனாக வேஎண்ணித் தன்னையொன்
 றாகத்தன் செல்வத்தை
வளனா மதிக்குமிம் மானிடத்
 தைக்கவி பாடியென்
குளனார் கழனிசூழ் கண்ணன்
 குறுங்குடி மெய்ம்மையே
உளனாய எந்தையை எந்தைபெம்
 மானை ஒழியவே." (2986)

எனத் தம் உள்ளக் கருத்தை வெளியிட்டிருத்தலும், சுமார் 300 ஆண்டுகட்குமுன் தோன்றி ஞான வீரராய் விளங்கிய தாயுமானவர்,

"மாறுபடு தர்க்கந் தொடுக்கவறி வார்சாண்
வயிற்றின் பொருட்டதாக
மண்டலமும் விண்டலமும் ஒன்ருகி மனதுமல
மாலாகி நிற்கவறிவார்
வேறுபடு வேடங்கள் கொள்ளவறி வாரொன்றை
மெணமெனென் றகம்வேறதாம்
வித்தையறி வாரெமைப் போலவே சந்தைபோல்
மெய்ந்நூல் விரிக்கவறிவார்
சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்கவறிவார்
திரமென்று தந்தம் மதத்தையே
செய்கைகோடும் உளறவறிவார்
ஆறுசம யங்கடொறும் வேறுவே ருகிவிளை
யாடுமுனை யாவரறிவார்
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே."

(ஆனந்தமான பரம், 3)

எனக் கூறியிருத்தலும் முதிர்ந்த அன்புடையார் இயல்பை வெளிப்படுத்தும்.

சில ஆண்டுகளுக்குமுன் சென்னையில் பெருஞ் செல்வாக்கொடு வாழ்ந்திருந்த பாம்பன் குமரகுரு தாசரைத் தமிழ் உலகம் நன்கு அறியும். அவர் மக்கட்கும் மொழிக்கும் ஆற்றிய தொண்டு மிகப் பெரிது. அப்பெரியாரைப் பற்றிப் பெருமையோடு பேசுவாரிற் பெரும்பாலோர் அவர்பால் ஒரு குறை காண்கின்ருர். அக்குறை யாது? அது மக்களை நல் வழிப்படுத்த உறுதி பயக்கும் உரைகளை அவர் கூறியகாலை அவற்றிற்கு உடலாய் அமைந்தெழுந்த

ஒரு சக்தி. அறிஞர் தம் உரைகட்கு அமைத்துக் கொள்ளும் உடல்களில் இஃதொன்று. உண்மை நிலை உணராது மக்கள் அதனைக் கோபமெனத் தவருக உணர்ந்தார்கள். தாசர் பேரறிஞர்; கற்பன கற்றவர்; உள்ளத் துறவுடையார்; திருவள்ளுவர் திருக்குறளை நன்கு பயின்றவர்.

'இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.' (310)

எனவும்,

'சினமென்னும்சேர்ந்தாரைக்கொல்லிஇனமென்னும்
ஏமப் புணையைச் சுடும்.' (306)

எனவும் இடித்துரைக்கும் குறள்களை ஓதி உணர்ந் தார் உள்ளத்தும் கோபம் உதிக்குங்கொல்! உண்மையில் அவர் உள்ளத்துதித்து அரும்பிக் கோபம் வெளி வந்திருப்பின், அவரையும் அதை ஏற்ருரையும் கெடுத்திருக்கும். அடிகளார் அற வழி நின்ருர்; அறத்திற்கு அரண் செய்தார். ஆத லின், அவர் உள்ளம் என்றும் கோபத்திற்குப் பிறப் பிடமாய் இருந்ததில்லை. அவர்பால் பழகினுர் அனை வரும் நன்னெறி பின்பற்றி வாழ நாம் காண்கின் ருேம். திரு. வி. கலியாணசுந்தர முதலியாரும் அவர் பால் மிகமிக நெருங்கிப் பழகிய பண்பால் அற வாழ்வு வாழ்கின்ருர்; அனைவர்க்கும் அன்பராய் இருக்கின்ருர். அப்பெரியார் ஊனுடல் தாங்கி நின்ற நாள் இச்சென்னையில் வதிந்தும் நான் அவ

ரைக் கண்டு உரையாடும் பேறு பெற்றிலேன். எதற்கும் வாய்ப்பு வேண்டும் !

இவற்ருல் தம்மொடு நெருங்கிப் பழகுவார்க்கும் உலகினர்க்கும் உறுதி பயப்பனவற்றை அஞ்சாது கூறுபவரே முதிர்ந்த அன்புடையார் என்பது அறியக் கிடக்கின்றது. திருவள்ளுவர் வழிநின்று வாழ்வு நடாத்தும் நம் அன்பர் திரு. வி. கலியாண சுந்தரனுர் பலகால் திருவள்ளுவர் அளவு உயர்ந்து தீயன ஒழிய அறவுரை கூறி வீரப் பணியாற்றுகின்ருர் ; சிலகால் ' மனம் புண்படும் ' என நினைந்து தம்மொடு நெருங்கிப் பழகுவார் தீயன மேற்கொள்ளுங்கால் வாளா கிடக்கின்ருர். இவர்பால் பேரன்பும் பெருமதிப்பும் உடையாரை இவர் திருத்தாது விடுவரேல் வேறு எவரே அவரைத் திருத்த வல்லார் ? ஆதலின், அன்பர் முதலியார் என்றும் திருவள்ளுவர் அளவு உயர்ந்து நிற்றல் வேண்டும் என்பது எனது வேட்கை ; எனது வேண்டுகோள்.

இப்பெரியாரின் அறுபதாம் ஆண்டின் நிறைவு 1943-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 24-ஆம் தேதி நண்ணிற்று. இந்நிறைவினைக் குறித்துச் சென்னையில் ' மணி விழாக் கழகம்,' ஒன்று நிறுவப்பெற்றது. இக்கழகம் ஆற்றிய தொண்டால் தமிழ் நாடு முழுதும் திரு. வி. க. மணி விழா மயமாயிற்று. இம்மணி விழா, சென்னையில் சிறப்பாகச்சிந்தாதிரிப் பேட்டை உயர்கலாசாலையிலும், கோக்கலே ஹாலிலும், நகராண்மைக்கழகத்திலும் கொண்டாடப் பெற்றது. இவ்விழா நிகழ்ச்சியினைத் ' திரு. வி. க.

மணி விழா'* என்னும் மகுடம் ஈந்து அறிஞர் வே. தியாகராய முதலியார் எழுதியுள்ள பொருள் பொதிந்த கட்டுரை இனிது விளக்கும். ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் இவரைப் பற்றி எழுதாத பத்திரிகை இல்லை என்றே கூறலாம். பத்திரிகைகளிலும், தனிப்பட்ட முறையிலும் இவரைப்பற்றி வெளி வந்த குறிப்புக்களில் சில வற்றை ஈண்டுத் தருகின்றேன் :

" * * * திரு. வி. க. வுடன் நான் அடிக்கடி பழகியதுண்டு. ஒவ்வொரு தடவையும் அவரது மதிநுட்பத்தைக்கண்டு வியந்திருக்கிறேன். அவர் ஓர் இயற்கைப் புலவர்; எதையும் ஆழ்ந்தறிந்து, உண்மையை ஊடுருவிப் பார்க்கும் ஆராய்ச்சி யாளர் ; பழமையின் நலத்தையும் புதுமையின் விரிந்த பயனையும் கொண்ட சீர்திருத்தக்காரர் ; உள்ளொன்று புறமொன்றில்லாத உண்மை யாளர் ; நிகரற்ற செந்தமிழ் நாவலர் ; கவி யுள்ளம்படைத்த பாவலர்; தம் உள்ளத்திலிருந்து பிறர் உள்ளத்திற்குப் பேசும் செஞ்சொற் புலவர் ; எந்தப் பொருளையும் புதிய மெருகு கொடுத்து அழகுசெய்து தமிழன்னைக்கு அணி விக்கும் பொருட்சிற்பி ; பட்டம் பதவி மாலை ஊர்வலங்களில் வேட்கை கொள்ளாமல், இயல் பாகத் தமது கடமையை நாட்டிற்காகவே செய்யும் தூய பொதுநல வீரர் ; விடுதலை வேட்கை கொண்ட தேச பக்தர் ; காலத்தை அஞ்சாமல்

* பிற்சேர்வு - ' திரு. வி. க. மணிவிழா '

கெஞ்சாமல் தமது கருத்தைச் சொல்லும் இத மூாசிரியர்; தமிழருக்குப் புதுவழி காட்டி எல்லாத் துறைகளிலும் பண்புறப் பணிசெய்த ஒப்புர வாளர் ; தொழிலுலகிற்குக் கருணையுடன் தொண்டு செய்த வன்றொண்டர் ; பெண்மையின் பெருமையை விளக்கி, இல்லறத்தின் பயனை வள்ளுவர்போலத் துலக்கிய சமுதாய நண்பர் ; எம்மதமும் சம்மதமாய் ஒழுகும் சன்மார்க்க மணி.

"இத்தகைய பெரியார் நமது தமிழ் நாட்டில் பிறந்திருப்பதே நமக்கொரு பெருமையன்றோ ? தமிழர் சென்ற முப்பதாண்டுகளாகத் திரு. வி. க. வை நன்கறிவர். அவர் சொற்கள் தமிழர் உள் ளத்தில் ஊறிக் கிடக்கின்றன. திரு. வி. க. பேச் சென்றால் தமிழர் கூட்டம் கூட்டமாக வருகின்ற னர். ஆனால், தமிழர் வங்காளிகளைப் போலத் தமது பெரியார்களைப் போற்றும் நாள் வர வேண்டும். திரு. வி. க. வங்காளத்தில் பிறந் திருந்தால் இப்போது உலகப் புகழ் பெற்றிருப் பார். அவர் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் ஐரோப்பிய மொழிகளில் உலாவும். அவரை ஓர் எமர்ஸன்போல் உலகம் மதிக்கும். போகட்டும். திரு. வி. க. வின் அறுபதாம் ஆண்டு விழாவை யாவது தமிழர் எழுத்து மூலம் கொண்டாடு கிறார்கள். அம்மட்டில் தமிழன்னை செய்த தவப் பயனே."

—சுவாமி சுத்தானந்த பாரதியார்

'திரு. வி. க. மணிவிழாக் கண்ணி'

"காந்தியவர்கள் இந்திய அரசியலில் தியாக மும் துணிச்சலும் புகுத்திய காலம் இருபத்து நான்கு ஆண்டுகளுக்குமுன். அப்போது தென் னுட்டில் எதிர்ப்பை விட்டுவிட்டுப் பொறுப்பை எடுத்துக்கொண்ட நான்கைந்து தலைவர்களில் ஒருவர் ஸ்ரீமான் திரு. வி. க. அவர்கள். பகைமை யும் ஆகுலமும் போய் அமைதியும் நோன்பும் சாதனங்களான அதிசயத்தைக் கண்ட நாட்கள் - ஆங்கிலப் பிரசங்கங்கள்போய்த் தமிழன்றி வேறு பேச்சுத் தெரியாத பாமரர்களிடையே வேலை துவக்கிய புரட்சி நாட்கள் - தொழிலாளர்களைத் திரட்டிச் சங்கம் நிறுவும் அபாய நெறி முதல் முதலில் தோன்றிய நாட்கள் - அப்போது சுகமான பள்ளித் தொழிலைவிட்டு அரசியல் அலை கடலில் புகுந்தவர் ஸ்ரீ திரு. வி. க. அக்காலத்தில் வேலைசெய்த அரசியல் தொண்டர்களுக்குத்தான் தெரியும் திரு. வி. க. உள்பட எங்கள் சிலருக்குள் வளர்ந்த அன்பும் கட்டுப்பாடும் கூட்டுறவும். பிறகு எவ்வளவோ சம்பவங்கள் நடைபெற்று விட்டன. ஆயினும், அவருடன்கூடி நாங்கள் சிலர் அந்நாட்களில் செய்த தொண்டில் கண்ட மகிழ்ச்சியை என்றும் மறக்கமுடியாது."

—*திரு. சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்*, B.A., B.L.
*'திரு. வி. க. மணிவிழாக் கண்ணி'*

"நமது தாய்த்திரு நாட்டுக்கும் தமிழன்னைக் கும் பெருந்தொண்டாற்றி வரும் திரு. வி. கலி யாணசுந்தரனுரை அறியாதார் இலர். இவர் மக்களை அவர்கள் கொண்ட குறிக்கோளிலே

சென்றெய்துமாறு முன்னின்று நடத்தவல்ல தலைமக்கட்குரிய பண்புகள் பலவும் இயல்பாகவே வாய்க்கப் பெற்றவர் ; உள்ளொளியுடையவர் ; பரந்த நோக்கமுடையவர் ; அறிவு சான்றவர் ; உறுதி படைத்தவர் ; ஆற்றல் மிக்கவர் ; அன்பு நிறைந்தவர். இவற்றோடு கல்வியிற் சிறந்தவர் ; சொல்வன்மை படைத்தவர். இன்னோரன்ன இயல்புகளை உடையவரன்றோ தாய்த்திரு நாட்டுக்குத் தொண்டு புரியத்தக்கவர்.

"தாய்த்திரு நாட்டுத் தொண்டு தமிழ்த் தொண்டினை அடிப்படையாகக் கொண்டதாகல் வேண்டுமென்பது கலியாணசுந்தரனார் கருத்து. இருவகைத் தொண்டுகளுக்கும் நெருங்கிய பிணைப்பு உண்டு ; ஒன்றை ஒன்று தழுவியது. ஒன்றற்கு மற்றொன்று இன்றியமையாதது. தாய்மொழிப் பற்றின்றித் தாய்நாட்டுப் பற்று இல்லையாம். அங்ஙனமே தாய்நாட்டுப் பற்றின்றித் தாய்மொழிப் பற்றும் இல்லையாம்."

—திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை, B. A., B. L.

'சுதேசமித்திரன்'

" * * * பல வருஷங்களுக்கு முன்பு, ஆங்கிலங் கற்று, ஆங்கில நூல்களைப் பயின்று, அவற்றின் மூலமாகத் தேசீய உணர்ச்சி, அரசியல் விவகாரம், ஆசாரச் சீர்திருத்தம், சமுதாய சேவை முதலிய நல்லெண்ணங்கள் தம் மனத்துள் எழப்பெற்ற சிலர் நாட்டின் நலத்தைநாடிப் பலவாறாக உழைத்துவந்தார்கள். இவர்களுடைய முயற்சி, பெரும்பான்மையும் ஆங்கில மொழியின் மூலமா

கவே நிகழ்ந்துவந்தது. ஆனால், இவர்கள் மக்களின் உளத்தைக் கவர்வது தாய்மொழியின் துணையின்றி இயலாது என்பதை உணர்ந்து, தமக்குத் தெரிந்ததாயும் குறைபாடுள்ளதாயும் இருந்த தமிழின் மூலமாகவும் பிரசாரம் செய்துவந்தார்கள்.

" சுமார் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன் வரை இந்த நிலை இருந்து வந்தது. அப்போது தமிழில் பெரும்புலமை வாய்ந்த ஒருவர் அரசியல் தொண்டில் ஈடுபட்டு, அழகிய தமிழில் பிரசங்கங்கள் செய்யவும், பத்திரிகை நடத்தவும் முன்வந்தது பலருக்கும் அளவிலா வியப்பையும் ஆநந்தத்தையும் அளித்தது. பழந்தமிழ் இலக்கியங்களின் சுவையில் திளைத்து, மீண்டும் மீண்டும் தமிழ்ப் பெருங்காவியங்களைப் படித்துப் பயின்ற அவர் நவீனமான நவநாகரிக வாழ்க்கையில் கலந்துள்ள கருத்துக்களையும் தமவாக்கிக்கொண்டு, இலக்கண வழுவின்றி, தெளிந்த தமிழ்ச் சொற்களின்மூலம், மக்களின் மனங்களைக் கொள்ளை கொள்ளுமாறு, உணர்ச்சிவேகம் ததும்பப் பல பிரசங்கங்களைச் செய்துவந்தார்; பல கட்டுரைகளை எழுதிவந்தார்; புறநானூறு முதலிய மிக மிகப் பழமையான தமிழ் நூல்களிலிருந்தும், பிற்கால நூல்களிலிருந்தும் அரசியல் விஷய சம்பந்தமாகவுள்ள தக்க மேற்கோள்கள் பலவற்றை எடுத்துக் காட்டினார்; மேலை நாடுகளில் செழித்து வளரும் நவீன அரசியல் கருத்துக்களைத் தமிழ் மொழியில் புகுத்தி, அதை வளம்பெறச் செய்தார். அவர்தாம் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் என்று சொல்ல வேண்டுவதில்லை. அக்காலத்தில்

பல பிரசங்கிகளுக்கும், எழுத்தாளர்களுக்கும் அவர் ஒரு மார்க்கதரிசியாக இருந்தார். தம்மை அறியாமலே பலர் அந்நாளில் அவருடைய பிரசங்க நெறியைப் பின்பற்ற முயன்ருர்கள் ; அவருடைய எழுத்து முறையைத் தம்மால் இயன்ற அளவில் அனுசரிக்கத் தொடங்கினர்கள். தமிழ் நடை அரசியல் துறையில் வளம்பெற்று விரிவடைந்த தற்கு அவரை ஒரு முக்கிய காரணராகக் கூற வேண்டும். அரசியல் சேவையால் தமிழை வளர்த்த பெருமையில் பெரும்பகுதி திரு. வி. கலியாண சுந்தர முதலியாரைச் சேர்ந்ததென்றே நான் கருதுகிறேன். ''

—திரு. பெ. நா. அப்புஸ்வாமி, B.A., B.L.

'திரு. வி. க. மணிவிழாக் கண்ணி'

" * * * கேட்போர் உணர்ச்சி ததும்பும்படி நாட்டுமக்கள் நலங்குறித்து இவர்கள் பேசிய சொற்பொழிவுகளை அரசியற்றுறையில் தலை சிறந்து விளங்கும் ஆங்கிலமொழி வல்லார் பலரும் பாராட்டிப் பரவசப்பட்டதுண்டு. அரசியலறிவு ஒருபாற் சிறக்க மற்ருெருபால் பெண்ணுரிமை நலத்தைப் பற்றிய உழைப்பு இவர்கள்பால் பெரிதும் சிறந்தது என்னலாம்.

* * * *

" திரு. வி. கலியாணசுந்தரனுர் இவ்வறுப தாம் யாண்டுபோல் மற்ருேர் அறுபதாம் யாண்டும் நிறையப் பெற்றுத் தமிழன்னைக்கு வேண்டும் பணி புரிந்து தமிழ் மக்கள் இன்புறும் நிலை கண்டு தாமும் இன்புற்று வாழும் வண்ணம்

அம்மையப்பராகிய இறைவர் திருவருள் துணை புரிகவென வேண்டுகின்றேன்."

—மகாமகோபாத்யாய-பண்டிதமணி-மு. கதிரேசஞ் செட்டியார்
'பிரசண்ட விகடன்'

"திரு. வி. கலியாணசுந்தர முதலியார் சொற் பொழிவு செய்துகொண்டிருந்தார். பொருளைக் குறிக்கும் சொற்பொழிவுகள், பொருளைக் குறைக்கும் சொற்பொழிவுகள், பொருளை மறைக்கும் சொற்பொழிவுகள் எத்தனையோ அதற்குமுன் கேட்டிருந்தேன். ஆனால், அன்று நான் கேட்டதைச் சொற்பொழிவு என்றால் போதாது; பொருட்பொழிவு - சொற்கள் மறைந்த பொருட் பொழிவு - என்றாலும் போதாது. அந்தச் சொற் பொழிவைத் தமிழ்ப் பொழிவு - தமிழ்க் காதலின் பொழிவு - என்றே கருதினேன்; பருகினேன் என்றே சொல்ல வேண்டும். பொருளிலே சொற் கள் மறைந்தன. தமிழிலே - தமிழ்க் காதலிலே - மறைந்துவிட்டார் தமிழ்க் காதலர்! எனவே, அன்று நான் கண்ணினால் தமிழ்க் காதலைக் கண் டேன்; கலியாணசுந்தர வடிவத்திலே, "தமிழ னாய்ப் பிறந்த பயனை இன்று பெற்றோம்!" என்று இறுமாந்திருந்தேன்.

"'மண்ணும் விண்ணும் ஒருங்கே வறண்டு எங்கும் தண்ணீர்ப் பஞ்சமாயிருந்த காலத்திலே, ஓரிடத்தில் அருமையாக இருந்த உண்ணுநீர் கண்ட மான் கூட்டம் பட்டபாடு பட்டது இராம னைக் கண்ட மிதிலைப் பெண் குலம்' என்று கம்பர் அந்த அழகுத் தாகத்தை எவ்வளவு அழகாக,

எவ்வளவு அருமையாக வருணிக்கிருர் ! எனக்கோ என் தமிழ்த் தாகத்தை வெளியிடவும் ஆற்றல் கிடையாது. அந்தத் தாகம் அவ்வளவு அதிகமா யிருந்ததென்பது திரு. வி. க. அவர்களின் ஜீவ கங்கையான சொற்பொழிவுகளைக் கேட்ட பின்பு தான் எனக்கே தெரிந்தது.

"பிறகு முதலியாரவர்களை விருதுநகரிலும், திருநெல்வேலியிலும், செட்டிமார் நாட்டிலும், சென்னையிலும் பல தடவை சந்தித்துப் பழக நேர்ந்தது. தமிழையும் ஆங்கிலத்தைப்போல் சக்தி வாய்ந்த ஒரு கருவியாகக் கையாண்டு, வாழ்க்கை யின் பலதுறைகளிலும் புதிய எண்ணங்களையும் லட்சியங்களையும் பரப்ப முடியும் என்ற அபிப் பிராயத்தை முதல் முதல் என் உள்ளத்தில் வேரூன்றச் செய்தவை திரு. வி. க. அவர்களின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளுமே. இவை என்னைப்போன்ற எத்தனையோ தமிழர்களின் உள்ளங்களிலும் ஒரு புதிய சக்தியை விதைத்து, மொழிப் பற்று, சமயப் பற்று, நாட்டுப் பற்று என்ற முப்பொருளாகிய முழுச் செல்வத்தையும் விளைவித்துக்கொள்ள வசதி அளித்திருக்கின்றன.

"தமிழுக்கும் தமிழ் நாட்டிற்கும் தமிழர் களின் சன்மார்க்க வாழ்விற்கும் திரு. வி. க. செய் திருக்கும் திருப்பணிகளை "நவசக்தி" என்ற ஒரே வார்த்தையால் குறிக்கலாம். இத்தகைய தலைப் பெயரோடு இவர் நடத்தி வந்த பத்திரிகை, தமிழ்த் தென்றலாக நடந்து வந்து, தமிழர்களுக் குப் புது விருந்தாகிப் புதிய ஆரோக்கியத்தையும் ஆற்றலையும் அளித்தது. தமிழ்த் தென்றல் சில

சமயங்களில் புயலாகவும் பரிணமித்து, அரசியல் வானத்திலுள்ள நச்சுக் காற்றை அடித்துப் போக வும் உதவியது. எனினும், அந்தத் தமிழ்க் காற்று எவ்வளவு சமரசமாக வீசியதென்பதற்கு அந்தத் தமிழ்ப் பத்திரிகைக்குக் கலியாணசுந்தரர் இட்டிருந்த "நவசக்தி" என்ற வடமொழிப் பெயரும் ஒரு நல்ல சாட்சியாகும்."

—திரு. பி. ஸ்ரீ.
'சுதேசமித்திரன்'

"தமிழிலே எத்தனையோ பேர் பிரசங்கம் செய்து கேட்டிருக்கிறேன். நான் கண்டவரையில் தமிழை அவரவ்வளவு அழகாக ஆண்டவர் இல்லை. சுபாவமாகச் சுகபாவம் அமைந்திருந்தது. தூய்மையான தமிழ்; தெளிவு காட்டிய அறிவு; பண்பட்ட மனது. ஒன்ருக இவை திரண்டு செவிக்கு இன்பம் சொரிந்தன; பாஷைக்கும் கருத்துக்கும் உள்ள உறவை விளக்கின. மகாத்மா காந்தியின் ஆங்கிலப் பிரசங்கங்களில் காணும் அற்புதம் இதுதான்! திரு. வி. க. ஆண்டது தேன் தமிழ். தமிழ்ச் சோலையில் அவர் கொய்த புஷ்பங்களையெல்லாம் சுதந்திர தேவிக்கு அர்ப்பணம் செய்தார். நறுமணம் நிறைந்த மலர்கள்! 'நாமார்க்கும் குடியல்லோம், நமனையஞ்சோம், நரகத்தில் இடர்ப்படோம்' என்ற பழைய பாசுரத்தைப் புதிய பிரமாணத்திற்கு அவர் எழுப்பிய போது கேட்போர் மனத்தில் எழுந்த அதிர்ச்சியை யார் மதிப்பிட முடியும்?

"அவர் ஆற்றிய தொண்டில் பிரசங்கம் செய்தது சிறு பாகந்தான். பிரசாரத்தில் ஈடுபட்டவர் பிரசங்கத்தோடு நிற்கவில்லை ; பத்திரிகை நடத்தவும் ஆரம்பித்தார் ; தமிழ் அபிமான மேலீட்டால் தனித் தமிழ் முறையைச் சிறிது காலம் ஆண்டு பார்த்தார் ; அநுபவச் சொற்களைத் திருத்த முயன்றார்.

* * * *

" நிஷ்காம சேவையில் ஈடுபட்டுத் துறை கண்ட இடமெல்லாம் தொண்டாற்றினர் பெரியார். மெய்யறிவுமேலிட்டது. நடையுடை பாவனைகளில் படிப்படியாகக் கண்ட மாறுதல்களே இதற்குச் சான்று. சதஸுக்கு அங்கமாக உடை தரித்த காலம் உண்டு. இன்று ஆண்டியாக மாறிவிட்டார். இருள் நீங்கி அருள் பெற்றுப் பொருளிலே பிரமை கழிந்துவிட்டது. சுபாவமாகவே சாந்தமூர்த்தி எனலாம். அநுக்கிரகத்தால் அன்று கண்டது அநுபவ முதிர்ச்சியால் இன்று சோபிக்கிறது. பதட்டமாக என்றும் அவர் பேசியதில்லை; பக்குவமாகவும் இன்று பேசுகிறார் ; சினேகத்திற்குப் பாத்திரமானவர் ; சினேகத்தை லௌகீக சாதனமாகக் கொண்டவர் அல்லர். லாபத்தைப் பிரதீக்ஷிக்கும் சிநேகமல்ல. ஏழை எளியோர்க்கு இரங்கி இயன்றதெல்லாம் செய்வார். இயற்கைப் பிரபுவென்று சொல்வது மிகையாகாது. பணியாற்றிப் பிரமை நீங்கிப் பரத்தில் மனம் லயித்துப் பத்து வருஷங்கள் ஆகின்றன. வேதாந்த விசாரணையில் ஈடுபட்டு விளக்க உரைகளை ஆங்காங்கு வழங்கிவருகிறார். நல் வாழ்வுக்குச் சிறந்த

உதாரணம் அவர். நல்லார் உள்ள வரையில் நாட்டுக்கு நலனுண்டு. நல்லாரைக் கொண்டாடுவோம்.''

—திரு. ஸி. ஆர். ஸ்ரீநிவாசன், B. A.
'சுதேசமித்திரன்'

இறைவன் அருளால் தன்னலக் கட்டற்றுப் பணியாற்றும் பேரறிஞர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரின் வாழ்க்கை நலத்தினை நாம் இதுவரையிலும் கண்டோம். அன்பர் முதலியாருக்கு நோயற்ற யாக்கையும் நீண்ட ஆயுளும் வழங்குமாறு எல்லாம் வல்ல இறைவனை வழுத்துகின்றேன்.

இப்பெரியாரை உலகிற்கு ஈந்த தமிழ்நாடு வாழ்க! இவர்தம் கருத்தாம் உயிர்க்கு உடலாய் அமைந்த தமிழ்மொழி வாழ்க!

**வாழ்கஇவ் வையகம்! வாழ்கநற் கலைகள்!**
**வாழ்கநல் லறிஞர் வழிவழி சிறந்தே!**

பிற்சேர்வு

## துள்ளத்தில் மூன்று நாழிகை*

1938 - ஆம் ஆண்டு ஆவணி மாதம் 10-ஆம் நாள் பகல் பன்னிரண்டு மணிக்குத் திரு. வி. கலியாணசுந்தரனாருடன் அவர் பிறப்பிடத்தைக் காண யான் புறப்பட்டேன். தேனாம்பேட்டை வழியாய்ப் பூவிருந்தவல்லிக்குச் செல்லும் 'பஸ்ஸில்' ஏறும் பொருட்டு யாங்கள் சாது அச்சுக்கூடத்திலிருந்து இராயப்பேட்டை 'லாயட்ஸ்' வீதி வழியாய்ச் சென்றோம். அன்று பரிதியின் கொடுமை சிறிது வேகமாகவே இருந்தது. குடையும் செருப்பும் எனக்குத் துணை நின்றமையால், கதிரவன் என்னளவு வலியற்றவனானான். குடை செருப்புகளின் உதவி நாடுதல் முதலியாருக்கு வழக்கமன்று. அதனால், அவர் தாம் மேலணிந்திருந்த வெள்ளைக் கதர்த் துண்டைத் தலைக்கு அரணாகக் கொண்டார். என் குடை நிழல் அவர்க்கும் பயன்படும் விதம் யான் முயன்றேன். ஆனால், குடையை உயர்த்திப் பிடிக்கும் முயற்சியால் என் கை தளர்ச்சியுறும் என்றெண்ணி, அவர் தமக்குக் குடையின் உதவி வேண்டுவதில்லை என்றும், தம் கதர்த்துண்டே தமக்கு வேண்டுமளவு

---

* தை. ஆ. க.

காப்பளிக்குமென்றும் கூறி, எனக்கு இடப்பக்கமாக மாறி நடக்கலானர். நாங்கள் தேனும்பேட்டை அடையுமளவும் என்னுல் கூடுமானவரையில் என் குடை அவர்க்கும் பயன்படும்படி யான் செய்து வந்தேன்.

வழியில், சுந்தரனர் தம் வாழ்விற்கு உறுதுணையாய் நின்ற பெரியார் சிலர் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளிற் சிலவற்றைச் சொல்லிக்கொண்டே வந்தார். அவர் கூறிய பெரியார் வாழ்க்கைச் செய்திகளிலிருந்து 'உயர்வு தாழ்வுகளில் மனம் செலுத்தல் அறிவுடைமையாகாது' என்பதையும், 'பொய் மனிதவாழ்வின் உயர்வினைச் சிதைக்கும் கொடிய நோய்' என்பதையும், 'மனிதன் பிறர்க்கு உழைக்கவே பிறந்துள்ளான்' என்பதையும், 'துன்பத்தைத் தாங்க வல்லவனே மனிதப் பிறவிக்குரியான்' என்பதையும் யான் உணர்ந்தேன்.

வண்டி நிற்றற்குரிய இடத்தை யாங்கள் அடைந்த ஐந்து நிமிடங்களுக்குள் வண்டியும் வந்தது. பஸ்ஸின் நிர்வாகி சுந்தரனரை வண்டியில் ஏறுமாறு மிகப் பணிவாகக் கூறினன். வண்டிக்குள் அமர்ந்ததும் திரு. வி. க. தம்மைச் செட்டியாவரத்தில் இறக்கிவிடுமாறு நிர்வாகிக்குக் கூறினர். அவன் அவரை அறிந்தவன் என்பதை அவன் நிலையால் யான் உணர்ந்தேன். ஆனல், திரு. வி. க. அவனை அறியார். தென்னிந்தியாவில் அவரை அறியாதார் யார்? உழைக்கவே உடலெடுத்துத் தம் வாழ்நாள் முழுவதும் உழைத்துவரும் கலியாண

சுந்தரனாரை அறியாதார், எவரையும் அறியாதவரே யாவர்.

ஊர்களைப் பின்னிட்டுக்கொண்டே 'பஸ்' சென்றது. ஒவ்வோர் ஊரையும் கடக்கும்பொழுது திரு. வி. க. அந்தந்த ஊரின் பெயரையும், ஆண்டாண்டுத் தாம் தேர்தல் காலங்களில் வந்தபொழுது அவ்வவ்வூரார் நடந்துகொண்ட முறையினையும் கூறிக்கொண்டே வந்தார். செட்டியாவரத்தின் எல்லையை வண்டி அடைந்ததும், நிர்வாகி குறிப்பிட்ட விதம் அவர்க்கு அவ்வூரினை அறிவித்தான். நாங்கள் வண்டியை விட்டிறங்கி, ஏரிகரையின் வழியாய்த் துள்ளத்தை அடையப் புறப்பட்டோம்.

ஒருசேர இருவரும் நடக்க ஏரிகரை இடந்தரவில்லை. அதனால், யான் முன்னும் அவர் பின்னுமாய் நடந்தோம். தாம் இளைஞராய் இருந்தபொழுது ஆண்டு நிகழ்த்திய விளையாட்டுக்களை அவர் கூறினார். இடையில் செழித்தோங்கி வளர்ந்திருந்த வேப்பமரமொன்றை நாங்கள் கண்டோம்; அதனைப் பற்றிப் பலப்பல பேசிக்கொண்டே ஊர் எல்லையை அடைந்தோம்; பின்பு வயல்களைக் கடந்து ஊரினுள் நுழைந்தோம்.

வழியில் நான் ஒரு பாழ்ங்கிணற்றைக் கண்டேன். அக்கிணறு பாழ்பட்டுப் பூமிக்குமேல் சுவரின்றி இருந்தது, கன்று காலிகள் அதில் விழுந்துவிடுதல் கூடுமென்று எண்ணி, அதன் ஆழத்தைப் பார்க்க யான் அதன் பக்கல் சென்றேன். அவரும் என்னருகில் வந்தார். தம்மைப் போலக்

கற்றூர் இல்லை என்றும், தம் நாட்டைப் போல வேறு நாடு இருக்க இயலாதென்றும் கருதிக் களிப் புடன் துள்ளித் திரியும் கண் மூடிகள் போலப் பச்சைத் தவளைகள் பல அதில் அங்குமிங்கும் பாய்ந்துகொண்டிருக்கக் கண்டேன். அதனருகில் எலும்பும் தோலுமாய்ச் சில கன்றுகள் ஒரு மரத்தில் கட்டப் பெற்றிருந்தன. யாங்கள் இரண்டு ஓலைக் குடிசைகளைக் கடந்து ஒரு கல் வீட்டை அடைந் தோம்.

அவ்வீட்டின் திண்ணைமீது நோயுற்ற ஒருவர் படுத்திருந்தார். அவருடன் வேறொருவர் பேசிக் கொண்டிருந்தார். "அப்பாதுரையா?" என்று கேட்டுக்கொண்டே திரு. வி. க. தெருப்படிமீது கால் வைத்தார். படுத்திருந்தவர் துள்ளியெழுந்து, "வாருங்கள்! வாருங்கள்! நெடுநாளாக நான் உங்களை நினைத்துக்கொண்டிருக்கிறேன். பத்து நாட்களுக்கு முன் சென்னைக்கு வரலாமென்றும் யான் எண்ணினேன். அடிக்கடி நோய்க்கு என் உடல் இரையாகின்றது. நீங்கள் இவ்வளவு தூரம் வந்ததன் காரணம் யாதோ? வீட்டில் யாவரும் நலமோ?" என உசாவினூர்.

கலியாணசுந்தரனூர் அவரை நோக்கி, "அப்பா, நீ எத்தனை நாட்களாய் உடல் நலமின்றி இருக் கின்றூய்? என்ன நோயால் வருந்துகின்றூய்?" என்று கேட்டார். அதற்கு அவர், "யான் காரிக் கத்தால் ஆறு மாதமாய்த் துன்பப்படுகின்றேன்" என்றூர். பின்பு முதலியார் வருந்திய மனத்தின

ராய், "உன் மனைவி மக்கள் சுகமா? நிலம் எப்படி விளைகிறது?" என்பன போன்ற சில கேள்விகளைக் கேட்டார்; பின்னர்த் தாம் அறிந்த சிலரைப் பற்றிக் கேட்டார். அவர் அவர்களைப் பற்றி விரிவாகக் கூறினர்.

எதிர்வாடையில் ஒரு வீட்டிலிருந்து இளைஞன் ஒருவன் வெளி வந்தான். அவனைப் பார்த்ததும் திரு. வி. க. "அப்பாதுரை, சாஸ்திரி குடும்பம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டார். அக் குடும்பம் இன்றுள்ள நிலையினைப்பற்றி அவர் கூறினர். அவர் கூறிய முறையால் அக்குடும்பம் பிராமண குடும்பமாய் இருத்தற்கு வழியில்லை என்று யான் கருதினேன். எனினும், உண்மையை அறியவேண்டும் என்ற எண்ணத்தால் யான் சுந்தரனரை நோக்கி, "பிராமணர்களும் இங்குக் குடி இருக்கின்றனர்களோ?" என்று கேட்டேன்.

அதற்கவர், "யான் ஆறு வயது சிறுவனய் இருந்த பொழுது இங்கு அப்பாதுரையுடனும், சாவித்திரி என்ற பெயர் கொண்ட சிறுமியுடனும் விளையாடல் வழக்கம். அப்பெண்ணைச் சாவித்திரி என்று வழங்குவதற்குப் பதிலாக இங்குள்ளோர் சாஸ்திரி எனப் பிழையாக வழங்கி வந்தனர். அப் பெயரே இன்றும் வழங்கி வருகின்றது" என்றனர். 'சாவித்திரி' என்பது 'சாஸ்திரி' என மருவினமை குறித்து வியந்துகொண்டிருந்த எனக்குப் 'பிரத்தியும்நன்' என்பது 'பச்சை' என வழக்குப் பெற்றமை

ஞாபகத்திற்கு வந்தது. பிறகு நான் அவர்கள் பேச்சில் கருத்தைச் செலுத்தினேன்.

சில நிமிடங்களுக்குள் சுந்தரனுர், "எப்படியப்பா இருக்கிறது இவ்வூர்?" என்று என்னைக் கேட்டார். நான்கு ஓலைக் குடிசைகளையும், மூன்று கல் வீடுகளையும் அங்கமாகப் பெற்று 'ஊர்' என வழங்கப் பெற்றதொன்றைப்பற்றி யான் எதுவும் சொல்ல இயலாதவனுய்ப் புன்முறுவல் செய்தேன். நாங்கள் மூவரும் முதலியார் பிறந்த மனையை அடைந்தோம். அது நாங்கள் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த மனைக்கு மூன்ருவது மனை. அம் மனையின் வாயிலில் கண்ணன் கோவில் ஒன்று பாழடைந்திருக்கிறது. அம்மனையில் முன் கட்டப் பெற்றிருந்த கட்டடத்தின் அடையாளங்கூட இன்று இல்லை. நான் சிறிது மேடாயிருந்த இடத்தில் உட்கார்ந்தேன். முட்கள் என்னை வருத்தத் தொடங்கின. திரு. வி. க. தம்மேல் அணிந்திருந்த துண்டை அடியில் போட்டுக்கொண்டு உட்காருமாறு என்னைப் பணித்தார். அங்ஙனம் செய்ய என் மனம் இசையவில்லை,

பிறகு சுந்தரனுர் தாம் பிறந்தபொழுது சோதிடர் சிலர் வந்து தாம் பிறந்த வேளையின் குறிப்பால் 'பிறந்த இடம் பாழாகும்' என்று கூறிச் சென்ருர் என்று தம் தந்தையார் கூறியுள்ளார் என்றும், அவ்விதமே அவ்விடம் பாழாயிற்றென்றுங்கூறினுர். சில நிமிடங்களுக்குப் பிறகு நாங்கள் திரு. அப்பாதுரைப் பிள்ளை இல்லத்திற்குச் சென்ருேம். சுந்தர

ஞரும் அவரும் சோதிடக் கலையைப்பற்றிப் பேசத் தொடங்கினர். முதலியாருக்கு அக்கலையில் ஆர்வம் உண்டு. ஆனால், அதில் பெரும்பயிற்சி இல்லை. என் முகக் குறிப்பால் முதலியார் வீடு செல்லும் எண்ணத்தை மேற்கொண்டார். திரு. அப்பாதுரைப் பிள்ளை எம்மைப் பானம் முதலியன அளித்து உபசரித்தார். இவ்வண்ணம் மூன்று நாழிகை அங்குக் கழிந்தன. பின்னர் நாங்கள் அவர்பால் விடை பெற்று, வந்த வழியை நோக்கினோம்.

வானிடை மேகங்கள் இடையிட்டுத் தவழ்ந்து அழகிய காட்சியை வழங்கின. கதிரவன் ஒளிக்கிரணங்கள் யாண்டும் மஞ்சள் நிறத்தைப் பரப்பின. பறவைகள் நாற்றிசையும் பறந்தோடின. காகங்கள் கரைந்தன. கொடிகள் நுடங்கின. மரக்கிளைகள் அசைந்தன. பனைமரங்களிலிருந்து ஒருவித இன்னோசை எழுந்தது. அவ்வோசையினை யான் முன்னர்க் கேட்டறியேன். எம்மீது சில தூறலும் விழுந்தன. இந்நிலையில் யான் வேறு மனிதன் ஆயினேன். இன்ன வகையதென்று பிரித்துணரவொண்ணு இன்பம் என் மனத்தே துள்ளி எழுந்தது. அதன் வயத்தனாய் யான் முதலியாரைப் பின் தொடர்ந்தேன்.

வானில் உடுக்கள் காட்சியளித்தல் போல வழியில் செறிந்த புதர் ஒன்றில் மலர்ந்திருந்த வெள்ளைப் பூக்கள் காட்சி வழங்கின. நான் அவை மல்லிகை மலர்களாயிருக்கலாம் என்று எண்ணி, அருகிற் சென்று சிலவற்றைப் பறித்தேன். அவை மல்லி

கையும் அல்ல ; முல்லையும் அல்ல; மணமற்ற காட்டுப் பூக்களே. கொய்துகொண்டு வருமளவும் என்னை நோக்கிய வண்ணமாய் நின்றுகொண்டிருந்த அறிஞர் முதலியாருக்கு அப்பூக்களைப் பற்றி யான் அறிவித்தேன். அவர் என்னை நோக்கி, "அப்பா, அச்செடிகள் எதன்பொருட்டு இவ்வுலகில் வந்துள்ளன என்பதை அவற்றைக் கேட்டு அறிந்து கொள்ளும் ஆற்றல் நமக்கில்லையே!" என்று ஏங்கிக் கூறினர்.

பின்னர் நாங்கள் ஏரிகரை வழியாக நடந்து முன் குறிப்பிடப் பெற்ற வேப்பமரத்தை அடைந்தோம். நான் அங்குச் சிறிது பொழுது உட்கார விரும்பினேன். ஆனல், முதலியார் அப்பொழுதிருந்த மேகத்தின் நிலையால் பெருமழை விரைவில் வரும் என எனக்கு உணர்த்தினர். எனினும், மரத்தடியில் அமர என் மனம் பெரிதும் அவாவிற்று. அதனல், அவரும் அமர்ந்தார். சில நிமிடங்களுக்குள் மழை பொழியத் தொடங்கிற்று. காற்று வேகமாய் வீசிற்று. உடனே இயற்கை அன்னையினை நாடோறும் வழிபடும் சுந்தரனர் இயற்கையின் வடிவாய் நின்ற மரத்தின் அடிப்பாகத்தை அன்னையின் இருதாள்களைத் தழுவிக்கொள்ளுதல் போலத் தழுவிக்கொண்டார். செயற்கையினை வழிபட்டுச் சிறையுறும் நான் என் குடையினை நம்பிச் சிறிது பொழுது நின்றேன். காற்றின் வேகத்திற்கு ஆற்ருது குடை நிலை கலங்கிற்று. ஆதலின், நானும் அவர் பக்கத்தில் போய்ச் சேர்ந்தேன். இயற்கை

அன்னையோ, அவரைக் காத்த அளவு என்னைக் காத்தாளில்லை.

ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு மழை நின்றது. பின் அங்கிருந்து புறப்பட்டுப் பஸ் போகும் வீதியை யாங்கள் அடைந்தோம். அங்கும் மழை மற்றொரு முறை எங்களைத் தாக்கிற்று. உடனே. திரு. வி. க. அங்கிருந்த வைக்கோல் வண்டியின் கீழ் அமர்ந்துகொள்ளுதல் நலம் எனக் கூறினர். யாங்கள் வண்டியின் கீழ் அமர்ந்தோம். ஆனல், இயற்கைக்குச் செயற்கை வண்டி இடம் கொடுத்து விட்டது. என் செய்வது என்று தோன்றாத நிலையில் இருந்த எங்களை, பஸ் ஒன்று வந்து காத்தது: இருவரும் பஸ்ஸில் ஏறிக்கொண்டு சென்னை வந்து சேர்ந்தோம்.



## உயிரியங்கு உரைநடை

### * பெருங்கிழவர் பிரிந்தார்

நம் பெருங்கிழவர் ஸர் பி. தியாகராஜ செட்டியார் சென்ற செவ்வாய்க்கிழமை இரவு நம்மை விட்டுப் பிரிந்தார்; இவ்வுலக வாழ்வு நீத்தார்; விண்ணுல கெய்தினார். அன்னார் அரசியல் நோக்கத்துக்கு மாறு பட்டு நிற்கும் மனமுடையோமாயினும், அவரது பிரிவு, எமது உள்ளத்தை உருக்குகிறது. எழுதலும் முடிய வில்லை. தியாகராஜர் பிரிவை உன்னுங்கால், அப் பிரிவு - ஆறும், மலையும், கூவலும், குளமும், கலையும், தொழிலும், மக்களும், ஒழுக்கமும் பலபடச் செறிந்த ஒரு பெருந்திருநகரம் திடீரென மறைந்தது போல் எமக்குத் தோன்றுகிறது. 'அந்தோ! தியாகராஜ மலை யுஞ் சாய்ந்ததோ!' என்று அழுகிறோம். ராஜ கெம் பீரத் தோற்றமும், திருநீற்றொளியும், சிங்கநோக்கும், மலர்ந்த முகமும், பீடு நடையும், அஞ்சா நெஞ்சும், ஆவின் இயல்பும் உடைய ஒரு பெரு வடிவை இனி என்றே காண்போம்! எமதாருயிர்த் தியாகராஜரை இனி என்றே காண்போம்!

தியாகராஜர் பரு உடல் மறைந்தாலும் அவர் நுண்ணுடல் நாட்டிடை உலவுகிறது. அப்பெரியார் வாழ்வு பின் வருவோர்க்குப் பேரிலக்கியம் போன்றது. தியாகராஜர் 1852-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27-ஆந்

---

*தமிழ்ச் சோலை (முதற்பகுதி) - திரு. வி. க.

தேதி இம்மாநிலத்தில் உதித்தார். அவர் 1925-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 28-ஆந் தேதி மறைந்தார். எழுபத்து மூன்றுண்டு இவ்வுலகிடை வாழ்ந்த ஒரு பெரியார் வாழ்வு போற்றுந் தகையதன்றே? வாழ் வெனில் எத்தகை வாழ்வு? அடிமை வாழ்வா? உரிமை வாழ்வு - ஒழுக்க வாழ்வு! அத்தகை வாழ்வு ஒரு பெரும் இலக்கியமாகாதோ?

தியாகராஜ செட்டியார் தேவாங்கர் குலத்துதித்த வருள் முதன்முதலாக பீ.ஏ. பரீட்சையில் தேறினவர். அந்நாளில் அப்பரீட்சை அடிமைத் தொழிலுக்குப் பெரிதும் பயன்பட்டு வந்தது. திருமிகு செட்டியார் தமது கல்வி அறிவை அடிமைத் தொழிலுக்கு அந் நாளில் பயன்படுத்திஞரில்லே. அவர் வாழ்வு, உரிமை யில் தோன்றி, உரிமையில் அலர்ந்து, உரிமையில் காய்த்து, உரிமையிலேயே கனிந்து சென்றது.

வாழ்விற் சிறந்த செட்டியார், நாற்பதாண்டு நகர பரிபாலன சங்கத்தில் இடைவிடாது அங்கம்பெற்று, அக்காலத்தின் இறுதியில் மூவாண்டு அச்சங்கத் தலே வராக வீற்றிருந்து, சென்னேக்குச் செய்த சேவையைச் சென்னே மாதே அறிவாள். தற்போதைய சென்னே நகரம் செட்டியாரது உழைப்பின் பரிணுமம் என்று கூறுவது மிகையாகாது. சென்னேயிலோடுங் கூவ நதி யைத் தூய்மைப்படுத்த வேண்டுமென்பது அவர்தம் பெருந்தவம். அது பற்றி அவர் பெருமுயற்சி செய்து வந்தார். உயிர் துறப்பதற்குச் சின்னுள் முன் னரும் சென்னேக் கவர்னருடன் கூவநதியைப் பற்றி அவர் பேசினுராம். கூவ நதியைச் சீர்மைப்படுத்த வேண்டுமென்று செட்டியார் உள்ளத்திலெழுந்து நில

விக்கொண்டிருந்த சீரிய எண்ணம், விரைவில் நிறை வேறுங் காலம் வருமாறு ஆண்டவனை வேண்டுகிறோம்.

காலஞ்சென்ற தியாகராஜ செட்டியார், இந்தியக் கைத்தொழில் வளர்ச்சியிலும், இந்திய வைத்திய முயற்சியிலும் பெருங்கவலை செலுத்தி வந்தார். சுருங்கக் கூறின், செட்டியார்க்குச் சுதேசியத்தில் இடையறுப் பேரன்பு உண்டு என்று கூறலாம். செட்டியார் எந்நாளும் ஆங்கில உடைக் கோலத்தை விரும்பியதில்லை. இந்திய வெள்ளிய உடையே போர்வையாக அவரை அழகு செய்துகொண்டிருக்கும். அவர் இளவரசர், ராஜப் பிரதிநிதி முதலியோரைக் காணப் போம் போதும் தாம் என்றும் இயல்பாக அணிந்துலவும் வெள்ளிய உடையணிந்தே போவார். திருவளர் செட்டியார் நாட்டு மருந்தையே பெரிதும் உண்பார். நாட்டு மருந்தில் அவர்க்குள்ள பற்றுக்கு ஓர் அளவில்லை.

தியாகராஜப் பெரியார் கடவுள் வழிபாட்டினும், வைதிக ஒழுக்கத்தினும் அன்பு வாய்ந்தவர். அவர் பிராமணரல்லாதார் இயக்கத்தைக் கிளப்பியபோதும், வைதிக பிராமணர்பால் தமக்குள்ள நேயத்தைப் புலப்படுத்தியது பலர் அறிந்ததொன்றே. தியாகராஜ செட்டியார் திருமுகத்தில் சமயச் சின்னம் என்றும் பொலிந்துகொண்டிருக்கும்.

தியாகராஜ செட்டியார் வாழ்வில் அறியக்கிடக்கும் நறுங்குணங்கள் பல. அவைகளுள் தலையாயது அவர்பால் சுயநலமின்மை என்பது. அவர் பரு உடல் மறையும் மட்டும் தமது நலங்கருதி எச்செயலும் நிகழ்த்தியதாகத் தெரியவில்லை. லார்ட் வெல்லிங்டன் காலத்தில் தமக்கு நல்கப்பட்ட மந்திரி பதவியை வேண்டாமென்று செட்டியார் மறுத்ததொன்றே அவரது

சுயநலமின்மையை வலியுறுத்தும். இக்குணம் அவர் பாலிருந்தமையாலன்ருே அவர் அரசியல் வாழ்வில் பிற்போக்குடையவராய் இருந்ததையுங் கவனியாது, சென்னே வாசிகள் அவரைச் சட்டசபை அங்கத்தவ ராகத் தெரிந்தெடுத்தார்கள் ? சென்றமுறை அவர்க்கு மாருக அவர் கட்சியாருள்ளிட்ட பல கட்சியார் பிர சார வேலே செய்தும், சென்னே, செட்டியாரைக் கை விடாது காத்தது. இதற்குக் காரணமாக நின்றது அவர்பால் சுயநலமின்மையே என்று சொல்லலாம்.

ஒழுக்கத்திற் சிறந்த செட்டியார், எவர்க்கும் அஞ்சாது, தமது மனச்சான்றுக்குத் தோற்றுவதை உள்ளவாறே வெளியிடுவர். பிறர் புகழ்வதை எதிர் நோக்கிச் செட்டியார் எதையும் மறைத்துப் பேசமாட் டார். அவர் பளிங்கனேய மனமுடையார். தியாகராஜ செட்டியார் நோக்கு, சிங்கம் போன்றதாயினும், அவர் இயல்பு ஆவையொத்தது. இஃது அவரோடு பழகிய நண்பர்கட்குத் தெரியும். தியாகராஜர் எக் கருமத்தையுங் காலத்தில் செய்பவர். கால தேவதை யின் சீற்றத்துக்கு அவர் என்றும் ஆளானதில்லே.

தியாகராஜ செட்டியார் தமது வாழ்வில் எத் துணேயோ அறநிலேயங்கட்கும், வாணிபச் சங்கங் கட்கும், கல்விக் கழகங்கட்கும் தலேவராகவும் அங்கத் தவராகவும் இருந்து தேச சேவை செய்திருக்கிருர். அவரது வாழ்வு பெரிதும் பரோபகார வாழ்வாகவே நடந்து வந்தது. இல்லறத்திலிருந்து இத்துணேத் தொண்டு செய்த ஒருவர் வாழ்வு பின் வருவோர்க்கு இலக்கியம் போன்றதென்பது மிகையாகாது.

தியாகராஜ செட்டியார் அரசியல் வாழ்வில் குறிக் கத்தக்கது ஒன்றுளது. அஃது, அவர் தமது முதுமைக்

காலத்தில் தோற்றுவித்த 'ஜஸ்டிஸ் கட்சி' என்னும் ஒரு கட்சியைப் பற்றியதாகும். அக்கட்சியின் ஆக்கங் குலைவுற்றிருப்பினும், அதன் பயன், நாட்டில் பல முகங்கொண்டு, நுண்மையாகப் பலதிறச் சீர்திருத்த வேலைகளைச் செய்து வருவதுண்மை. வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவப் பாடல் சுயராஜ்யப் பாடலாக மாற வேண்டும் என்பது நமது விருப்பம்.

செல்வத்திற் சிறந்த தியாகராஜ செட்டியார், பரந்து விரிந்த சோலைகள் சூழ்ந்த அரண்மனை என்று சொல்லத் தக்க தமது பெரு மாளிகையில், கிராமத்தாரைப் போலத் தோய்த்து உலர்ந்த வேட்டிகளிரண்டு - கீழொன்று மேலொன்று - அணிந்து, தம்மைக் காண வருபவரோடு பேசுங் காட்சி, எமது முன்னே தோன்றித் தோன்றி, எமது உள்ளத்தைக் குழையச் செய்கிறது. குழைந்துருகும் உள்ளத்தோடு அவரது குடும்பத்தார்க்கு எமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்; பெருங்கிழவர் ஆன்மா சாந்த நிலை எய்த எல்லாம் வல்ல இறைவனை வழுத்துகிறோம்.

(1-5-1925)

## * ஒருகுலத்துக் கொருமைந்தன்

கடந்த வாரம் தமிழ் நாட்டில் 'நவசக்தி'யின் சிலம்பு ஒலியாதொழிந்ததை அன்பர்கள் கவனித்திருக்கலாம். அக்காரணத்தை வருத்தத்துடன் குறிக்கிறேன்.

---

* தமிழ்ச் சோலை (முதற்பகுதி) - திரு. வி. க.

'நவசக்தி' காரிய நிருவாகரும், எனது அருமைத் தமயனருமாகிய திரு. வி. உலகநாத முதலியார்க்கு இன்புதல்வனுய்ப் பிறந்து, எங்கள் குலத்துக்கு ஒரு மைந்தனுய், பின்னுளில் 'நவசக்தி'யை அன்புடனேற்றுத் தொண்டாற்ற வல்லனுய், அதற்குரிய கல்வி அறிவு திறமை முதலியன வாய்க்கப்பெற்றுனுய், எனக்கினியனுய்ச் செங்குருத்தென வளர்ந்து வந்த எனது கண்மணி பாலசுப்பிரமணியன், சென்ற செவ்வாய்க்கிழமை இரவு 11-மணிக்கு இவ்வுலக வாழ்வு நீத்ததை நேயர்கட்கு ஆருத்துயருடன் தெரிவித்துக்கொள்கிறேன். இற்றைக்குப் பத்தாண்டுக்கு முன்னர், என் மனைவி மக்களை அழைத்து, என்னைத் தன்னந்தனியனுக்கிய ஆண்டவன், தமயன் வழிப்போந்து, எனக்குப் பல வழியிலும் ஆறுதலளித்து வந்த ஒரு மைந்தனையும் இப்பொழுது அழைத்துக்கொண்டான். எச்செல்வமும் பெருத வறியேனுக்குத் தமயன் வழிக்கிடைத்த சேய்ச் செல்வமும் போயிற்று. எளியேன் வாழ்வை ஆண்டவன் திருவுள்ளப்படி நடாத்துவாளுக.

எங்கள் குலத்துக்கு ஒரு மைந்தனுய், ஒரு மணியாய், அமிழ்தாய் விளங்கிய பாலசுப்பிரமணியன், 1905-ஆம் ஆண்டு இம்மண்ணிற் பிறந்து, 1928-ஆம் ஆண்டு மறைந்தான். அவன் சென்னை வெஸ்லி கல்லூரியில் இண்டர் மீடியட் வகுப்பில் வாசித்து வந்த மாணுக்கன். இடையிடையே அவன் நோய்வாய்ப் படாதிருப்பின், அவன் எப்பொழுதோ கல்லூரிப் படிப்பை முடித்திருப்பன். அவனை இடையிடையே நோய் தாக்கித் தாக்கி அவனது பள்ளி வாழ்விற்குக் கேடு சூழ்ந்து வந்தது. நோய் காரணமாகச் சில வேளைகளில் நாள் கணக்கிலும், சில வேளைகளில்

திங்கள் கணக்கிலும், சில வேளைகளில் ஆண்டுக்கணக்கிலும் அவன் பள்ளியினின்றும் நிற்க நேர்ந்ததுண்டு. நோய் சிறிது ஒதுங்கினதும், மீண்டும் பள்ளி நோக்குவது அவனது வழக்கம். பள்ளியை விடுத்து முற்றும் விலகுமாறு தாய் தடுப்பினும், தந்தை தடுப்பினும், மற்றெவர் தடுப்பினும் மைந்தன் கேட்பதில்லை. கல்வி மீது அவன் வைத்திருந்த பித்துக்கோர் அளவில்லை. படுக்கையிலும் ஏதாவதொன்றை அவன் படித்துக் கொண்டிருப்பன். நோயுடைய மைந்தனது படிப்பு வேட்கை, உடலுக்கு ஊறு செய்யுமென்னும் இரக்கத்தால் என் தமயனார் அடிக்கடி அவனைக் கடிவது முண்டு.

பாலசுப்பிரமணியன் பள்ளிப் படிப்புடன் மட்டும் நிற்பதில்லை. அவன் பந்தாட்டத்தில் பேர் பெற்றவன். அவ்வாட்டத்துக்கென ஒரு சிறு கழகத்தையும் ஒழுங்குபெற அவன் நடாத்தி வந்தான். அவன் ஓய்ந்த வேளையில் 'நவசக்தி' தொழிற்சாலையுள் நுழைந்து, தொழிலாளருடன் கலந்து, ஆங்குள்ள தொழின்முறைகளைப் பயில்வன். அச்சுக்கூட வேலைகளிற் பலவற்றை அவன் பயின்றிருந்தான். பசுஞ்செடி கொடிகளை வைத்து வளர்ப்பதில் அவனுக்குப் பெரு விருப்பம். செடி கொடிகளுக்கு அவன் செய்த தொண்டு அதிகம். விருந்தினர்க்கு முகங்கோணது அவன் தொண்டு செய்வன். அவனது கல்வி அறிவுக்கேற்ற அமைதி, பொறுமை, அடக்கம், இரக்கம் முதலியனவும் அவன்மாட்டுப் பொருந்தியிருந்தன. எல்லாம் பொருந்திய அருமை மைந்தனை ஆண்டவன் விரைவில் அழைத்துக்கொண்டான். அவன் செயல்களும், இயல்புகளும் உருக்கொண்டு உலவுவதுபோல

'நவசக்தி' நிலையத்தில் உலவி உலவி உள்ளத்தை உருக்கி வருகின்றன, பெறற்கரிய மாணிக்கத்தைப் பெற்றோம் ; இழந்தோம்.

இளமையில் தொடர்ந்த இருமல், நாளடைவில் என்புருக்கியாய் வளர்ந்து வளர்ந்து, மைந்தனைப் படுக்கையில் கிடத்தியது. பாலசுப்பிரமணியனை வெளிப்படையாக நோய் தாக்கிய கால எல்லை ஏறக்குறைய ஆறுண்டு. ஏறக்குறைய முதல் நான்காண்டு, பையனைப் படுக்கையில் கிடத்தாதொழிந்தன. பின் இரண்டாண்டு, அவனைப் படுக்கையில் அமர்த்தி, அவனது கல்விப் பித்தைக் கடவுள் பித்தாக மாற்றின.

பாலசுப்பிரமணியனுக்கு உணவூட்டிய தந்தையார் - கல்வி அளித்த தந்தையார் - என் தமயனார் - மைந்தனுக்கு உயிர் உணவுங் கொடுத்தற்குத் தாம் வழக்கமாக நிகழ்த்தி வந்த வழிபடு கடவுட்பூசையுடன், தமக்கொரு பெரியார் அறிவுறுத்திய மண்டல பூசையுந் தொடங்கினர் போலும். அப்பூசையின் ஒவ்வொரு போதும், மைந்தன் தன்னை மறந்து அதில் மூழ்குவதை யான் பன்முறை கண்டதுண்டு. மண்டல பூசையின் முடிந்த நாளாகிய நாற்பதாம் நாள் காலையில் நிகழ்ந்த சிறப்புக்களையும், மாலையில் நடந்த சிறப்புக்களையும், அவ்வேளைகளில் ஏழைமக்கள் உணவு கொண்டதையும், அடியார்கள் பாடிய திருப்பாக்களையுங் கண்டு கேட்டு இன்புற்று, அப்பூசை முடித்து எல்லாரும் உண்டு உறக்கத்துக்குப் போம் போது, ஆருயிர் மைந்தன் நொடிப் பொழுதில் இன்னுயிர் துறந்தான். அவ்வுயிர், அமைதியில் - ஆண்டவன் ஒளியில் - ஆறுதல் பெறுக.

இத்துணை நாள் மைந்தன்பொருட்டுத் தாயாரும், தந்தையாரும், மற்ற உறவினரும், நண்பர்களும் இடையீடின்றிச் செய்த முயற்சியை - பட்டபாட்டை - உழைத்த உழைப்பை - எங்குங் கண்கொண்டு காணும் ஆண்டவன் அறிவன். மனித முயற்சிகள் எவ்வளவுண்டோ அவ்வளவும் ஒல்லும்வகை செய்யப்பட்டன என்று சுருங்கச் சொல்லுகிறேன்.

நாங்கள் மனிதர்கள்; கடனுற்ற வல்லேம். வேறென் செய்ய வல்லேம்? ஆண்டவன் திருவுள்ளம் வேறு விதமாயிருப்பின், மக்கள் முயற்சி என்னும்? அவனன்றி ஓரணுவும் அசையுமோ?

'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்னும் வேதாந்த உண்மை படிந்த உள்ளமும் மைந்தன் காதலை மறக்குங்கொல்! மைந்தன் காதலைத் தணிக்கும் மருந்தும் உண்டோ?

பாலசுப்பிரமணியன் பிரிவால் நெஞ்சடைந்து கிடக்கும் அடியேன், அருமை மைந்தனை-ஒருமைந்தனை-பண்பு வாய்ந்த மைந்தனை - இழந்த தந்தையார் - என் அருமைத் தமயனுருக்கும், நீர் நிழல்போல் மைந்தனை விடாது, சில சமயம், ஊண் உறக்கமின்றியும் இரவு பகல் பாதுகாத்த தாயார் - என் அண்ணியார்க்கும், தங்களுக்குரிய செல்வமெல்லாம் அண்ணனே என்று கருதியிருந்த அவனது இளஞ்சகோதரிகளாகிய இரண்டு அருமைப் பெண் குழவிகட்கும், 'பாலனே எங்கள் வாழ்வு' என்று எண்ணிய மற்றவர்கட்கும் எம்மொழியால் ஆறுதல் கூறவல்லேன்? நிற்பது துன்பமலையன்றோ? எல்லாம் ஆண்டவன் செயல்.

ஆண்டவன் எந்நேரமும் என்னைச் சோதித்த வண்ணமாயிருக்கிறான்; இப்பொழுது ஒரு பெருஞ்

சோதனை செய்தனன். எல்லாம் அவன் செயலென்று வாழும் வாழ்வையே விழைந்து நிற்கிறேன்.

ஆண்டவனே! உன்னை மறவேன்; உன்னை விடேன்; உன் கழலேத்துஞ் செல்வமே எனக்குரிய பெருஞ்செல்வம்; உன்னருட்செல்வத்தை நாடி நிற்கிறேன். இந்நாட்டத்துடன் இயன்ற தொண்டாற்றி வருகிறேன். நாயேன் மனிதன்; பாவி; குற்றமுடையேன்; குறையுடையேன். என் பிழை பொறுத்தாட்கொள்ளல் வேண்டும்.

'அழுக்கு மெய்கொடுன் திருவடி அடைந்தேன்
அதுவு நான்படப் பாலதொன் றுனல்
பிழுக்கை வாரியும் பால்கொள்வ ரடிகேள்
பிழைப்ப னுகிலும் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினும் திருப்பெய ரல்லால்
மற்று நானறி யேன்மறு மாற்றம்
ஒழுக்க என்கணுக் கொருமருந் துரையாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே' —சுந்தரர்

(17-10-1928)

## *ஞானியார் மடத்தின் பொன் விழா

(18-11-1939)

நம் நாட்டில் அறப்பள்ளிகள் பல உண்டு. அவைகளுள் ஒன்று திருக்கோவலூரிலிருப்பது. அஃது ஆதி ஞானியாரால் காணப்பெற்றது. அதன் தொடர்பு கொண்ட பள்ளி திருப்பாதிரிப்புலியூரில் திகழ்வது.

---

*திரு. வி. க.

இப்பொழுது கோவற்பள்ளித் தலைவராக வீற்றிருப்பவர் ஞானியார் சுவாமிகளென்னும் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள். சுவாமிகள் அப்பள்ளித் தலைமை ஏற்று அரை நூற்றாண்டாகிறது. ஆகவே, பொன் விழா எங்கணும் பொலிவதாக.

ஞானியார்சுவாமிகளை யான் கால் நூற்றாண்டாக அறிவேன். சுவாமிகள் அடியின்கீழ் நின்று பேசும் பேறும், அவருடன் நெருங்கி உரையாடும் பேறும் எனக்குப் பலமுறை வாய்த்ததுண்டு. அடிகளின் ஆசி பெற்றவருள் சிறியேனும் ஒருவன்.

முருகன் சேவடி வருடி உருகும் ஈரநெஞ்சும், அவன் புகழ் பேசி இனிக்கும் நன்னாவும், தண்மை பொழியும் செவ்விய நோக்கும், வெண்ணீறு துதையும் நெற்றியும், மாணிக்கக் குழை பிறங்குஞ் செவியும், பொன்னொளிரும் மணிமார்பும், கருமைக்கதிர் விரிக்குந் திருமேனியும், 'சண்முகா - சண்முகா ' என்று நீறளிக்கும் நீண்ட கையுங் கொண்ட அடிகளின் திருவோலக்கப் பொலிவு, என்னுள்ளத்தில் ஓவியமெனப் படிந்துநிற்கிறது. அஃது எவர் உள்ளத்தையுங்கவரும் ; எவர்க்கும் எளிதில் இன்பூட்டும்.

ஞானியார் சுவாமிகளின் புலமை வியக்கத்தக்கது. அவர் தமிழில் பெரும்புலவர் ; வடமொழியில் வல்லவர் ; ஆங்கிலமுந் தெரிந்தவர் ; காலக் கலையில் பண்பட்டவர்.

பழம் பெரும்புலவர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் தத்தம் நுண்மதியை விளங்கச் செய்து சென்றனர். அப்புலவர் பெருமக்களின் கலைகளெல்லாம் ஞானியார் சுவாமிகளிடத்தில் மருவி நிற்கின்றன. அம்மருவல் இக்காலத் தமிழகத்தின் திருவென்றே கூறுதல் வேண்டும்.

ஞானியார் சுவாமிகள் மாணுக்கருக்குப் பாடஞ் சொல்லும் போதும் சொற்பொழிவு நிகழ்த்தும் போதும் தொல்காப்பியனுராகவும், நக்கீரராகவும், திருவள்ளுவராகவும், இளங்கோ அடிகளாகவும், கச்சியப்பராகவும். கம்பராகவும், சேக்கிழாராகவும், வியாசராகவும், நீலகண்டராகவும், சிவஞானமுனிவராகவும், பிறராகவும் முறை முறையே விளங்கி விளங்கி இலக்கிய இலக்கணச் சாத்திர நுட்பங்களை வெளியிடுவதைக் கேட்டுக் கேட்டுப் புலவரானவர் பலர். பழம் புலவர் பலரும் ஞானியார் ஒருவரிடம் விளங்குதல் வியப்பன்றோ ?

கோவலடிகளின் பேச்சுத் திறத்தை என்னென்று சொல்வேன் ! அதைச் சிறப்பிக்க எனக்குச் சொற்கள் கிடைக்கவில்லை. என் செய்வேன் !

பத்தொன்பதாம் நூற்றுண்டில் நாவன்மையிற் சிறந்தவர் இருவர் என்று சொல்லப்பட்டனர். அவர் கிளாட்ஸ்டனும் சுரேந்திர நாதருமாவர். அவ்விருவர் தம் நாவன்மை, ஞானியார் நாவன்மையைக் கண்டதில்லை ; கேட்டதில்லை. கண்டிருப்பின் - கேட்டிருப்பின் - வணக்கஞ் செய்திருக்கும்.

சுவாமிகள் அறப்பள்ளித் தலைமை ஏலாது, உலகியலில் நுழைந்து, ஆங்கில நாவலராய், உலகை வலம் வந்திருப்பரேல், அவர் கிளாட்ஸ்டனும் சுரேந்திர நாதரும் சேர்ந்த ஒருவர் என்று போற்றப்பட்டிருப்பர். கோவற்பள்ளி, சுவாமிகளைச் சிறைப்படுத்திவிட்டது.

சுவாமிகளின் பேச்சுத்திறனை எதற்கு ஒப்பிடுவது? கடல் மடைத்திறப்புக்கா - வெண்கலக் கோட்டையில் அரசுவா புகுதலுக்கா - பெரும்புயலுக்கா - ஓயா

மழைக்கா? எதற்கு - எதற்கு - ஒப்பிடுவது? பலர் பலவாறு கூறுப.

திருப்பாதிரிப்புலியூரில் வீற்றிருந்து அடியவர்க்கருள் புரியும் கோவலடிகள் கருமைபூத்த ஒரு பொறுமை மலை. அம்மலையினுச்சியில் - முளையில் - கலைமேகங்கள் பொழிந்த அறிவு மழைநீர், தேங்கித் தேங்கிப் புரண்டு திரண்டு பன் முகங்கொண்டெழுந்து முட்டிமுடுகி, வாயின் வழியே முழங்கி விரைந்து இடையீடில்லாச் சொற்றொடர் அருவியாக இழிந்து பலதிறச் சுவை நுட்பப் பொருட்கள் மிதந்து சுழல, அன்பு வெள்ளப் பெருக்காய்ப் பரவிப் பரந்து, அருள் அலை கொழித்துக் கொழித்து ஓடும். நீர் பருகப் போந்த புலி, கரடி, யானை, மான், பசு முதலியன அருவி முழக்கிலெழும் இன்னொலி கேட்டு அதில் ஈடுபட்டுத் தத்தம் பகைமை மறந்து மயங்கி நிற்கும். கரை நீராடுவோர் வெள்ளத்திலுறும் மின் விசையால் பிணி நீங்கப் பெறுவர். ஞானியார் சுவாமி கள் பேச்சால் விளைந்த நலன் அளப்பரிது.

திருப்பாதிரிப்புலியூரில் பலதிற விழாக்கள் நடை பெறும். அவ்விழாக்களில் கலந்துகொள்ளப் போதரும் அடியவர் 'ஞானியார்' மடத்தில் அமுதுண்பர். அவ்வேளைகளில் அடிகள் சோறிடுந் தொண்டர்களுடன் தாமும் ஒருவராகக் கலந்து அடியவர்க்கு இன் சொலாம் அமுதூட்டுவது நாடறிந்ததொன்று.

சுவாமிகள், தென்னாட்டிலுள்ள பல திருப்பதிகள் சென்று, இறைவனை வழிபட்டு, ஆங்காங்குள்ள மக்கட்கு நல்லுரை பகர்ந்து, தமிழுக்கும் செந்நெறிக்கும் ஆக்கந் தேடியதை அறியாதாரில்லை.

அடிகளிடத்துப் பல நல்லியல்புகள் செறிந்து கிடக்கின்றன. அவைகளுள் குறிக்கத்தக்கன: கருத்து வேற்றுமைக்கு மதிப்பளித்தல், அவ்வேற்றுமை காரண

மாகப் பிணங்காமை, சமயப் பூசல்களில் மனஞ் செலுத்தாமை, பொதுநோக்கு, எவர்க்கும் எளியராந்தன்மை, பொறுமை, இன்னபிற. இவ்வியல்புகளே பெரிதும் அடிகளிடம் என்னை அணுக்கனுக்கின என்று கூறல் மிகையாகாது.

சிவசண்முகமெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள், ஆண்டவன் அருள்வழி நின்று, ஐம்பதாண்டாகத் தம் எண்ணத்தாலும், சொல்லாலும், செயலாலும் தமிழ் நாட்டைப் பலவழியிலும் ஓம்பிய ஒருவர் - ஓர் அறவோர் - ஒரு பெருந்தொண்டர். அவர் தம் அறத்தொண்டு மேலும் மேலும் ஓங்கி வளர்தல் வேண்டும். அறுமுகப் பெருமான் அருள் சுரப்பானுக. சுவாமிகளுக்கு எனது வணக்கம்.

## *ஓவியம்

காவியம் மட்டுங் கலையன்று; ஓவியமுங் கலையே. இரண்டுங் கருத்தில் ஒன்றே; தோற்றத்தில் வேறு போல் விளங்கும். இளமையில் முதல் முதல் என் உணர்வு ஓவியத்தில் படிந்த இடம் மல்லை (மகாபலிபுரம்).

ஒருமுறை 'மேல்நாட்டுப் பாதிரிமாருடன் யான் மல்லைக்குச் சென்றேன். ஒரு ஸ்காச் அம்மையார் ஓவிய யானையின் அருகே நின்றார். அவர் நெஞ்சம் ஓவியத்தில் ஒன்றியது. அம்மையார் அப்படி இப்படி அசைந்தாரில்லை. அக்காட்சி என்னையுங் கவர்ந்தது.

* திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள் - பக். 107-111.

என் கருத்தில் ஓவிய விதை விழுந்தது. திரும்பிய போது அவ்வம்மையார் ஓவிய மாண்புகளை ஓதி வந்தனர். அன்றுமுதல் யான் ஓவியப் பித்தனானேன்.

நமது நாட்டுக் கோயில்கள் பெரும்பெரும் ஓவியக் கூடங்கள். அக்கோயில்கட்கு ஏகும்போதெல்லாம் ஓவியங்களை நோக்கி - உற்று நோக்கி நிற்பேன்; அமர்ந்து அவைகளை உன்னுவேன். ஓவியம் உள்ளத்தில் நின்று தன் கலையை விரித்து விளங்கச் செய்யும். ஓவியம் புரியும் நலம் பெரிது. யான் எந்நூல் எழுதினும், அதில் ஓவியக்கலையை எப்படியாவது நுழைப்பேன். சிறப்பாக 'முருகன் அல்லது அழகு', 'தமிழ் நாடும் நம்மாழ்வாரும்', 'உள்ளொளி' முதலிய நூல்களில் ஓவியத்திறங்களை ஒல்லும்வகை உலவ வைத்துள்ளேன். புலன்களை ஒன்றவைக்கும் பேராற்றல் ஓவியத்திலிருப்பதை யான் அநுபவத்தில் உணர்ந்தேன். வீடுதோறும் - தெருவுதோறும் - நாடுதோறும் - ஓவியக் கல்வி பெருகி நின்றால், உலகம் அமைதி இன்பத்தில் திளைத்தல் ஒருதலை.

யான் சில ஓவியப் புலவரைக் கண்டுள்ளேன். அவருள் இங்கே குறிக்கத் தக்கவர், தை. ஆ. கனகசபாபதி முதலியார். அவர்தம் ஓவிய நிலையத்துக்கு யான் முதல் முதல் சென்றபோது, ஆங்கு இரண்டு ஓவியம் பொலிதல் கண்டேன்; என் புலன்களெல்லாம் கண்ணிலேயே நிலவின. காரணம் என்ன?

வெறும்புறத்தோற்றத்தை மட்டும் உணர்த்துவது ஓவியமாகாது. ஓவியம் அகநிலையையும் உணர்த்துவதாயிருத்தல்வேண்டும். அறிஞர் கனகசபாபதியினின்றும் முகிழ்த்த இரண்டு ஓவியமும் காந்தி - சற்குணரை என் உள்ளத்தில் நிறுத்தின. காந்தி - சற்

குணரின் புறமும் அகமும், அறிவும், கலையும் ஓவியங் களாய் மலர்ந்துள்ளதை உணர்ந்தேன். அவ்வுணர்வை 'நவசக்தி' யில் (5-6-1936) எழுத்தில் இறக்க முயன்றேன். அம்முயற்சி வருமாறு:—

* * * இங்கிலேயம் போதரும் பேறு ஒருபோது எனக்குக் கிடைத்தது. அங்கே திரு. கனகசபாபதி முதலியார் வடித்துள்ள உருவச்சிலைகள் காட்சி வழங்கின. முதலில் காந்தியடிகள் திருமுகம் என் நெஞ்சைக் கவர்ந்தது. புத்திரிபாய் ஈன்ற காந்தியடிகள், இச்சாலையில் மோனத்துடன் வீற்றிருக்கிருரோ என்று கருதுமாறு அடிகளின் ஓவிய முகம் செய்துவிட்டது. ஓவியத்தின் பொலிவு வியக்கத்தக்கதாயிருக்கிறது.

பின்னே, தமிழ் அறிஞரும், சென்னை - கிறிஸ்துவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும், ஆரவாரமின்றிச் சங்க நூல்களைப் போதித்துப் போதித்து நன்மாணுக்கரைப் படைத்துப் பெருக்கி வருபவரும், ஓவியர் - கனகசபாபதி முதலியாரின் ஆசிரியரும், எனது கெழுதகை நண்பரும் ஆகிய திரு. எஸ். டி. சற்குணர், பி. ஏ. காட்சி தந்தார். அவர்தம் படிமத்தில் எனதுள்ளம் படிந்தது.

ஓவியத்தில் வல்லுநர் பலருளர். அவருள் ஒருவர் கனகசபாபதி முதலியார் என்று கூறுமளவில் நிற்க என் மனம் எழவில்லை. அவரது காவிய ஞானம் நினைவிற்கு வருகிறது. திரு. முதலியாரது ஓவியம் அவரது காவிய நெஞ்சினின்றும் எழுவது. இந்நுட்பம் அவர் அமைத்துள்ள உருவங்களை நேரே பார்த்து, அவைகளில் ஒன்றுவோர்க்கு இனிது புலனுகும். காவியமற்ற ஓவியம் வெற்றுருவமேயாகும். காவியமும் ஓவியமும் வல்ல ஒருவரிடத்திருந்து பிறக்கும் உருவத்தில், உரு

வத்தோடு உயிர்ப் பண்புகளும் விராவி அமையும். திரு. முதலியார் ஓவியத்தில் வெற்றுருவம் மட்டும் நிற்க வில்லை. அதனுடன் பண்பாகிய உயிரும் பொலிகிறது. இச்சிறப்பு, திரு. முதலியார் ஓவியத்தில் அமைந்திருத் தல் ஈண்டுக் குறிக்கத் தக்கது.

காந்தியடிகள் பன்னெடுங் காலம் பொறுமையில் உறைந்து உறைந்து நின்றமையால், அவர் தங் கருவி கரணங்களெல்லாம் சாந்த மயமாயின. அவர் சாந் தமே ஆயினர்; சாந்தம் அவராயிற்று. அச்சாந்தம் திரு. முதலியார் ஈன்ற காந்தியடிகளது ஓவியத் திரு முகத்தில் திகழ்கிறது.

திரு. சற்குணர் நெஞ்சம் தமிழில் ஊறி ஊறி, அது தமிழ் வீரஞ் செறிந்ததாயிற்று. நெஞ்சம் எவ் வண்ணம் அவ்வண்ணம் வடிவமுமாதல் இயல்பு. திரு. சற்குணருடன் நெருங்கிப் பழகினால், தமிழ் வீரம் அவராக உருக்கொண்டது என்பது நனி விளங்கும். அத்தமிழ் வீரம் திரு. கனகசபாபதி முதலியார் அமைத்த திரு. சற்குணர் படிமத்தில் நடம்புரிகிறது.

இயல்பும் வடிவும் ஒன்றி முகிழ்க்கும் முறையில் உருவச்சிலை அமைக்கும் திறமை வாய்ந்த இளைஞர் - கனகசபாபதி முதலியார்க்கு எனது வாழ்த்து உரிய தாக. * * *

* * *

மற்றுமொரு நாள் கோ. வடிவேல் செட்டியார் ஓவியத்தைக் கண்டேன். அதற்கும் 'நவசக்தி'யில் (17-7-'36) மதிப்புரை வரைந்தேன். அது வருமாறு:—

* * * * திரு. செட்டியார் ஒரு தமிழ் ஞாயிறு. இத்தமிழ் ஞாயிற்றினின்றும் இலக்கியம், இலக்கணம்,

தர்க்கம், வேதாந்தம், பொதுமை, ஒழுக்கம், ஒப்புரவு முதலிய கதிர்கள் கான்ற வண்ணமிருக்கும்.

ஒருவிதக் கலையில் பலர் புலவராகலாம். பலவிதக் கலையில் பலர் புலவராதல் அருமை. மிகச் சிலரே பல கலைப் புலவராவர். இப்பேறு, அறிஞர் வடிவேல் செட்டியார்க்கு வாய்த்தது.

செட்டியார் பலகலைப் புலவர். கலைகள் செட்டியார் உள்ளத்தில் ஒன்றி, அவை அவர்தம் உள்ளமாய், ஊனாய், உடலாய்ப் பரிணமித்திருக்கின்றன. கலைகளே செட்டியார் ; செட்டியாரே கலைகள். அன்பர் செட்டியாரை ஒரு பல்கலைக்கழகம் என்று கூறல் மிகையாகாது. கலைகளின் ஞான ஒளி செட்டியார் முகத்தில் நடம்புரிகிறது. அது கலைஞர்க்கு விருந்தாகும். * *

பண்டிதர் - கனகசபாபதி முதலியாரின் ஓவிய நிலையத்தில் ஆசிரியர் வடிவேல் செட்டியார் சிலையுருவம் ஒரு பாங்கர் ஒளி செய்கிறது. * *

செட்டியார் முகத்தில் நடம்புரியும் ஞான ஒளி, அவர்தம் ஓவிய உருவிலும் நடம்புரிகிறது. இவ்வாறு ஓவியம் அமைத்த பெருமை நண்பர் கனகசபாபதி முதலியாருடையது. வெறும்புறக்கோல அமைவு மட்டும் ஓவியமாகாது. வாழ்வின் உயிர்நாடி உருவில் முகிழ்த்து நிலவுமாறு அமையும் ஒன்றே ஓவியமாகும்.

*　　*　　*　　*

# திரு. வி. க. மணிவிழா*

நம் இந்திய நாட்டிற்குக் குருமார் வழிபாடு புதியதன்று. ஆனால், இவ்வழிபாடு மேல்நாட்டு நாகரிக வளர்ச்சியால் குறைந்துவிட்டது. குருமாரை வழிபடுவதை நம் இளைஞர்கள் தாழ்வாகக் கருதுகிறார்கள். இந்த வழிபாடு குறைந்தமையால் கலை வளர்ச்சியும் குறைந்தது. கலை வளர்ச்சியின் வீழ்ச்சி அமைதியின்மைக்கும் போருக்கும் அடிகோலிற்று. இறைவன் அருளால் சில ஆண்டுகளாக நம் பெரியோரை-குருமாரை-வீரரை நம்மவர் வழிபடச் சிறிது மனம் கொண்டிருக்கின்றனர்; சில பெரியோரை அவர்தம் அறுபதாம் ஆண்டின் நிறைவை அடிப்படையாகக்கொண்டு வழிபடுகின்றனர். நம் தமிழ்ப் பெரியார்-தமிழ்வீரர்-பெருநாவலர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரின் அறுபதாம் ஆண்டின் நிறைவு 1943-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 24-ஆம் தேதி எய்திற்று. அந்நிறைவினைக் கொண்டாடுதற்பொருட்டுச் சென்னைச் சிந்தாதிரிப் பேட்டை உயர்கலாசாலைக் கட்டடத்தில் திரு. வி. க. மணிவிழாக் கழகம் ஒன்று திவான்பகதூர் C. S. இரத்தினசபாபதி முதலியார் தலைமையில் நிறுவப் பெற்றது. இக்கழகம் ஆற்றிய தொண்டால் - சிறப்பாகக் கலைக்கடல் மீனாட்சிசுந்தரனார், இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரஞ்செட்டியார் ஆகிய இவர்களின்

---

* திரு. வே. தியாகராய முதலியார்

இடையீடில்லா உழைப்பால் - தமிழ்நாடு திரு. வி. க. மணிவிழா மயமாயிற்று. மீனுட்சிசுந்தரனரின் நுண் மதி கோலியமுறை இம்மணிவிழாவில் தமிழரும் பிறரும் கலந்துகொள்ளும் வாய்ப்பினை அளித்தது.

திரு. வி. கலியாணசுந்தரனர் மணிவிழா முதன் முதல் அவர்தம் வழிபடுகடவுளாகிய திருப்போரூர் முருகப்பெருமான் திருமுன் கொண்டாடப்பெற்றது. 23-8-'43ல் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் ஆதரவில் திருமதி. ஞானராஜம்மையார், B. Sc., தலைமையில் கூடிற்று. அவ்வமயம் வித்துவான் - முருக இலக்குவனர், திரு. K. M. பாலசுப்பிரமணியம், B. A., B. L., முதலியோர் திரு. வி. க.வின் குணநலன்களை யும், பலதுறைத் திறன்களையும் பாராட்டிப் பேசி, அவரை வாழ்த்தினர். 24-8-'43ல் திரு. A. S. ஞானசம்பந்தம், M. A., தலைமையில் அக்கூட்டம் தொடர்ந்து கூடிற்று. அதுபொழுது திரு. பொன்னு சாமிப் பிள்ளை, M. A., திரு. சிவசங்கர முதலியார் முதலியோர் நம் நாவலரின் அரும்பெரும்பணிகளைப் பாராட்டிப் பேசி, அவரை வாழ்த்தினர். பிறகு திரு. வி. க. நன்றிகூறி, அனைவரையும் வாழ்த்தினர்.

### சென்னையில் மணிவிழா

சென்னையில் திரு. வி. க. மணிவிழா 25-8-'43 காலை இராயப்பேட்டைக் 'குகானந்த நிலையத்'துப் பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் ஆரம்ப மாயிற்று. திரு. வி. க. நாடோறும் வழிபடும் முருகப் பெருமானுக்கும், திருமாலுக்கும் வழிபாடு செய்யப் பெற்றது அங்கிருந்து திரு. வி. க. சிந்தாதிரிப்பேட்டை

உயர்கலாசாலைக்கு அழைத்துக்கொண்டு போகப் பெற்றார். ஆண்டு அப்பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர் முதலியாரைப் பாராட்டிப் பேசி, மாணவர்களால் எழுதப்பெற்ற ஓவியப் படங்கள் அமைந்த ஒரு புத்தகத்தை அவர்க்கு அளித்து, மாலை சூட்டினார். திரு. வி. க. மாணவர்க்கும் ஆசிரியர்க்கும் நல்லுரை வழங்கினார்.

'குகானந்த நிலையத்'தில் அன்று காலை 11 மணி முதல் மாலை 4½ மணி வரையில் சுமார் 2000 ஏழை கட்கு மணிவிழாக் கழகத்தார் உணவளித்தனர். அந்நாள் சென்னையிலும் பிறவிடங்களிலும் பல்லாயிரக்கணக்கான ஏழைகளுக்கு உணவளிக்கப்பெற்றது.

சென்னைச் சிந்தாதிரிப்பேட்டை உயர்கலாசாலையில் திரு. வி. க. மணிவிழா ஐந்து நாட்கள் சிறப்பாக நடைபெற்றது.

முதல்நாள் :

25-8-'43 புதன் மாலை 6 மணி

குறிப்பிட்ட காலத்திற்கு முன்னமே மக்கள் ஆயிரக் கணக்கில் வந்து கூடினார்கள். எள் விழற்கு இடமில்லை. மணிவிழாத் தலைவர் M. & S. M. இரயில்வேத் தொழிலாளர்கள் வேண்டுகோட்கிணங்கி, அவர்கள் கூட்டிய கூட்டத்திற்குச் சென்று, அன்னார் அளித்த வாழ்த்துப் பத்திரத்தோடு 6 மணிக்குச் சபையை அடைந்தார். அதுபோழ்து மக்கள் எழுப்பிய ஆரவாரம் மணிவிழாத் தலைவருள்ளிட்ட அனைவர் உள்ளத்தையும் இன்பக் கடலில் ஆழச்செய்தது. கோவைச் செல்வம் திவான் பகதூர் C. S. இரத்தினசபாபதி முதலியார் தலைமை

யேற்றார். திரு. வி. கலியாணசுந்தரனார் இயற்றிய பாடல்களில் ஒன்றை அப்பொழுது இசைவாணர் விசாகநம்பியார் மனம் உருகப் பாடினார். திருவாவடுதுறை மடத்துத் தம்பிரானார் அளித்த பீதாம்பரத்தைத் திரு. வி. க. அன்போடு ஏற்றுக்கொண்டார். ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார், திரு. C. ராஜகோபாலாச்சாரியார், நகரமேயர் T. தாதுலிங்க முதலியார், திவான்பகதூர் T. M. நாராயணசாமிப் பிள்ளை, K. M. பாலசுப்பிரமணியம் முதலியோர் திரு. வி. க.வின் சொல்வன்மை, எழுதும் திறம், பாக்கள் யாக்கும் பெற்றி முதலியவற்றைப் பற்றியும், தொழிலாளர் முன்னேற்றத்திற்கும், தேச விடுதலைக்கும், சமரச வளர்ச்சிக்கும், பெண்ணுரிமைக்கும் அவர் இடையீடின்றிப் பயன் கருதாது செய்த சேவையைப் பற்றியும், அவர்தம் தூய எளிய வாழ்வைப் பற்றியும் பாராட்டிப் பேசினர். வெளியூர்களிலிருந்தும் நூற்றுக்கணக்கானவர் மணிவிழாவிற்கென வந்திருந்தனர். இறுதியில் திரு. வி. க. அனைவர்க்கும் நன்றி கூறுமுகத்தால், தம் வாழ்க்கையிற் சந்தித்த பெரியார் குணநலன்களைப்பற்றியும், அவர்தம் உறவால் தாம் பெற்ற நலன்களைப்பற்றியும் சுருக்கமாகக் கூறினார். பின்னும் மக்கள் வீறிட்டெழுந்து, நாட்டின் நலங்கருதி உழைத்தல் வேண்டுமென்றும், பொதுநலச் சேவை இந்நாள் பெரிதும் வேண்டற்பாலதென்றும் கூறினார். கலைக்கடல் மீனாட்சிசுந்தரனார் வந்தனோபசாரம் கூறிய பின்பு கூட்டம் கலைந்தது. இவ்விழா திரு. வி. க. மணிவிழாவாயில்லை. மக்கள் உணர்ச்சி விழாவாய் - அன்பு

விழாவாய் - காதல் விழாவாய் - தெய்வ விழாவாய் - இருந்தது.

இரண்டாம் நாள் :

26-8-'43 வியாழன் மாலை 6 மணி

மாதர் திலகம் பண்டிதை S. கிருஷ்ணவேணி அம்மையார் தலைமையில் திருமதி E. T. ராஜேஸ்வரி அம்மையார் 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள?' என்னும் பொருள்பற்றி ஒரு பேருரை நிகழ்த்தினர். இன்று ஆடவர் கூட்டத்தினும் பெண்கள் கூட்டமே மிக்கிருந்தது. கல்லூரி மாணவிகள் பெருந்திரளாகக் கூடிக் கூட்டத்தைச் சிறப்பித்தார்கள். இடையில் திரு. வி. க. தொழிலாளர் அழைப்பிற்கு இணங்கி, அங்கிருந்து புறப்பட்டுத் தொழிலாளர் கூட்டத்தை அடைந்து, அவர்கள் அளித்த வாழ்த்துப் பத்திரத்தோடு திரும்பினார். பெண்கள் காட்டிய உற்சாகத்தால் திரு. வி. க. உள்ளத்தில் என்றும் நிலவி நிற்கும் பெண் தெய்வக் காட்சி ஒரு பேருரையாக மாறிற்று. திருமதி கிருஷ்ணவேணி அம்மையார் அன்று திரு. வி. க.வின் உயரிய பண்புகளையும் சேவையையும் முறைப்படுத்திப் பேசிய நிலையினை வியவாதார் இல்லை. அவர்தம் வீர உணவை உட்கொண்டு அன்பர் வீடு சேர்ந்தனர்.

மூன்றாம் நாள் :

27-8-'43 வெள்ளி மாலை 6 மணி

திரு. மயிலை K. பாலசுப்பிரமணிய ஐயர், B. A., B. L., தலைமையில் வித்துவான் - மு. வரதராசனுர், B. O. L. 'வாழ்க்கைக் கலை' என்னும் பொருள்பற்றிப்

பேசினர். திரு. வி. க. வின் வாழ்வு கலைவாழ்வு என்பதைத் திறம்பட அவையினர்க்கு எடுத்துக் காட்டினர். பல சமூகங்கள் வாழ்த்துப் பத்திரங்கள் படித்தளித்தன. வெளியூர்களிலிருந்து வந்திருந்த பத்திரங்களும் செய்திகளும் கூட்டத்தில் படிக்கப்பெற்றன. இறுதியில் திரு. வி. க. 'போற்றலைக் கேட்டுக்கொண்டிருக்க இயலாத நிலையிலிருந்த என்னை அன்பர்கள் எழுதிய தமிழ், தமிழின்பத்தில் தோயுமாறு செய்தது' என்று கூறினர்; அனைவர்க்கும் தமது நன்றியறிதலைத் தெரிவித்தார்.

நான்காம் நாள் :

29-8-'43 ஞாயிறு மாலை 5 மணி

திரு. ஸி. ஆர். ஸ்ரீநிவாசன், B. A., தலைமையில் திரு. A. S. ஞானசம்பந்தம், 'வீரர் வழிபாடு' என்னும் பொருள்பற்றி ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினர். அவர் கலைஞரும், கவிஞரும், ஆன்ம ஞானியரும், புலவரும் வீரரே என்றும், வீரரை வழிபட்டாலன்றி உலகம் உய்தி பெருதென்றும், அவ்வீரருள் திரு. வி. க.வும் ஒருவர் என்றும் கூறினர். அவர்தம் வீர உரையில் அவையினர் ஆழ்ந்து நின்றனர்.

பிறகு திரு. மீனட்சிசுந்தரனர் தினத்தாள்களிலும், வாரத் தாள்களிலும், மாத வெளியீடுகளிலும், பிறவற்றிலும் வெளிவந்த அரிய செய்திகளாம் நினைவு மலர்களை மணிவிழாத் தலைவர்க்குச் சூட்டினர். பின்னர் வித்துவான் இலக்குமி தாயாரம்மையார் தம் மாணவியரைக்கொண்டு திரு. வி. க. யாத்த செய்யுட்களை

அபினயத்தில் அவையினர்க்கு விளக்குவித்தார். சாது அச்சுக்கூடத் தொழிலாளரும், ஜைன சங்கத்தினரும் வாழ்த்துப் பத்திரங்கள் திரு. வி. க.வுக்குப் படித் தளித்தனர்.

மணிவிழாத் தலைவர் இறுதியில் அனைவர்க்கும் தமது நன்றியைத் தெரிவித்தார்.

ஐந்தாம் நாள் :

30-8-'43 திங்கள் மாலை 6 மணி

சென்னைப் பிஷப் மைக்கல் ஹாலிஸ், M.A., B.D., 'Mother Tongue in Education and Life' என்னும் பொருள்பற்றி ஒரு பேருரை ஆற்றினர். பின்னர் மீனுட்சிசுந்தரனர் நன்றியுரைக்குப்பின் கூட்டம் கலைந்தது. சிந்தாதிரிப்பேட்டை உயர்கலாசாலையில் கூடிய கூட்டங்களின் சிறப்பியல்களை இதுவரையிலும் நாம் கண்டோம். இனிச் சென்னைக் கல்லூரி மாணவர் கொண்டாடிய மணிவிழாச் சிறப்பைக் காண்போம் :

மாணவர் நாள் :

28-8-'43 சனிக்கிழமை மாலை 5 மணி

சென்னைக் கல்லூரி மாணவர்கள் திரு. வி. கலியாணசுந்தரனர் மணி விழாவைக் கோக்கலே மண்டபத்தில் கொண்டாடினர்கள். மாணவர்கள் அன்று கூட்டத்தை நடத்திய முறை, வந்திருந்த பெரியோர் அனைவர்க்கும் வியப்பையளித்தது. பெரியவர்களால் கூட்டப்பெறுங் கூட்டங்களில் காணப்பெருத அமைதி

அக்கூட்டத்தில் காணப்பெற்றது. மாணவிகளும் மாணவர்களும் அணிபெற நின்று பெண்டிரையும் ஆடவரையும் இன்முறுவல் காட்டி வரவேற்றதும், அமைதியைக் காத்து வைத்ததும் போற்றற்குரியவையாகும். பச்சையப்பன் கல்லூரி மாணவர் திரு. வேங்கடசாமி அனைவர்க்கும் வரவேற்பு வழங்கினர்; அன்பர் மீனட்சிசுந்தரனுரைத் தலைமையேற்றுக் கூட்டத்தை நடத்திவைக்குமாறு வேண்டினர். மாணவர்களின் அன்புப் பொங்கல் - உணர்ச்சி ஊற்று - ரோஜா மாலைகளாகவும் பூச்செண்டுகளாகவும் வெளிவந்தன. அன்று கலியாணசுந்தரனர்க்குச் சூட்டிய மாலை அவர் உருவத்தையே மறைத்துவிட்டது. அது ஸ்ரீபெரும்பூதூர் உடையவர் சாத்துமுறையில் சாத்தும் மாலையை ஒத்திருந்தது. மாணவர்கள் அன்று காட்டிய உற்சாகம் வயதானவர்களையும் தங்களை இளைஞர்கள் என்று சில மணி நேரம் கருதுமாறு செய்துவிட்டது. மாணவர்களில் சிலர் திரு. வி. க. எழுதிய பாடல்களை இசைக் கலையின் துணைகொண்டு பாடி, அவையினர்க்கு இன்பம் ஊட்டினர். வேறு சிலர் திரு. வி. க.வைப் போலவே அவர் உரைகளை மனப்பாடம் செய்துகொண்டு பேசினர். மற்றும் சிலர் அவர்மீது தாம் இயற்றிய பாக்களைப் பாடினர். மாணவர்கள் வேண்டுகோட்கிணங்கிச் சென்னைச் சர்வகலாசாலை விரிவுரையாளர்-செஞ்சொற்புலவர் சேதுப் பிள்ளை ஒரு விரிவுரை ஆற்றினர். அவ்வுரையில் அவர் மாணவர்களை, அந்நாளை நன்னுளாகக்கொண்டு ஓர் உறுதியை மேற்கொள்ளுமாறு தூண்டினர். அதாவது, ஒவ்வொருவரும் தத்தம் நண்பர்க்கோ - தாய் தந்தையர்க்கோ கடிதம் எழுதுகின்ற காலத்திலும், நண்பர்களோடும்

பிறரோடும் உரையாடுகின்ற காலத்திலும் தமிழ் மொழியன்றி வேறு மொழியை உபயோகித்தல் கூடா தென்பதே. பின்னும் அவர் கல்லூரி மாணவர்கள் திரு. வி. க. உரைநடையில் - பேச்சில் - எழுத்தில் ஈடுபட்டு இருத்தலை வியந்து கொண்டாடினர்.

அவர்க்குப் பின் பண்டிதை S. கிருஷ்ணவேணி அம்மையார் திரு. சேதுப் பிள்ளையின் உரையைத் தழுவி ஓர் அறவுரை வழங்கினர்.

திரு. வி. க. அனைவர்க்கும் நன்றி கூறுமுகத்தால் ஆற்றிய பேருரை - பெருமுழக்கம், சுமார் இருபது ஆண்டுகளுக்குமுன் அவர் ஆற்றிவந்த பேருரைகளை எண்ணுமாறு செய்தது. மாணவர் அன்று காட்டிய ஊக்கம் அவரை வாலிபராகச் செய்ததுபோலும்!

அவர் மாணவர்களை நோக்கி, "அன்பர்களே, புகழுரைகளைக் கேட்பதற்கு என் மனம் இசைவதில்லை. இன்று, அன்பால் - இனிய தமிழால் - இசையால் நீங்கள் என்னை மயக்கிவிட்டீர்கள். இம்மண்டபமும் என் உள்ளக்கிளர்ச்சிக்கு ஊக்கம் அளிக்கிறது. நான் முதன்முதல் அரசியற் கன்னிப்பேச்சு நிகழ்த்திய இடம் இதுவேயாகும். எனக்கு அரசியல் உணர்ச்சியை ஊட்டிய அன்னிபெசண்டு அம்மையாரும், மணி ஐயரும் இதோ எனக்கு முன்னே காட்சியளிக்கின்றனர். என்னுடைய வேறு பல அரசியற்றலைவர்களின் ஆவிகளும் இங்கே உலவுகின்றன. இப் பேற்றினை யான் வேறு எம்மண்டபத்தில் பெறுவேன்! என் உள்ளத்தே இன்று இன்பம் பொங்கி எழுகின்றது. * * * * மாணவர்களே! எல்லாம் நன்மையின் பொருட்டே நிகழ்கின்றன. தீமை செய்வார்க்கும் நன்மை செய்ய எழுங்கள். இனி வருங்கால இந்தியா

வுக்கு நீங்கள் உங்களைத் தகுதியுடையவர்கள் ஆக்கிக் கொள்ளுங்கள். இளஞ்சிங்கங்களே, இந்தியாவின் விடுதலை உங்களிடத்திலேதான் இருக்கிறது * * * * ,, எனக்கூறி அமர்ந்தார்.

தலைமை வகித்த திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, M. A., B. L., M. O. L., மாணவர்கள் ஊக்கத்தால் உந்தப்பெற்று வீரமுழக்கம் செய்தார்; தற்கால நாட்டு நிலையை எடுத்துக்காட்டிப் பல அறவுரை கூறினார். இவர் உரை தமிழ்ப் பாணங்களாக யாண்டும் வீறிட்டுச் சென்றன எனக் கூறல் மிகையாகாது.

### சென்னை நகராண்மைக் கழகப் பாராட்டு
### 30-8-'43 திங்கள் மாலை 5 மணி

கௌன்சிலர்களோடும் சாரணர்களோடும் சென்னை நகராண்மைக் கழகக் கமிஷனரும், மேயரும் அணிபெற நின்று, மணி விழாத் தலைவர் திரு. வி. கலியாணசுந்தரனாரை நகராண்மைக் கழகத்திற்குள் சரிகை மாலை சூட்டி வரவேற்ற காட்சி, தமிழர் அனைவர்க்கும் இன்பமூட்டுவதொன்றாகும். மேல் நாட்டு முறைப்படி 'கை குலுக்கல்' முதலிய அன்பு வரவேற்பு நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. மேயரும், கமிஷனரும், திரு. வி. க.வும் மண்டபத்தை நண்ணியதும் ஆண்டுக் குழுமியிருந்தார் அனைவரும் எழுந்து நின்று காட்டிய உவகைக் காட்சி, எழுத்திற்கு அடங்காது. மேயர்க்கும் கமிஷனருக்கும் நடுவே திரு. வி. க. வீற்றிருந்த காட்சி, தமிழன்னை கொலுவீற்றிருப்பை உணர்த்திற்று. மேயர் பாராட்டுப் பத்திரத்தைப் படித்து, சித்திர வேலை அமைந்த ஒரு பேழை

யுள் அதனை வைத்துத் திரு. வி. க.வுக்கு அளித்துப் பூமாலை சூட்டினார். நம் மணிவிழாத் தலைவர் பத்திரப் பேழையை ஏற்று, எதிர்கால இந்தியா பெறவேண்டும் நலங்களைப்பற்றி அரிய உரை பகன்று, கழகத்தார்க்கும் அவையினர்க்கும் நன்றி கூறி அமர்ந்தார்.

நகராண்மைக் கழகம் உள்ளூர்வாசியைப் பாராட்டித் தமிழில் பத்திரம் எழுதி அளித்தது கழகச் சரித்திரத்தில் புதிய நிகழ்ச்சியாகும்.

தனிப்பட்ட முறையில் பல கழகங்கள் இம்மணி விழாவைக் கொண்டாடின ; கொண்டாடுகின்றன.

மணிவிழாத் தலைவர் வாழ்க! தமிழ் வாழ்க! தமிழ் வெல்க!

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தரனார்

# இயற்றிய நூல்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| பெரியபுராணம்—அரும்பத விசேட ஆராய்ச்சிக் குறிப்புரையும் வசனமும் ... ... | 8 | 0 |
| திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள் | (அச்சில்) | |
| தமிழ்ச்சோலை அல்லது கட்டுரைத் திரட்டு | (அச்சில்) | |
| மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் ... | 3 | 8 |
| பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை | 3 | 0 |
| திருக்குறள் விரிவுரை : (முதற்பகுதி-பாயிரம்-நான்கதிகாரம்) (இரண்டாம் பகுதி அறத்துப்பால் - ஆறு அதிகாரம்) ... | 5 | 0 |
| இந்தியாவும் விடுதலையும் ... ... | 3 | 0 |
| தமிழ்த் தென்றல் ... ... | 3 | 0 |
| உள்ளொளி ... ... | 2 | 0 |
| நாயன்மார் வரலாறு ... ... | 2 | 0 |
| முருகன் அல்லது அழகு ... ... | 1 | 12 |
| இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம் ... | 1 | 0 |
| சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து ... | 1 | 0 |
| முடியா? காதலா? சீர்திருத்தமா? ... ... | 1 | 0 |
| பொதுமை வேட்டல் ... ... | 0 | 10 |
| என்கடன் பணிசெய்து கிடப்பதே ... ... | 0 | 8 |
| சைவத்தின் சமரசம் ... ... | 0 | 10 |
| சைவத் திறவு ... ... | 0 | 8 |
| சமரச சன்மார்க்க போதம் ... | (அச்சில்) | |
| சமரச சன்மார்க்கத் திறவு ... ... | 0 | 4 |
| தமிழ் நாடும் நம்மாழ்வாரும் ... ... | 0 | 8 |
| இமயமலை அல்லது தியானம் ... ... | 0 | 8 |
| காரைக்காலம்மையார் திருமுறை—அரும்பதக் குறிப்புரையுடன் ... ... | 0 | 6 |
| சித்தமார்க்கம் ... ... | 0 | 6 |